ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# ஸ்ரீமத் பகவத் கீதை

(இரண்டாம் ஷட்கம்)
(7 முதல் 12 அத்யாயங்கள்)


நியாய வேதாந்த வித்வாந்
ஸ்ரீ உ. வே. காரப்பங்காடு வேங்கடாசாரியஸ்வாமியின்
(உபந்யாஸத் தொகுப்பு)

தொகுப்பாசிரியர் :
ஸி. ஆர். ஸ்ரீனிவாஸய்யங்கார்
42, மேல உத்தர வீதி, ஸ்ரீரங்கம்
திருச்சி - 6.

செந்தமிழ் வேதியர் :
ஸ்ரீ உ. வே. குமாரவாடி சே. ராமாநுஜாசாரியார்
பரிசோதித்து பதிப்பித்தது



அறநெறி பதிப்பகம் :
29/8 அபிரகாம் முதலி தெரு, மயிலாப்பூர்
சென்னை - 4

முதல் பதிப்பு 1978 மார்ச்

காரப்பங்காடு ஸ்வாமியின் உபந்யாஸத் தொகுப்புகளாக இதுவரை வெளிவந்துள்ள நூல்கள் :—

1. கீதை அமுதம்
2. ஸ்ரீ ராமாயணமும் சரணாகதியும்
3. சீதா சரிதம்
4. திருப்பாவை
5. ஸ்ரீமத் பகவத் கீதை



# ஸ்ரீமத் பகவத் கீதை

(இரண்டு, மூன்று ஷட்கங்கள்)

விலை ரூ. 10 - 50

குரு அச்சகம் 46 இருசப்ப கிராமணி தெரு திருவல்லிக்கேணி சென்னை 5

ஸ்ரீ உ. வே காரப்பங்காடு

## வேங்கடாசார்ய ஸ்வாமி



காரப்பங்காடு வித்வத் பரம்பரையில் 1906-ல் அவதரித்த ஸ்ரீ உ. வே. வேங்கடாசார்ய ஸ்வாமி, தம் மதாமஹர், ஸ்வீகார பிதா மஹாவித்வான் சிங்கப்பெருமாள் ஸ்வாமியிடம் வேதாந்த வித்யைகளை அதிகரித்தவர். ஸ்ரீரங்க நாராயண ஜீயராக எழுந்தருளியிருந்து நாடு புகழும் பல திவ்யதேச கைங்கர்யங்கள் புரிந்த வித்வான் தேசிக வரதாசார்ய ஸ்வாமியிடம் அர்த்த விசேஷங்களை நன்கு அறிந்தவர்.

சென்னையில் முப்பது ஆண்டுகளுக்குமேல் நாள் தவருது பல இடங்களிலும் பிரவசனப்பணிபுரிந்து பல்லாயிரவர் ஆத்ம க்ஷேமத்துக்கு வழிவகுத்த நல்லாசிரியர். மறைவு 1971.

# அணிந்துரை

---

## ஸ்ரீகாஞ்சி மஹாவித்வான் மஹாமஹிமோபாத்யாய
## ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்காராசார்ய ஸ்வாமி
## அருளியது

உபயவேதாந்த வித்யாநிதியாம் ஸ்ரீ பாஷ்ய பகவத்விஷய ரஹஸ்யாதி ப்ரவசன ப்ரவீணராய் ஏறக்குறைய முப்பதாண்டுகள் சென்னையில் எழுந்தருளியிருந்து பெரும் புகழ்பெற்ற ஸ்ரீமதுபயவே. காரப்பங்காடு வேங்கடாசார்யஸ்வாமி பகவத்கீதா மஹார்த்தோபந்யாஸத்தில் தனிச் சிறப்புவாய்ந்தவரென்பதை நாடும் நகரமும் நன்கறியும் ஸ்ரீ ஸ்வாமி உபந்யாஸங்கள் செய்தருளும் ஸமயங்களில், பிற்பாடு அநுபவத்திற்காகச் சில சீடர்கள் ஒருவாறு ஏடுபடுத்திக் கொள்ளும்படியை நாம் நேரில் கண்டிருக்கிறேம். அந்த வகையில் ஸ்ரீ உ. வே. மயிலை. C. R. ஸ்ரீநிவாஸ அய்யங்கார் ஸ்வாமி தொகுத்தெழுதி வைத்தவுரை லோகோபகாரார்த்தமாக வெளிவரத்தொடங்கி யிருக்கின்றது. இதில் தற்போது முதல் ஷட்கம் [முதல் ஆறு அத்யாயங்கள்] 154 பக்கங்கள் கொண்ட முதல் ஸம்புடமாக வெளிவந்துள்ளது. உரைநடையைப்பற்றி நாம் விசேஷித்துத் தெரிவிக்க வேணுமோ? எளிய தெளிய நடை இதனினும் வேறு காண்பதரிது. மூல சுலோகங்கள் தேவநாகரி லிபியிலும், தமிழ் லிபியிலுமுள்ள பதவுரையும் விசேஷவுரையும் மிக அற்புதமாக வெளிவந்துள்ளது. இத்தகைய பதிப்பு இதுகாறும் வெளிவந்திலது என்னலாம். இரண்டு மூன்று ஷட்கங்களும் க்ரமேண விரைவில் வெளிவருமென்றறிகிறேம். ஸ்ரீமதுபயவே. செந்தமிழ்வேதியர் குமாரவாடி S ராமாநுஜாசாரியர் பரிசோதித்துப் பதிப்பித்த இப்புத்தகத்தின் அமைதியைப் பற்றி நாம் எழுதவேண்டியதுமுண்டோ? மிக விரும்பத்தக்க முறையில் பதிப்பேறியுள்ளது. இப்புத்தகம் விலைக்குக் கிடைக்குமிடங்கள்—(1) ஸ்ரீமான் C. R. ஸ்ரீநிவாஸய்யங்கார், 42. மேல் உத்தர வீதி, ஸ்ரீரங்கம். திருச்சி–6. (2) ஸ்ரீ உ. வே. குமாரவாடி ஸ்வாமி 29/8, ஆபிரகாம் முதலி தெரு, மயிலாப்பூர், மதராஸ்–4 ஆஸ்திக பக்தர்களனைவரிடமும் இருக்கத் தக்க புத்தகமிது.

# முன்னுரை

---

இன்றைய உலகில் மொழி, நாடு, இனம், மதம் போன்ற பல வேற்றுமைகளையும் கடந்து, மானிட இனத்தின் உளங்கவர்ந்த நூல்களில் தலைசிறந்து விளங்குகிறது பகவத் கீதை.

மனிதனுக்கு நல் அறிவைப் புகட்டி மனத்தில் தெளிவைப் பிறப்பித்து, மேலான மோக்ஷ இன்பத்துக்கு வழிகாட்டும் நூல் இது. தத்துவம், ஹிதம், புருஷார்த்தம் என்ற மூன்றிலும் இதற்கு நிகரான நூல் வேறு இல்லை எனலாம்.

அவரவர் தமதமது அறிவறி வகைவகை இதற்குப் பொருள் சொல்லிப் போற்றி ஏற்றுக்கொள்ளும் வகையில் இதற்கு ஏற்றமுண்டு. எனினும், எம்பெருமான் திருவுளக் கருத்தை எம்பெருமானாரின் விரிவுரையில் பொருந்த அனுபவிப்பதுபோல் மற்றெங்கும் காண இயலாது. ராமாநுஜன் திருவுளத்தை ராமாநுஜரே அறிவர் என்பர் ஸம்பிரதாயம் வல்லார். பலராமன் தம்பி கிருஷ்ணன் ராமாநுஜன்; அண்ணல் திருவுளத்தை ஆயிரம் நாப்படைத்த ஆதிசேஷனே அருகிருந்து அறிந்து வெளியிட வல்லவர் என்பதில் தட்டொன்றுமில்லை.

வைதிகர் போற்றும் பிரஸ்தான த்ரயத்தில், பகவத் கீதைக்கு ஸ்ரீ ராமாநுஜ பாஷ்யம் அமைந்திருக்கும் அழகை, வேதாந்த தேசிகனின் தாத்பர்ய சந்த்ரிகை கொண்டு நன்கு தெளியலாம்

சமீப காலத்தில் பரம ஸாத்விகமூர்த்தியாய் ஞான அனுட்டானங்களால் சிறந்து தெருள் தருமாதேசிகனும் விளங்கிய ஸ்ரீ உ. வே. காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமியின் திருவாக்கிலிருந்து, சென்னை வாசிகள் கீதை அமுதத்தை ரஸம் குன்றாமல் பருகும் பாக்கியம் பெற்றனர். அவ்வமுதத் துளிகளை மாந்தும், அரிய பேற்றை பகவந்நிர்ஹேதுக க்ருபையால் அடியேனும் பெற்றேன். கொள்ளமாளா இன்ப வெள்ள

மான ஸ்ரீ காரப்பங்காடு ஸ்வாமியின் கீதா பிரவசனத்தை அனுபவிக்கும் பேறு, பின்னுளுர்க்கும் கிட்டவேணும் என்ற ஓர் நைப்பாசையினுல் உபந்யாஸங்களை ஏடுபத்தும் பணியில் அடியேன் சிறிய ஞானத்தன் ஈடுபடலானேன்.

கேட்டதை எழுதி, எழுதியவற்றை வாசித்து, போதுபோக்குவதாக அமைந்தது அடியேன் வாழ்க்கைப் பயணம்........

அடியேன் பெற்றதை மற்றவரும் பெறவேண்டும் என்ற எண்ணத்தின் மேலீட்டிஞல் உபந்யாஸக் குறிப்புகளை அச்சுப் பதிப்புகளாக மாற்ற விரும்பினேன். அந்த விருப்பத்தை, ஆப்தரான பல ஆஸ்திக மஹான்கள் உதவியுடன் நிறைவேற்ற முயன்றேன்; உதவிய பலருக்கும் என்றும் என் நன்றி!

குறிப்பாக ஸ்ரீ உ வே காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமியை நிழல் போலத் தொடர்ந்து, ஸ்வாமியின் உபந்யாஸங்களைக் கேட்டு அறிந்து பரம அனுக்கரான ஸ்ரீ உ. வே. குமாரவாடி ராமாநுஜாசாரியர் அடியேனுக்கு உற்ற நண்பரும் உறவினருமாவார். காரப்பங்காடு ஸ்வாமியிஞல் தம் 'புத்திரன்' என்றே அபிமானிக்கப் பெற்ற அவர், அடியேனது குறிப்புக்களைச் சோதித்து, பதிப்பிக்க முன்வந்ததற்கு அடியேன் தலையல்லால் கைம்மாறு இலன்.

இதில் காணும் உயர்ந்த கருத்துக்கள் ஸ்வாமியின் அரிய உபந்யாஸத் திறனுக்கு எடுத்துக் காட்டு; இதில் உள்ள குறைபாடுகள் அடியேன் பொறுப்பு. கியாதி, லாப, பூஜைகளுக்காக செய்வதொன்று அல்ல; ஆகையால் பிழை பொறுத்து, ஆஸ்திகப் பெருமக்கள் இதனை ஆதரிப்பர் என்று நம்புகிறேன்.

ஸி. ஆர். ஸ்ரீனிவாஸன்

# ப தி ப் பு ரை

## ஸ்ரீ. ஸி. ஆர். எஸ். ஸ்வாமியைப் பற்றி



இப்போது ஸ்ரீரங்க வாசியாக வாழ்ந்து வரும் ஸ்ரீ ஸி. ஆர். ஸ்ரீனிவாஸ அய்யங்கார் தம்பதிகள் பூர்வம் செங்கற்பட்டு ஜில்லா, குமாரவாடி கிராமத்தைச் சேர்ந்தவர்கள். மயிலாப்பூர் பேயாழ்வார் ஸ்ரீ கேசவன் ஸந்நிதியில் அவர்களது முன்னோர் மூன்று தலைமுறை காலம் அத்யாபக தீர்த்தம் பெற்று, ஸந்நிதி, மண்டப உற்சவாதி கைங்கர்யங்கள் செய்தவர்கள்.

ஸ்ரீ உ. வே. காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமியிடம் அநந்யமான ஈடுபாடு கொண்டு, ஸ்வாமியின் காலக்ஷேப கோஷ்டியில் இருவருமாய் பல்லாண்டுக் காலம் அந்வயித்தவர்கள். ஸ்வாமியின் உபந்யாஸங்களை இடைவிடாது கேட்டும், எழுதியும் பிறகு வாசித்தும் பொழுது போக்கி வந்துள்ளனர். அடியேனை ஸ்ரீ ஸ்வாமியின் திருவடிவாரத்தில் கொண்டு சேர்த்த பெருமையும் அத்தம்பதியருக்கே உண்டு.

ஆசார்யனுக்கு சிஷ்யன் செய்யத்தக்க சிறந்த தொண்டு ஸ்வாமியின் புகழ் என்றும் பூவுலகில் நின்று நிலவச் செய்யும் வகையில் அவரது நூல்களை வெளியிடுவதும், உலகோர் அந்நூல்களால் பயனடையச் செய்வதும் ஆகும்

இவ்விரு செயல்களையும் ஸ்ரீ உ. வே. ஸி. ஆர். ஸ்ரீனிவாஸ அய்யங்கார் ஸ்வாமி செவ்வனே நிறைவேற்றியுள்ளார். இப்பணியில் தாம் ஈடுபட்டதோடு, அடியேனையும் ஈடுபடுத்தியதை நினைந்து அவர் திறத்து என்றும் நன்றியுடையேனாகிறேன்.

—சே. ராமாநுஜன்

ஸ்ரீ உ. வே. காரப்பங்காடு வேங்கடாசார்ய

ஸ்வாமியைக் குறித்து

ஸ்ரீமத் அஹோபிலம்

# ஸ்ரீ அழகியசிங்கர் அனுக்ரஹத்தின்

## சில பகுதி —(1966)



சாந்தி குணம் பெற்றுத் திகழும் சான்றோர்களுள் தற்போது தலைசிறந்து விளங்குபவர் ஸ்ரீ உ. வே. ந்யாய வேதாந்த வித்வான் **காரப்பங்காடு வேங்கடாசார்ய** ஸ்வாமி ஆவர். ந்யாய சாஸ்த்ரம் உபய வேதாந்தங்கள் இவை யாவற்றிலும் ஆழ்ந்த ஞானம் படைத்தவர். சிறந்த பண்டிதரான இந்த ஸ்வாமி மிகவும் சாந்தராய் விளங்குவது பொன் மலர் மணம் பெற்றதுபோலாகும்.

மக்கள் விரும்புவதற்காக கண்ட விஷயங்களையும் கலந்து சொல்கிறார்கள் தற்காலத்தில் உள்ளவர்கள். கலப்படத்தால் உண்மைப் பெருமை மறைந்தே போய்விடுகிறது. இந்த சிக்கலான நிலையிலும் அரும் பெரும் தத்வார்த்தங்களையும் அப்பட்டமாக பூர்வாசார்யர்களின் க்ரந்தங் களிலே உள்ளவாறே உபந்யஸித்துப் பல்லாயிரக்கணக்கான பெருமக்களின் உள்ளங்களைக் கொள்ளை கொண்ட மஹான் இவர் என்றால் அது மிகையாகாது.

கேட்பவர்களின் உள்ளங்களில் அமைதியைக் கொடுக்கும் சொற்கள் பாமரர்களும் தொடர்ந்து புரிந்துகொள்ளப் பாங்காக நிறுத்திப் பேசும் தன்னேற்றம், இவைகளுக்கு ஏற்ப அமைந்துள்ள ஆக்ருதியின் அழகு, பொது மனப்பான்மை இவை யாவும் ஸ்வாமிக்கே அமைந்துள்ள தனிச் சிறப்புகள்.




சென்னை உயர்நீதிமன்ற முன்னாள் நீதிபதி

திரு. N. கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்களால்

1978 ஏப்ரல் 2-ந்தேதி வெளியிடப்பட்டது.

ஸ்ரீ:

ஸ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீ மத் பகவத் கீதை

## தியான சுலோகங்கள்

ஓம் பார்த்தாய ப்ரதிபோதிதாம் பகவதா
நாராயணேன ஸ்வயம்
வ்யாஸேன க்ரதிதாம் புராணமுனினு
மத்யே மஹாபாரதம் ।
அத்வைதாம்ருத வர்ஷிணீம் பகவதீ-
மஷ்டாதசாத்த்யாயயினீ–
மம்ப த்வானுஸந்ததாமி பகவத்–
கீதே பவத்வேஷிணீம  1

நமோऽஸ்து தே வ்யாஸ விசாலபுத்தே
புல்லாரவிந்தாயதபத்ர-நேத்ர ।
யேன த்வயா பாரததைல-பூர்ண :
ப்ரஜ்வாலிதோ ஜ்ஞானமய–ப்ரதீப ।  2

ப்ரபன்ன-பாரிஜாதாய தோத்ர-வேத்ரைக-பாணயே ।
ஜ்ஞானமுத்ராய க்ருஷ்ணாய கீதாம்ருத-துஹே நம :  3

ஸர்வோபநிஷதோ காவோ தோக்தா கோபால-நந்தன : ।
பார்த்தோ வத்ஸ : ஸுதீர்ப்-போக்தா துக்தம் கீதாம்ருதம்
மஹத்  4

வஸுதேவஸுதம் தேவம் கம்ஸ-சாணூர-மர்த்தனம் ।
தேவகீ-பரமானந்தம் க்ருஷ்ணம் வந்தே ஜகத்குரும்  5

——

## ॥ सप्तमोऽध्यायः ॥

श्रीभगवानुवाच –

मय्यासक्तमनाः पार्थ योगं युञ्जन्मदाश्रयः ।
असंशयं समग्रं मां यथा ज्ञास्यसि तच्छृणु ॥ १ ॥

ज्ञानं तेऽहं सविज्ञानमिदं वक्ष्याम्यशेषतः ।
यज्ज्ञात्वा नेह भूयोऽन्यज्ज्ञातव्यमवशिष्यते ॥ २ ॥

मनुष्याणां सहस्रेषु कश्चिद्यतति सिद्धये ।
यततामपि सिद्धानां कश्चिन्मां वेत्ति तत्त्वतः ॥ ३ ॥

भूमिरापोऽनलो वायुः खं मनो बुद्धिरेव च ।
अहंकार इतीयं मे भिन्ना प्रकृतिरष्टधा ॥ ४ ॥

अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम् ।
जीवभूतां महाबाहो ययेदं धार्यते जगत् ॥ ५ ॥

एतद्योनीनि भूतानि सर्वाणीत्युपधारय ।
अहं कृत्स्नस्य जगतः प्रभवः प्रलयस्तथा ॥ ६ ॥

मत्तः परतरं नान्यत्किंचिदस्ति धनंजय ।
मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव ॥ ७ ॥

रसोऽहमप्सु कौन्तेय प्रभास्मि शशिसूर्ययोः ।
प्रणवः सर्ववेदेषु शब्दः खे पौरुषं नृषु ॥ ८ ॥

पुण्यो गन्धः पृथिव्यां च तेजश्चास्मि विभावसौ ।
जीवनं सर्वभूतेषु तपश्चास्मि तपस्विषु ॥ ९ ॥

बीजं मां सर्वभूतानां विद्धि पार्थ सनातनम् ।
बुद्धिर्बुद्धिमतामस्मि तेजस्तेजस्विनामहम् ॥ १० ॥

बलं बलवतां चाहं कामरागविवर्जितम् ।
धर्माविरुद्धो भूतेषु कामोऽस्मि भरतर्षभ ॥ ११ ॥

ये चैव सात्त्विका भावा राजसास्तामसाश्च ये ।
मत्त एवेति तान्विद्धि न त्वहं तेषु ते मयि ॥ १२ ॥

त्रिभिर्गुणमयैर्भावैरेभिः सर्वमिदं जगत् ।
मोहितं नाभिजानाति मामेभ्यः परमव्ययम् ॥ १३ ॥

दैवी ह्येषा गुणमयी मम माया दुरत्यया ।
मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते ॥ १४ ॥

न मां दुष्कृतिनो मूढाः प्रपद्यन्ते नराधमाः ।
माययापहृतज्ञाना आसुरं भावमाश्रिताः ॥ १५ ॥

चतुर्विधा भजन्ते मां जनाः सुकृतिनोऽर्जुन ।
आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ ॥ १६ ॥

तेषां ज्ञानी नित्ययुक्त एकभक्तिर्विशिष्यते ।
प्रियो हि ज्ञानिनोऽत्यर्थमहं स च मम प्रियः ॥ १७ ॥

उदाराः सर्व एवैते ज्ञानी त्वात्मैव मे मतम् ।
आस्थितः स हि युक्तात्मा मामेवानुत्तमां गतिम् ॥ १८ ॥

बहूनां जन्मनामन्ते ज्ञानवान्मां प्रपद्यते ।
वासुदेवः सर्वमिति स महात्मा सुदुर्लभः ॥ १९ ॥

कामैस्तैस्तैर्हृतज्ञानाः प्रपद्यन्तेऽन्यदेवताः ।
तं तं नियममास्थाय प्रकृत्या नियताः स्वया ॥ २० ॥

यो यो यां यां तनुं भक्तः श्रद्धयार्चितुमिच्छति ।
तस्य तस्याचलां श्रद्धां तामेव विदधाम्यहम् ॥ २१ ॥

स तया श्रद्धया युक्तस्तस्या राधनमीहते ।
लभते च ततः कामान्मयैव विहितान्हि तान् ॥ २२ ॥

अन्तवत्तु फलं तेषां तद्भवत्यल्पमेधसाम् ।
देवान्देवयजो यान्ति मद्भक्ता यान्ति मामपि ॥ २३ ॥

अव्यक्तं व्यक्तिमापन्नं मन्यन्ते मामबुद्धयः ।
परं भावमजानन्तो ममाव्ययमनुत्तमम् ॥ २४ ॥

नाहं प्रकाशः सर्वस्य योगमायासमावृतः ।
मूढोऽयं नाभिजानाति लोको मामजमव्ययम् ॥ २५ ॥

वेदाहं समतीतानि वर्तमानानि चार्जुन ।
भविष्याणि च भूतानि मां तु वेद न कश्चन ॥ २६ ॥

इच्छाद्वेषसमुत्थेन द्वन्द्वमोहेन भारत ।
सर्वभूतानि संमोहं सर्गे यान्ति परंतप ॥ २७ ॥

येषां त्वन्तगतं पापं जनानां पुण्यकर्मणाम् ।
ते द्वन्द्वमोहनिर्मुक्ता भजन्ते मां दृढव्रताः ॥ २८ ॥

जरामरणमोक्षाय मामाश्रित्य यतन्ति ये ।
ते ब्रह्म तद्विदुः कृत्स्नमध्यात्मं कर्म चाखिलम् ॥ २९ ॥

साधिभूताधिदैवं मां साधियज्ञं च ये विदुः ।
प्रयाणकालेऽपि च मां ते विदुर्युक्तचेतसः ॥ ३० ॥

---

## ॥ अष्टमोऽध्यायः ॥

अर्जुन उवाच –

किं तद्ब्रह्म किमध्यात्मं किं कर्म पुरुषोत्तम ।
अधिभूतं च किं प्रोक्तमधिदैवं किमुच्यते ॥ १ ॥

अधियज्ञः कथं कोऽत्र देहेऽस्मिन्मधुसूदन ।
प्रयाणकाले च कथं ज्ञेयोऽसि नियतात्मभिः ॥ २ ॥

श्रीभगवानुवाच –

अक्षरं ब्रह्म परमं स्वभावोऽध्यात्ममुच्यते ।
भूतभावोद्भवकरो विसर्गः कर्मसंज्ञितः ॥ ३ ॥

अधिभूतं क्षरो भावः पुरुषश्चाधिदैवतम् ।
अधियज्ञोऽहमेवात्र देहे देहभृतां वर ॥ ४ ॥

अन्तकाले च मामेव स्मरन्मुक्त्वा कलेवरम् ।
यः प्रयाति स मद्भावं याति नास्त्यत्र संशयः ॥ ५ ॥

यं यं वापि स्मरन्भावं त्यजत्यन्ते कलेवरम् ।
तं तमेवैति कौन्तेय सदा तद्भावभावितः ॥ ६ ॥

तस्मात्सर्वेषु कालेषु मामनुस्मर युद्ध्य च ।
मय्यर्पितमनोबुद्धिर्मामेवैष्यस्यसंशयम् ॥ ७ ॥

अभ्यासयोगयुक्तेन चेतसा नान्यगामिना ।
परमं पुरुषं दिव्यं याति पार्थानुचिन्तयन् ॥ ८ ॥

कविं पुराणमनुशासितारमणोरणीयांसमनुस्मरेद्यः ।
सर्वस्य धातारमचिन्त्यरूपमादित्यवर्णं तमसः परस्तात् ॥ ९ ॥

प्रयाणकाले मनसाचलेन भक्त्या युक्तो योगबलेन चैव ।
भ्रुवोर्मध्ये प्राणमावेश्य सम्यक्स तं परं पुरुषमुपैति दिव्यम् ॥

यदक्षरं वेदविदो वदन्ति विशन्ति यद्यतयो वीतरागाः ।
यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति तत्ते पदं संग्रहेण प्रवक्ष्ये । ११ ॥

सर्वद्वाराणि संयम्य मनो हृदि निरुद्ध्य च ।
मूर्ध्न्याधायात्मनः प्राणमास्थितो योगधारणाम् ॥ १२ ॥

ओमित्येकाक्षरं ब्रह्म व्याहरन्मामनुस्मरन् ।
यः प्रयाति त्यजन्देहं स याति परमां गतिम् ॥ १३ ॥

अनन्यचेताः सततं यो मां स्मरति नित्यशः ।
तस्याहं सुलभः पार्थ नित्ययुक्तस्य योगिनः ॥ १४ ॥

मामुपेत्य पुनर्जन्म दुःखालयमशाश्वतम् ।
नाप्नुवन्ति महात्मानः संसिद्धिं परमां गताः ॥ १५ ॥

आब्रह्मभुवनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन ।
मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते ॥ १६ ॥

सहस्रयुगपर्यन्तमहर्यद्ब्रह्मणो विदुः ।
रात्रिं युगसहस्रान्तां तेऽहोरात्रविदो जनाः ॥ १७ ॥

अव्यक्ताद्व्यक्तयः सर्वाः प्रभवन्त्यहरागमे ।
रात्र्यागमे प्रलीयन्ते तत्रैवाव्यक्तसंज्ञके ॥ १८ ॥

भूतग्रामः स एवायं भूत्वा भूत्वा प्रलीयते ।
रात्र्यागमेऽवशः पार्थ प्रभवत्यहरागमे ॥ १९ ॥

परस्तस्मात्तु भावोऽन्योऽव्यक्तोऽव्यक्तात्सनातनः ।
यः स सर्वेषु भूतेषु नश्यत्सु न विनश्यति ॥ २० ॥

अव्यक्तोऽक्षर इत्युक्तस्तमाहुः परमां गतिम् ।
यं प्राप्य न निवर्तन्ते तद्धाम परमं मम ॥ २१ ॥

पुरुषः स परः पार्थ भक्त्या लभ्यस्त्वनन्यया ।
यस्यान्तःस्थानि भूतानि येन सर्वमिदं ततम् ॥ २२ ॥

यत्र काले त्वनावृत्तिमावृत्तिं चैव योगिनः ।
प्रयाता यान्ति तं कालं वक्ष्यामि भरतर्षभ ॥ २३ ॥

अग्निर्ज्योतिरहः शुक्लः षण्मासा उत्तरायणम् ।
तत्र प्रयाता गच्छन्ति ब्रह्म ब्रह्मविदो जनाः ॥ २४ ॥

धूमो रात्रिस्तथा कृष्णः षण्मासा दक्षिणायनम् ।
तत्र चान्द्रमसं ज्योतिर्योगी प्राप्य निवर्तते ॥ २५ ॥

शुक्लकृष्णे गती ह्येते जगतः शाश्वते मते ।
एकया यात्यनावृत्तिमन्ययावर्तते पुनः ॥ २६ ॥

नैते सृती पार्थ जानन्योगी मुह्यति कश्चन ।
तस्मात्सर्वेषु कालेषु योगयुक्तो भवार्जुन ॥ २७ ॥

वेदेषु यज्ञेषु तपःसु चैव दानेषु यत्पुण्यफलं प्रदिष्टम् ॥
अत्येति तत्सर्वमिदं विदित्वा योगी परं स्थानमुपैति चाद्यम् ॥

## ॥ नवमोऽध्यायः ॥

श्रीभगवानुवाच —

इदं तु ते गुह्यतमं प्रवक्ष्याम्यनसूयवे ।
ज्ञानं विज्ञानसहितं यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥ १ ॥

राजविद्या राजगुह्यं पवित्रमिदमुत्तमम् ।
प्रत्यक्षावगमं धर्म्यं सुसुखं कर्तुमव्ययम् ॥ २ ॥

अश्रद्दधानाः पुरुषा धर्मस्यास्य परंतप ।
अप्राप्य मां निवर्तन्ते मृत्युसंसारवर्त्मनि ॥ ३ ॥

मया ततमिदं सर्वं जगदव्यक्तमूर्तिना ।
मत्स्थानि सर्वभूतानि न चाहं तेष्ववस्थितः ॥ ४ ॥

न च मत्स्थानि भूतानि पश्य मे योगमैश्वरम् ।
भूतभृन्न च भूतस्थो ममात्मा भूतभावनः ॥ ५ ॥

यथाकाशस्थितो नित्यं वायुः सर्वत्रगो महान् ।
तथा सर्वाणि भूतानि मत्स्थानीत्युपधारय ॥ ६ ॥

सर्वभूतानि कौन्तेय प्रकृतिं यान्ति मामिकाम् ।
कल्पक्षये पुनस्तानि कल्पादौ विसृजाम्यहम् ॥ ७ ॥

प्रकृतिं स्वामवष्टभ्य विसृजामि पुनः पुनः ।
भूतग्राममिमं कृत्स्नमवशं प्रकृतेर्वशात् ॥ ८ ॥

न च मां तानि कर्माणि निबध्नन्ति धनञ्जय ।
उदासीनवदासीनमसक्तं तेषु कर्मसु ॥ ९ ॥

मयाध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम् ।
हेतुनानेन कौन्तेय जगद्विपरिवर्तते ॥ १० ॥

अवजानन्ति मां मूढा मानुषीं तनुमाश्रितम् ।
परं भावमजानन्तो मम भूतमहेश्वरम् ॥ ११ ॥

मोघाशा मोघकर्माणो मोघज्ञाना विचेतसः ।
राक्षसीमासुरीं चैव प्रकृतिं मोहिनीं श्रिताः ॥ १२ ॥

महात्मानस्तु मां पार्थ दैवीं प्रकृतिमाश्रिताः ।
भजन्त्यनन्यमनसो ज्ञात्वा भूतादिमव्ययम् ॥ १३ ॥

सततं कीर्तयन्तो मां यतन्तश्च दृढव्रताः ।
नमस्यन्तश्च मां भक्त्या नित्ययुक्ता उपासते ॥ १४ ॥

ज्ञानयज्ञेन चाप्यन्ये यजन्तो मामुपासते ।
एकत्वेन पृथक्त्वेन बहुधा विश्वतोमुखम् ॥ १५ ॥

अहं क्रतुरहं यज्ञः स्वधाहमहमौषधम् ।
मन्त्रोऽहमहमेवाज्यमहमग्निरहं हुतम् ॥ १६ ॥

पिताहमस्य जगतो माता धाता पितामहः ।
वेद्यं पवित्रमोंकार ऋक्साम यजुरेव च ॥ १७ ॥

गतिर्भर्ता प्रभुः साक्षी निवासः शरणं सुहृत् ।
प्रभवः प्रलयः स्थानं निधानं बीजमव्ययम् ॥ १८ ॥

तपाम्यहमहं वर्षं निगृह्णाम्युत्सृजामि च ।
अमृतं चैव मृत्युश्च सदसच्चाहमर्जुन ॥ १९ ॥

त्रैविद्या मां सोमपाः पूतपापा
यज्ञैरिष्ट्वा स्वर्गतिं प्रार्थयन्ते ।
ते पुण्यमासाद्य सुरेन्द्रलोक-
मश्नन्ति दिव्यान्दिवि देवभोगान् ॥ २० ॥

ते तं भुक्त्वा स्वर्गलोकं विशालं
क्षीणे पुण्ये मर्त्यलोकं विशन्ति ।
एवं त्रयीधर्ममनुप्रपन्ना
गतागतं कामकामा लभन्ते ॥ २१ ॥

अनन्याश्चिन्तयन्तो मां ये जनाः पर्युपासते ।
तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ॥ २२ ॥

येऽप्यन्यदेवताभक्ता यजन्ते श्रद्धयान्विताः ।
तेऽपि मामेव कौन्तेय यजन्त्यविधिपूर्वकम् ॥ २३ ॥

अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च ।
न तु मामभिजानन्ति तत्त्वेनातश्च्यवन्ति ते ॥ २४ ॥

यान्ति देवव्रता देवान्पितॄन्यान्ति पितृव्रताः ।
भूतानि यान्ति भूतेज्या यान्ति मद्याजिनोऽपि माम् ॥ २५ ॥

पत्रं पुष्पं फलं तोयं यो मे भक्त्या प्रयच्छति ।
तदहं भक्त्युपहृतमश्नामि प्रयतात्मनः ॥ २६ ॥

यत्करोषि यदश्नासि यज्जुहोषि ददासि यत् ।
यत्तपस्यसि कौन्तेय तत्कुरुष्व मदर्पणम् ॥ २७ ॥

शुभाशुभफलैरेवं मोक्ष्यसे कर्मबन्धनैः ।
संन्यासयोगयुक्तात्मा विमुक्तो मामुपैष्यसि ॥ २८ ॥

समोऽहं सर्वभूतेषु न मे द्वेष्योऽस्ति न प्रियः ।
ये भजन्ति तु मां भक्त्या मयि ते तेषु चाप्यहम् ॥

अपि चेत्सुदुराचारो भजते मामनन्यभाक् ।
साधुरेव स मन्तव्यः सम्यग्व्यवसितो हि सः ॥ ३० ॥

क्षिप्रं भवति धर्मात्मा शश्वच्छान्तिं निगच्छति ।
कौन्तेय प्रतिजानीहि न मे भक्तः प्रणश्यति ॥ ३१ ॥

मां हि पार्थ व्यपाश्रित्य येऽपि स्युः पापयोनयः ।
स्त्रियो वैश्यास्तथा शूद्रास्तेऽपि यान्ति परां गतिम् ॥ ३२ ॥

किं पुनर्ब्राह्मणाः पुण्या भक्ता राजर्षयस्तथा ।
अनित्यमसुखं लोकमिमं प्राप्य भजस्व माम् ॥ ३३ ॥

मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु ।
मामेवैष्यसि युक्त्वैवमात्मानं मत्परायणः ॥ ३४ ॥

---

## ॥ दशमोऽध्यायः ॥

श्रीभगवानुवाच –

भूय एव महाबाहो शृणु मे परमं वचः ।
यत्तेऽहं प्रीयमाणाय वक्ष्यामि हितकाम्यया ॥ १ ॥

न मे विदुः सुरगणाः प्रभवं न महर्षयः ।
अहमादिर्हि देवानां महर्षीणां च सर्वशः ॥ २ ॥

यो मामजमनादिं च वेत्ति लोकमहेश्वरम् ।
असंमूढः स मर्त्येषु सर्वपापैः प्रमुच्यते ॥ ३ ॥

बुद्धिर्ज्ञानमसंमोहः क्षमा सत्यं दमः शमः ।
सुखं दुःखं भवोऽभावो भयं चाभयमेव च ॥ ४ ॥

अहिंसा समता तुष्टिस्तपो दानं यशोऽयशः ।
भवन्ति भावा भूतानां मत्त एव पृथग्विधाः ॥ ५ ॥

महर्षयः सप्त पूर्वे चत्वारो मनवस्तथा ।
मद्भावा मानसा जाता येषां लोक इमाः प्रजाः ॥ ६ ॥

एतां विभूतिं योगं च मम यो वेत्ति तत्त्वतः ।
सोऽविकम्पेन योगेन युज्यते नात्र संशयः ॥ ७ ॥

अहं सर्वस्य प्रभवो मत्तः सर्वं प्रवर्तते ।
इति मत्वा भजन्ते मां बुधा भावसमन्विताः ॥ ८ ॥

मच्चित्ता मद्गतप्राणा बोधयन्तः परस्परम् ।
कथयन्तश्च मां नित्य तुष्यन्ति च रमन्ति च ॥ ९ ॥

तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम् ।
ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते ॥ १० ॥

तेषामेवानुकम्पार्थमहमज्ञानजं तमः ।
नाशयाम्यात्मभावस्थो ज्ञानदीपेन भास्वता ॥ ११ ॥

अर्जुन उवाच–

परं ब्रह्म परं धाम पवित्रं परमं भवान् ।
पुरुषं शाश्वतं दिव्यमादिदेवमजं विभुम् ॥ १२ ॥

आहुस्त्वामृषयः सर्वे देवर्षिर्नारदस्तथा ।
असितो देवलो व्यासः स्वयं चैव ब्रवीषि मे ॥ १३ ॥

सर्वमेतदृतं मन्ये यन्मां वदसि केशव ।
न हि ते भगवन्व्यक्तिं विदुर्देवा न दानवाः ॥ १४ ॥

स्वयमेवात्मनात्मानं वेत्थ त्वं पुरुषोत्तम ।
भूतभावन भूतेश देवदेव जगत्पते ॥ १५ ॥

वक्तुमर्हस्यशेषेण दिव्या ह्यात्मविभूतयः ।
याभिर्विभूतिभिर्लोकानिमांस्त्वं व्याप्य तिष्ठसि ॥ १६ ॥

कथं विद्यामहं योगिंस्त्वां सदा परिचिन्तयन् ।
केषु केषु च भावेषु चिन्त्योऽसि भगवन्मया ॥ १७ ॥

विस्तरेणात्मनो योगं विभूतिं च जनार्दन ।
भूयः कथय तृप्तिर्हि शृण्वतो नास्ति मेऽमृतम् ॥

भगवानुवाच–

हन्त ते कथयिष्यामि दिव्या ह्यात्मविभूतयः ।
प्राधान्यतः कुरुश्रेष्ठ नास्त्यन्तो विस्तरस्य मे ॥ १९ ॥

अहमात्मा गुडाकेश सर्वभूताशयस्थितः ।
अहमादिश्च मध्यं च भूतानामन्त एव च ॥ २० ॥

आदित्यानामहं विष्णुर्ज्योतिषां रविरंशुमान् ।
मरीचिर्मरुतामस्मि नक्षत्राणामहं शशी ॥ २१ ॥

वेदानां सामवेदोऽस्मि देवानामस्मि वासवः ।
इन्द्रियाणां मनश्चास्मि भूतानामस्मि चेतना ॥ २२ ॥

रुद्राणां शङ्करश्चास्मि वित्तेशो यक्षरक्षसाम् ।
वसूनां पावकश्चास्मि मेरुः शिखरिणामहम् ॥ २३ ॥

पुरोधसां च मुख्यं मां विद्धि पार्थ बृहस्पतिम् ।
सेनानीनामहं स्कन्दः सरसामस्मि सागरः ॥ २४ ॥

महर्षीणां भृगुरहं गिरामस्म्येकमक्षरम् ।
यज्ञानां जपयज्ञोऽस्मि स्थावराणां हिमालयः ॥ २५ ॥

अश्वत्थः सर्ववृक्षाणां देवर्षीणां च नारदः ।
गन्धर्वाणां चित्ररथः सिद्धानां कपिलो मुनिः ॥ २६ ॥

उच्चैःश्रवसमश्वानां विद्धि माममृतोद्भवम् ।
ऐरावतं गजेन्द्राणां नराणां च नराधिपम् ॥ २७ ॥

आयुधानामहं वज्रं धेनूनामस्मि कामधुक् ।
प्रजनश्चास्मि कन्दर्पः सर्पाणामस्मि वासुकिः ॥ २८ ॥

अनन्तश्चास्मि नागानां वरुणो यादसामहम् ।
पितॄणामर्यमा चास्मि यमः संयमतामहम् ॥ २९ ॥

प्रह्लादश्चास्मि दैत्यानां कालः कलयतामहम् ।
मृगाणां च मृगेन्द्रोऽहं वैनतेयश्च पक्षिणाम् ॥ ३० ॥

पवनः पवतामस्मि रामः शस्त्रभृतामहम् ।
झषाणां मकरश्चास्मि स्रोतसामस्मि जाह्नवी ॥ ३१ ॥

सर्गाणामादिरन्तश्च मध्यं चैवाहमर्जुन ।
अध्यात्मविद्या विद्यानां वादः प्रवदतामहम् ॥ ३२ ॥

अक्षराणामकारोऽस्मि द्वन्द्वः सामासिकस्य च ।
अहमेवाक्षयः कालो धाताहं विश्वतोमुखः ॥ ३३ ॥

मृत्युः सर्वहरश्चाहमुद्भवश्च भविष्यताम् ।
कीर्तिः श्रीर्वाक्च नारीणां स्मृतिर्मेधा धृतिः क्षमा ॥

बृहत्साम तथा साम्नां गायत्री छन्दसामहम् ।
मासानां मार्गशीर्षोऽहमृतूनां कुसुमाकरः ॥ ३५ ॥

द्यूतं छलयतामस्मि तेजस्तेजस्विनामहम् ।
जयोऽस्मि व्यवसायोऽस्मि सत्त्वं सत्त्ववतामहम् ॥ ३६ ॥

वृष्णीनां वासुदेवोऽस्मि पाण्डवानां धनञ्जयः ।
मुनीनामप्यहं व्यासः कवीनामुशना कविः ॥ ३७ ॥

दण्डो दमयतामस्मि नीतिरस्मि जीगीषताम् ।
मौनं चैवास्मि गुह्यानां ज्ञानं ज्ञानवतामहम् ॥ ३८ ॥

यच्चापि सर्वभूतानां बीजं तदहमर्जुन ।
न तदस्ति विना यत्स्यान्मया भूतं चराचरम् । ३९ ॥

नान्तोऽस्ति मम दिव्यानां विभूतीनां परंतप ।
एष तूद्देशतः प्रोक्तो विभूतेर्विस्तरो मया ॥ ४० ॥

यद्यद्विभूतिमत्सत्त्वं श्रीमदूर्जितमेव वा ।
तत्तदेवावगच्छ त्वं मम तेजोंशसंभवम् ॥ ४१ ॥

अथवा बहुनैतेन किं ज्ञातेन तवार्जुन ।
विष्टभ्याहमिदं कृत्स्नमेकांशेन स्थितो जगत् ॥ ४२ ॥

---

## ॥ एकादशोऽध्यायः ॥

अर्जुन उवाच –

मदनुग्रहाय परमं गुह्यमध्यात्मसंज्ञितम् ।
यत्त्वयोक्तं वचस्तेन मोहोऽयं विगतो मम ॥ १ ॥

भवाप्ययौ हि भूतानां श्रुतौ विस्तरशो मया ।
त्वत्तः कमलपत्राक्ष माहात्म्यमपि चाव्ययम् ॥ २ ॥

एवमेतद्यथात्थ त्वमात्मानं परमेश्वर ।
द्रष्टुमिच्छामि ते रूपमैश्वरं पुरुषोत्तम ॥ ३ ॥

मन्यसे यदि तच्छक्यं मया द्रष्टुमिति प्रभो ।
योगेश्वर ततो मे त्वं दर्शयात्मानमव्ययम् ॥ ४ ॥

श्रीभगवानुवाच –

पश्य मे पार्थ रूपाणि शतशोऽथ सहस्रशः ।
नानाविधानि दिव्यानि नानावर्णाकृतीनि च ॥ ५ ॥

पश्यादित्यान्वसून्रुद्रानश्विनौ मरुतस्तथा ।
बहून्यदृष्टपूर्वाणि पश्याश्चर्याणि भारत ॥ ६ ॥

इहैकस्थं जगत्कृत्स्नं पश्याद्य सचराचरम् ।
मम देहे गुडाकेश यच्चान्यद्द्रष्टुमिच्छसि ॥ ७ ॥

न तु मां शक्यसे द्रष्टुमनेनैव स्वचक्षुषा ।
दिव्यं ददामि ते चक्षुः पश्य मे योगमैश्वरम् ॥ ८ ॥

संजय उवाच –

एवमुक्त्वा ततो राजन्महायोगेश्वरो हरिः ।
दर्शयामास पार्थाय परमं रूपमैश्वरम् ॥ ९ ॥

अनेकवक्त्रनयनमनेकाद्भुतदर्शनम् ।
अनेकदिव्याभरणं दिव्यानेकोद्यतायुधम् ॥ १० ॥

दिव्यमाल्याम्बरधरं दिव्यगन्धानुलेपनम् ।
सर्वाश्चर्यमयं देवमनन्तं विश्वतोमुखम् ॥ ११ ॥

दिवि सूर्यसहस्रस्य भवेद्युगपदुत्थिता ।
यदि भाः सदृशी सा स्याद्भासस्तस्य महात्मनः ॥ १२ ॥

तत्रैकस्थं जगत्कृत्स्नं प्रविभक्तमनेकधा ।
अपश्यद्देवदेवस्य शरीरे पाण्डवस्तदा ॥ १३ ॥

ततः स विस्मयाविष्टो हृष्टरोमा धनञ्जयः ।
प्रणम्य शिरसा देवं कृताञ्जलिरभाषत ॥ १४ ॥

अर्जुन उवाच—

पश्यामि देवांस्तव देव देहे सर्वांस्तथा भूतविशेषसङ्घान् ।
ब्रह्माणमीशं कमलासनस्थमृषींश्च सर्वानुरगांश्च दिव्यान् ॥१५॥

अनेकबाहूदरवक्त्रनेत्रं पश्यामि त्वा सर्वतोऽनन्तरूपम् ।
नान्तं न मध्यं न पुनस्तवादिं पश्यामि विश्वेश्वर विश्वरूप ॥

किरीटिनं गदिनं चक्रिणं च तेजोराशिं सर्वतोदीप्तिमन्तम् ।
पश्यामि त्वां दुर्निरीक्ष्यं समन्ताद्दीप्तानलार्कद्युतिमप्रमेयम् ॥

त्वमक्षरं परमं वेदितव्यं त्वमस्य विश्वस्य परं निधानम् ।
त्वमव्ययः शाश्वतधर्मगोप्ता सनातनस्त्वं पुरुषो मतो मे ॥१८॥

अनादिमध्यान्तमनन्तवीर्यमनन्तबाहुं शशिसूर्यनेत्रम् ।
पश्यामि त्वां दीप्तहुताशवक्त्रं स्वतेजसा विश्वमिदं तपन्तम् ॥

द्यावापृथिव्योरिदमन्तरं हि व्याप्तं त्वयैकेन दिशश्च सर्वाः ।
दृष्ट्वाद्भुतं रूपमिदं तवोग्रं लोकत्रयं प्रव्यथितं महात्मन् ॥

अमी हि त्वा सुरसङ्घा विशन्ति केचिद्भीताः प्राञ्जलयो गृणन्ति ।
स्वस्तीत्युक्त्वा महर्षिसिद्धसङ्घाः स्तुवन्ति त्वां स्तुतिभिः पुष्कलाभिः ॥

रुद्रादित्या वसवो ये च साध्या विश्वेऽश्विनौ मरुतश्चोष्मपाश्च ।
गन्धर्वयक्षासुरसिद्धसङ्घा वीक्षन्ते त्वां विस्मिताश्चैव सर्वे ॥ २२ ॥

रूपं महत्ते बहुवक्त्रनेत्रं महाबाहो बहुबाहूरुपादम् ।
बहूदरं बहुदंष्ट्राकरालं दृष्ट्वा लोकाः प्रव्यथितास्तथाहम् ॥ २३ ॥

नभःस्पृशं दीप्तमनेकवर्णं व्यात्ताननं दीप्तविशालनेत्रम् ।
दृष्ट्वा हि त्वां प्रव्यथितान्तरात्मा धृतिं न विन्दामि शमं च विष्णो ॥

दंष्ट्राकरालानि च ते मुखानि दृष्ट्वैव कालानलसन्निभानि ।
दिशो न जाने न लभे च शर्म प्रसीद देवेश जगन्निवास ॥ २५ ॥

अमी च त्वां धृतराष्ट्रस्य पुत्राः सर्वे सहैवावनिपालसङ्घैः ।
भीष्मो द्रोणः सूतपुत्रस्तथासौ सहास्मदीयैरपि योधमुख्यैः ॥ २६ ॥

वक्त्राणि ते त्वरमाणा विशन्ति दंष्ट्राकरालानि भयानकानि ।
केचिद्विलग्ना दशनान्तरेषु संदृश्यन्ते चूर्णितैरुत्तमाङ्गैः ॥ २७ ॥

यथा नदीनां बहवोऽम्बुवेगाः समुद्रमेवाभिमुखा द्रवन्ति ।
तथा तवामी नरलोकवीरा विशन्ति वक्त्राण्यभिविज्वलन्ति ॥ २८ ॥

यथा प्रदीप्तं ज्वलनं पतङ्गा विशन्ति नाशाय समृद्धवेगाः ।
तथैव नाशाय विशन्ति लोकास्तवापि वक्त्राणि समृद्धवेगाः ॥ २९ ॥

लेलिह्यसे ग्रसमानः समन्ताल्लोकान्समग्रान्वदनैर्ज्वलद्भिः ।
तेजोभिरापूर्य जगत्समग्रं भासस्तवोग्राः प्रतपन्ति विष्णो ॥ ३० ॥

आख्याहि मे को भवानुग्ररूपो नमोऽस्तु ते देववर प्रसीद ।
विज्ञातुमिच्छामि भवन्तमाद्यं न हि प्रजानामि तव प्रवृत्तिम् ॥ ३१ ॥

श्रीभगवानुवाच –

कालोऽस्मि लोकक्षयकृत्प्रवृद्धो लोकान्समाहर्तुमिह प्रवृत्तः ।
ऋतेऽपि त्वां न भविष्यन्ति सर्वे येऽवस्थिताः प्रत्यनीकेषु योधाः ॥

तस्मात्त्वमुत्तिष्ठ यशो लभस्व जित्वा शत्रून्भुङ्क्ष्व राज्यं समृद्धम् ।
मयैवैते निहताः पूर्वमेव निमित्तमात्रं भव सव्यसाचिन् ॥ ३३ ॥

द्रोणं च भीष्मं च जयद्रथं च कर्णं तथान्यानपि योधवीरान् ।
मया हतांस्त्वं जहि मा व्यथिष्ठा युध्यस्व जेतासि रणे सपत्नान् ॥

सञ्जय उवाच –

एतच्छ्रुत्वा वचनं केशवस्य कृताञ्जलिर्वेपमानः किरीटी ।
नमस्कृत्वा भूय एवाह कृष्णं सगद्गदं भीतभीतः प्रणम्य ॥ ३५ ॥

अर्जुन उवाच –

स्थाने हृषीकेश तव प्रकीर्त्या जगत्प्रहृष्यत्यनुरज्यते च ।
रक्षांसि भीतानि दिशो द्रवन्ति सर्वे नमस्यन्ति च सिद्धसङ्घाः ॥

कस्माच्च ते न नमेरन्महात्मन्गरीयसे ब्रह्मणोऽप्यादिकर्त्रे ।
अनन्त देवेश जगन्निवास त्वमक्षरं सदसत्तत्परं यत् ॥ ३७ ॥

त्वमादिदेवः पुरुषः पुराणस्त्वमस्य विश्वस्य परं निधानम् ।
वेत्तासि वेद्यं च परं च धाम त्वया ततं विश्वमनन्तरूप ॥ ३८ ॥

वायुर्यमोऽग्निर्वरुणः शशाङ्कः प्रजापतिस्त्वं प्रपितामहश्च ।
नमो नमस्तेऽस्तु सहस्रकृत्वः पुनश्च भूयोऽपि नमो नमस्ते ॥ ३९ ॥

नमः पुरस्तादथ पृष्ठतस्ते नमोऽस्तु ते सर्वत एव सर्व ।
अनन्तवीर्यामितविक्रमस्त्वं सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः ॥ ४० ॥

सखेति मत्वा प्रसभं यदुक्तं हे कृष्ण हे यादव हे सखेति ।
अजानता महिमानं तवेदं मया प्रमादात्प्रणयेन वापि ॥ ४१ ॥

यच्चावहासार्थमसत्कृतोऽसि विहारशय्यासनभोजनेषु ।
एकोऽथवाप्यच्युत तत्समक्षं तत्क्षामये त्वामहमप्रमेयम् ॥ ४२ ॥

पितासि लोकस्य चराचरस्य त्वमस्य पूज्यश्च गुरुर्गरीयान् ।
न त्वत्समोऽस्त्यभ्यधिकः कुतोऽन्यो लोकत्रयेऽप्यप्रतिमप्रभाव ॥ ४३ ॥

तस्मात्प्रणम्य प्रणिधाय कायं प्रसादये त्वामहमीशमीड्यम् ।
पितेव पुत्रस्य सखेव सख्युः प्रियः प्रियायार्हसि देव सोढुम् ॥ ४४ ॥

अदृष्टपूर्वं हृषितोऽस्मि दृष्ट्वा भयेन च प्रव्यथितं मनो मे ।
तदेव मे दर्शय देव रूपं प्रसीद देवेश जगन्निवास ॥ ४५ ॥

किरीटिनं गदिनं चक्रहस्तमिच्छामि त्वां द्रष्टुमहं तथैव ।
तेनैव रूपेण चतुर्भुजेन सहस्रबाहो भव विश्वमूर्ते ॥ ४६ ॥

श्रीभगवानुवाच –

मया प्रसन्नेन तवार्जुनेदं रूपं परं दर्शितमात्मयोगात् ।
तेजोमयं विश्वमनन्तमाद्यं यन्मे त्वदन्येन न दृष्टपूर्वम् ॥ ४७ ॥

न वेदयज्ञाध्ययनैर्न दानैर्न च क्रियाभिर्न तपोभिरुग्रैः ।
एवंरूपः शक्य अहं नृलोके द्रष्टुं त्वदन्येन कुरुप्रवीर ॥ ४८ ॥

मा ते व्यथा मा च विमूढभावो दृष्ट्वा रूपं घोरमीदृङ्ममेदम् ।
व्यपेतभीः प्रीतमनाः पुनस्त्वं तदेव मे रूपमिदं प्रपश्य ॥ ४९ ॥

संजय उवाच –

इत्यर्जुनं वासुदेवस्तथोक्त्वा स्वकं रूपं दर्शयामास भूयः ।
आश्वासयामास च भीतमेनं भूत्वा पुनः सौम्यवपुर्महात्मा ॥ ५० ॥

अर्जुन उवाच –

दृष्ट्वेदं मानुषं रूपं तव सौम्यं जनार्दन ।
इदानीमस्मि संवृत्तः सचेताः प्रकृतिं गतः ॥ ५१ ॥

श्रीभगवानुवाच -

सुदुर्दर्शमिदं रूपं दृष्टवानसि यन्मम ।
देवा अप्यस्य रूपस्य नित्यं दर्शनकाङ्क्षिणः ॥ ५२ ॥

नाहं वेदैर्न तपसा न दानेन न चेज्यया ।
शक्य एवंविधो द्रष्टुं दृष्टवानसि मां यथा ॥ ५३ ॥

भक्त्या त्वनन्यया शक्य अहमेवंविधोऽर्जुन ।
ज्ञातुं द्रष्टुं च तत्त्वेन प्रवेष्टुं च परंतप ॥ ५४ ॥

मत्कर्मकृन्मत्परमो मद्भक्तः सङ्गवर्जितः ।
निर्वैरः सर्वभूतेषु यः स मामेति पाण्डव ॥ ५५ ॥

---

## ॥ द्वादशोऽध्यायः ॥

अर्जुन उवाच –

एवं सततयुक्ता ये भक्तास्त्वां पर्युपासते ।
ये चाप्यक्षरमव्यक्तं तेषां के योगवित्तमाः ॥ १ ॥

श्रीभगवानुवाच –

मय्यावेश्य मनो ये मां नित्ययुक्ता उपासते ।
श्रद्धया परयोपेतास्ते मे युक्ततमा मताः ॥ २ ॥

ये त्वक्षरमनिर्देश्यमव्यक्तं पर्युपासते ।
सर्वत्रगमचिन्त्यं च कूटस्थमचलं ध्रुवम् ॥ ३ ॥

संनियम्येन्द्रियग्रामं सर्वत्र समबुद्धयः ।
ते प्राप्नुवन्ति मामेव सर्वभूतहिते रताः ॥ ४ ॥

क्लेशोऽधिकतरस्तेषामव्यक्तासक्तचेतसाम् ।
अव्यक्ता हि गतिर्दुःखं देहवद्भिरवाप्यते ॥ ५ ॥

ये तु सर्वाणि कर्माणि मयि संन्यस्य मत्पराः ।
अनन्येनैव योगेन मां ध्यायन्त उपासते ॥ ६ ॥

तेषामहं समुद्धर्ता मृत्युसंसारसागरात् ।
भवामि नचिरात्पार्थ मय्यावेशितचेतसाम् ॥ ७ ॥

मय्येव मन आधत्स्व मयि बुद्धिं निवेशय ।
निवसिष्यसि मय्येव अत ऊर्ध्वं न संशयः ॥ ८ ॥

अथ चित्तं समाधातुं न शक्नोषि मयि स्थिरम् ।
अभ्यासयोगेन ततो मामिच्छाप्तुं धनञ्जय ॥ ९ ॥

अभ्यासेऽप्यसमर्थोऽसि मत्कर्मपरमो भव ।
मदर्थमपि कर्माणि कुर्वन्सिद्धिमवाप्स्यसि ॥ १० ॥

अथैतदप्यशक्तोऽसि कर्तुं मद्योगमाश्रितः ।
सर्वकर्मफलत्यागं ततः कुरु यतात्मवान् ॥ ११ ॥

श्रेयो हि ज्ञानमभ्यासाज्ज्ञानाद्ध्यानं विशिष्यते ।
ध्यानात्कर्मफलत्यागस्त्यागाच्छान्तिरनन्तरम् ॥ १२ ॥

अद्वेष्टा सर्वभूतानां मैत्रः करुण एव च ।
निर्ममो निरहङ्कारः समदुःखसुखः क्षमी ॥ १३ ॥

संतुष्टः सततं योगी यतात्मा दृढनिश्चयः ।
मय्यर्पितमनोबुद्धिर्यो मद्भक्तः स मे प्रियः ॥ १४ ॥

यस्मान्नोद्विजते लोको लोकान्नोद्विजते च यः ।
हर्षामर्षभयोद्वेगैर्मुक्तो यः स च मे प्रियः ॥ १५ ॥

अनपेक्षः शुचिर्दक्ष उदासीनो गतव्यथः ।
सर्वारम्भपरित्यागी यो मद्भक्तः स मे प्रियः ॥ १६ ॥

यो न हृष्यति न द्वेष्टि न शोचति न काङ्क्षति ।
शुभाशुभपरित्यागी भक्तिमान्यः स मे प्रियः ॥ १७ ॥

समः शत्रौ च मित्रे च तथा मानापमानयोः ।
शीतोष्णसुखदुःखेषु समः सङ्गविवर्जितः ॥ १८ ॥

तुल्यनिन्दास्तुतिर्मौनी संतुष्टो येन केनचित् ।
अनिकेतः स्थिरमतिर्भक्तिमान्मे प्रियो नरः ॥ १९ ॥

ये तु धर्म्यामृतमिदं यथोक्तं पर्युपासते ।
श्रद्दधाना मत्परमा भक्तास्तेऽतीव मे प्रियाः ॥ २० ॥

:o:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீமத் பகவத் கீதை

## ஏழாவது அத்யாயம்

### அவதாரிகை

ஸ்ரீ பார்த்தஸாரதி அருளிச்செய்த கீதா சாஸ்திரம் பதினெட்டு அத்யாயங்கள் கொண்டது. ஷட்கம் என்பது ஆறு பகுதிகளைக் கொண்டது என்று பொருள்படும். முதல் ஆறு அத்யாயங்கள் ஒரு ஷட்கம்; ஏழாம் அத்யாயம் முதல் பன்னிரண்டாம் அத்யாயம் முடிய இரண்டாம் ஷட்கமாகும். இப்படி கீதா சாஸ்திரம் மூன்று ஷட்கங்களாக வகுக்கப்பட்டிருக்கிறது.

அத்வைத மதத்தை நன்கு அறியாமல் விசிஷ்டாத்வைதத்தை அறிவது எளிதன்று.

**அத்வைத மதம் :** ப்ரஹ்மம் ஒன்றே உண்மைப் பொருள். மற்ற எல்லாப் பொருள்களும் மித்யை; பொய்த் தோற்றம். ஒருவன் ஒரு முத்துச் சிப்பியைக் கண்டு, அதை வெள்ளி என்று பிரமிக்கிறான். ஆசையுடன் அதை எடுக்கச் செல்கிறான். எதிரில் வரும் ஒரு நண்பன் 'அது வெள்ளியன்று; சிப்பி'' என்கிறான். அதைக்கேட்டு வெள்ளி என்கிற அறியாமை விலகுகிறது. அதுபோல் உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் ஒரே உண்மையான ப்ரஹ்மமாயிருக்க, அறிவின்மையினால் அந்த உண்மைப் பொருளை மனிதனாகவும், பசு, பக்ஷி செடி கொடிகளாகவும் நாம் பிரமிக்கிறோம். ஆசார்ய உபதேசத்தினாலும், ''தத்வமஸி'' போன்ற வேத வாக்யங்களினாலும், ப்ரஹ்மம் ஒன்றே உண்மைப் பொருள் என்கிற ஞானம் உண்டாகிறது. இந்த ஜ்ஞான நிலையே முக்தி. இதற்கு ஜ்ஞானமே ஸாதனம். மற்ற கர்ம யோகம், ஞானயோகம் பக்தி யோகம் ஒன்றும் ஸாதனமன்று. இதுவே அத்வைத மதக் கொள்கை. பக்திக்கு, பக்தி செய்பவன் ஒருவன், பக்தி செய்யப்படுபவனான பகவான் மற்றொருவன் என இரண்டு தத்வங்கள் இருக்க வேண்டியதாகையாலே, பக்தியை இம்மதத்தில் ஏற்றுக் கொள்ள இயலாது.

விசிஷ்டாத்வைத மதம் ! அறிவில்லாத அசேதனப் பொருள்கள் அசித்), அறிவுள்ள ஜீவாத்மாக்கள் (சித்), ஸர்வஜ்ஞனை ஸர்வேச் வரன் என மூன்றும் உண்மையான தத்வங்களே. எக்காலத் திலும் உள்ளவை. ஒன்றைவிட்டு ஒன்று பிரியாதவை. அறிவற்ற உடலில் கட்டுண்டு உழலும் அறிவுள்ள ஜீவன், பரமபதம் என்கிற தேச விசேஷம் சென்று அங்கு பகவானுக்குத் தொண்டு செய்து வாழ்வதே மோக்ஷம். இதுவே மேலான பயன். இதைப் பெற பகவத் பக்தியே ஸாதனம். கர்ம யோகம் ஜ்ஞான யோகங்கள் இந்த பக்திக்கு அங்கங்கள்; அதாவது பக்தி உண்டாக உதவுகின் றன. ஆகையினால் கிருஷ்ணன் முதல் ஷட்கத்தில், பக்திக்கு அங்கங் களான கர்ம, ஜ்ஞான யோகங்களையும், அதற்கு வேண்டிய சரீர ஆத்ம விவேகத்தையும் விரிவாக உபதேசித்தான். இந்த இரண்டாம் ஷட்கத்தில் அங்கியான பகவத் பக்தியை உபதேசிக்கிறான்.

சாஸ்திரங்களில் ஒருவன் மோக்ஷம் பெற ஓர் அடைவு சொல் லப்பட்டிருக்கிறது.

அவை யாவன:- அத்வேஷம், ஆபிமுக்யம், ஆசார்ய உபதேசம், கர்மாநுஷ்டானம், சித்த சுத்தி, சரீர ஆத்ம விவேகம், கர்மயோகம், ஜ்ஞான யோகம், ஆத்ம தரிசனம், பகவத் பக்தி; இந்த பக்தி, பரபக்தி பரஜ்ஞானம், பரபக்தியாக பக்குவம் அடைந்து பிறகு மோக்ஷம் அடைகிறான்.

தாழ்ந்த நிலையிலுள்ள ஜீவன், உயர்ந்த நிலையான மோக்ஷம் பெற ஒரு படிக்கட்டு போல ஓர் அடைவு சொல்லப்பட்டிருக்கிறது. இதை கண்ணன் ஆத்ம தரிசனம் பெறும்வரையில் விரிவாக முதல் ஷட்கத்தில் உபதேசித்தான். இந்த இரண்டாம் ஷட்கத்தில் பக்தியை உபதேசிக்கிறான்.

பக்தி என்றால் என்ன ? "மஹநீய விஷயே ப்ரீதி: பக்தி:" உயர்ந்த வனிடம் தாழ்ந்தவன் செய்யும் அன்பே பக்தி எனப்படும். தாழ்ந்தவ னான ஜீவனின் ஸ்வரூபத்தைப் பற்றியும், பக்தி பெற அவன் செய்ய வேண்டியவைகளையும் முதல் ஷட்கத்தில் கூறினான் கண்ணன். உயர்ந்தவனான தன் ஸ்வரூப, ரூப, விபவ குணங்களைப் பற்றியும் பக்தி செய்யும் விதத்தையும் இந்த இரண்டாம் ஷட்கத் தில் கிருஷ்ணன் சொல்கிறான்.

ஸ்ரீபகவான் உவாச: கண்ணன் கூறியது.

**மய்யாஸக்தமநா: பார்த்த யோகம் யுஞ்ஜந் மதாச்ரய: |**
**அஸம்சயம் ஸமக்ரம் மாம் யதா ஜ்ஞாஸ்யஸி தச் ச்ருணு || 1 ||**

அர்ஜுன! என்னிடம் உவந்த உள்ளத்தனாய் என்னையே ஆதார மாகக் கொண்டு, என்னிடம் பக்தியோகம் செய்கிற நீ, என்னைப் பற்றி முற்றிலும் சந்தேகமற எவ்வாறு நீ அறிய வேண்டுமோ, அதை நான் உனக்குத் தெளிவாகச் சொல்கிறேன், அதை நீ கவன மாகக் கேள்.

மய்யாஸக்த மனா: பகவானிடம் கருத்தூன்றிய மனம் உடைய வன். அவனிடம் அளவிறந்த அன்புள்ளவன். மற்ற விஷயங் களில் பற்று அற்று பகவான் ஒருவனையே எப்பொழுதும் சிந்தித் திருப்பவன். அப்படி பகவானையும் அவன் குண சேஷ்டிதங்களையும் நினையாத போது, அவனது மனம் சிதிலமாகிவிடும் தகையோன். தான் ஆர்வுற்றபடி பகவானையும் அவன் குணங்களையும் அனுப விக்கப் பெறுவதே அவனுடன் கூடியிருத்தலாம். இதுவே ஸம்ஸ்லேஷம் எனப்படும். அப்படி அவனை அனுபவிக்கப் பெறாம லிருத்தலே, பகவானை விட்டுப் பிரிந்திருத்தல், இதுவே விஸ்லேஷம் (பிரிவு) என்பது.

வாசுதேவ தருச் சாயா (வாசுதேவனாகிய மரத்தின் நிழல்) எங்கும் படர்ந்திருக்கும் அதின் நிழல் படாத இடமே உலகில் இல்லை. மிகக் குளிர்ச்சியோ வெப்பமோ யிராது. ஆனால் அந்த நிழலில் நாமிருக்கிறோம் என்கிற உணர்வு வேண்டும். அப்படிக்கில்லையேல் அவன் நிழலில் இருந்தும் வெய்யலில் இருப்பவனே. இவன் தன் உடலை நிழலில் வைத்து ஆத்மாவை வெய்யலில் வைத்தவனாகிறான். அதாவது தன் உடலின் நன்மையே தேடி, ஆத்மாவின் நன்மையை நாடுகிறானில்லை.

அவைஷ்ணவன் என்பான் யார்? வியாப்னோதி இதி விஷ்ணு பரந்துளனும் நாராயணன், விஷ்ணு சம்பந்தம் பெறாத மனிதனே உலகில் இல்லை. அப்படியிருக்க வைஷ்ணவன் அல்லாதார் என்று சிலரைச் சொல்வது எப்படி? நாம் விஷ்ணு சம்பந்தம் பெற்றிருக் கிறோம் என்பதை அறிந்து, அதற்குச் சேர செயல்படுபவன் வைஷ்ணவன் ஆகிறான்; மற்றவரெல்லோரும் அவைஷ்ணவர்களே.

மதாச்ரய: என்னையே ஆதாரமாக உடையவனாய். பகவானையே எல்லாமாகப் பற்றி யிருத்தல், அப்படிப்பட்ட ஜ்ஞானத்தை நான் உனக்குச் சொல்லப்போகிறேன்; கவனமாகக் கேள்" என்கிறான் கண்ணன்.

ஜ்ஞாநம் தேऽஹம் ஸவிஜ்ஞாநம் இதம் வக்ஷ்யாம்யசேஷத: |
யத் ஜ்ஞாத்வா நேஹ பூயோऽந்யத் ஜ்ஞாதவ்யம் அவசிஷ்யதே || 2 ||

இந்த ஜ்ஞானத்தை விஜ்ஞானத்துடன் நான் உனக்கு உபதேசிக்கப் போகிறேன். அதைக் கேட்டறிந்தால் மற்ற எவரிடமும் நீ மறுபடி இதைப் பற்றி நீ கேட்க வேண்டியது சிறிதும் இராது.

ஜ்ஞானம் என்றால் பகவத் ஜ்ஞானம்

விஜ்ஞானம் என்றால் பகவானுடைய ஜ்ஞான, சக்தி, ஐச்வர்ய, வீர்ய, தேஜஸ் போன்ற கலியாண குணங்களை அறிவது. ஆனால் சிலர் இதற்கு பகவத் பக்தி என பொருள் கூறுகின்றனர். இது பொருந்தாது. ஏனெனில் கண்ணன் பக்தியைப் பற்றி இங்கே கூறவில்லையே 9-ம் அத். "இதம்து தே குஹ்ய தமம்" என்கிற சுலோகம் முதற்கொண்டே பக்தியைப் பற்றிக் கூற ஆரம்பிக்கிறான். மற்றும் சிலர் விஜ்ஞானம் என்பதற்கு நிர்குண ப்ரஹ்மம் (குணமற்ற ப்ரஹ்மம்) என்று பொருள் சொல்கிறார்கள். இதுவும் சரியான பொருள் இல்லை. ஏனெனில் கீதையில் எங்கும் நிர்குண ப்ரஹ்மத்தைப் பற்றி கண்ணன் பேசவேயில்லை

ஒரு தூணைப் பார்த்து, "இது ஒரு தூண்" என்று அறிவது ஜ்ஞானம். அது எதனால் செய்யப்பட்டது, அதன் பரிமாணம், சக்தி இவைகளை அறிவதே விஜ்ஞானம் என்பது; அதே போல ஈச்வரனுடைய ஸ்வரூப ரூப குணங்களை அறிவதே விஜ்ஞானம் என்பதற்குச் சரியான பொருளாகும்.

ஸ்ரீ ராமாயணத்தில் அயோத்யா காண்டத்தை ஒருவர் படித்து வர, அதற்குப் பொருள் கூறுபவர் ஆரண்ய காண்டத்தின் பொருளை மிக அழகாய் உபந்யஸித்து வந்தாராம். அதுபோல் உள்ளது கீதைக்குப் பல இடங்களில் சிலர் அறிவுரை கூறிவருவது.

**மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கச்சித் யததி ஸித்தயே ।**
**யததாமபி ஸித்தாநாம் கச்சிந் மாம் வேத்தி தத்வத: ‖ 3 ‖**

மனிதர்களில் ஆயிரத்தில் ஒருவனே என்னிடம் பக்தி செய்ய முயல்கிறான். இவர்களில் ஆயிரத்தில் ஒருவனே கடைசி வரை பக்தி செய்து பூர்த்தி செய்கிறான். இவர்களில் ஆயிரத்தில் ஒருவனே என்னை உள்ளபடி அறிகிறான்.

மநுஷ்யாணாம் என்பதினால் அதிகார தகுதியுள்ளவர்களான தேவர்களையும் சேர்த்தே பொருள் கொள்ள வேண்டும். உலகில் பகவத் பக்தி செய்ய விரும்புவர்கள் அரிது. அப்படி பக்தி செய்ய விரும்புகிறவர்களில் யாரோ ஒருவனே, பக்தி செய்ய முயல்கிறான். அப்படி முயல்பவர்களில் யாரோ ஒருவனே தொடர்ந்து கடைசி

வரையில் பக்தி செய்கிறான். அவர்களிலும் யாரோ ஒருவனே என் ஜ்ஞான சக்தி கலியாண குணங்களை உள்ளபடி அறிகிறான். இப்படி அறிய அரிதான பக்தியோகத்தைப் பற்றி நான் உனக்குத் தெளியச் சொல்லுகிறேன் கேள் என்கிறான் கண்ணன்.

**பூமிராபோऽநலோ வாயு: கம் மனோ புத்திரேவ ச**
**அஹங்கார இதீயம் மே பிந்நா ப்ரக்ருதி: அஷ்டதா ‖ 4 ‖**

*நிலம் நீர் நெருப்பு காற்று ஆகாசம் மனம் புத்தி அஹங்காரம் என எட்டுவித, உலக படைப்புக்குக் காரணமான பொருள்கள் என்னுடையவை. இதிலிருந்து பல சுலோகங்களில் கண்ணன் தன் சிறப்பையே சொல்லி வருகிறான்.*

*உலகிலுள்ள பல வித விசித்ரமான இன்பப் பொருள்கள், இனிய இடங்கள் எல்லாம் உண்டாகக் காரணமான பூமி, தண்ணீர், நெருப்பு முதலிய எட்டு வித அசேதனப் பொருள்கள் என்னுடையவை என்கிறான். அதாவது நான் இட்ட வழக்காயிருப்பவை; அவை என் சொத்து, நான் அவற்றுக்கு ஸ்வாமி என்கிறான்.*

*இதனால் ஸர்வேச்வரன் அசித் விலக்ஷணன், அறிவற்ற பொருள்களைக் காட்டிலும் வேறுபட்டவன், அவற்றினிலும் உயர்ந்தவன். அவை அவனுடைய சொத்து என்பது தெளிவுறத் தேறுகிறது.*

**அபரேயம் இதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம்**
**ஜீவபூதாம் மஹாபாஹோ யயேதம் தார்யதே ஜகத் ‖ 5 ‖**

*அர்ஜுன! மேலே சொன்ன அறிவற்ற பொருள்கள் தாழ்ந்தவை. அவைகளைவிட வேறான மேம்பட்ட அறிவுள்ள ஜீவ சமூகம் உயர்ந்தவை. இவையும் என்னுடையவையே. இவற்றால் உலக முழுதும் தரிக்கப்பட்டிருக்கிறது.*

*மேலே சொன்ன நிலம் நீர் முதலிய எட்டுவித அசேதனப் பொருள்கள் தாழ்ந்தவை. அவை அபராப்ரக்ருதி எனப்படும். அவைகளைக் காட்டிலும் வேறான உயர்ந்த ஜீவாத்மாக்களும் என்னுடையவை. இவை பராப்ரக்ருதி எனப்படும். இந்த பராப்ரக்ருதியான ஜீவாத்மாக்களால் உலகம் யாவையும் தரிக்கப்படுகின்றன. (அபரம்—தாழ்ந்தவை; பரம்—மேன்பட்டது.)*

*இதனால் சித் அசித் ஈச்வரன் மூன்று தத்வங்களும் உண்மையானவை. மூன்றும் தனிப்பட்ட தத்வங்களாயும் ஒன்றைவிட ஒன்று உயர்ந்தவையாயும் உள்ளவை என்பது சொல்லப்படுகிறது. 'அசித்' என்றாலும், 'அசேதனம்' என்றாலும் அறி*

வில்லாப் பொருள்களையே குறிக்கும். 'சித்' என்றாலும் 'சேதனன்' என்றாலும் அறிவுள்ள ஜீவனையே குறிக்கும். ஈச்வரன் என்பான் இவையிரண்டைக் காட்டிலும் வேறுபட்டவனாய் மேன்பட்டவனாய் ஸர்வஜ்ஞனாய், இவைகளுக்கு ஸ்வாமியாய் உள்ளவன். இவை ஒன்றைவிட்டு ஒன்று பிரிந்திராதவை. இப்படி தத்வ த்ரயமான விசிஷ்டாத்வைத மதமே இங்கு கண்ணனால் சொல்லப்பட்டிருக்கிறது.

ய யேதம் தார்யதே ஜகத்– விசித்திரமாயும் விவிதமாயும் உள்ள உலகத்தின் எல்லாப் பொருள்களும் இந்த ஜீவ சமூகத்தினால் தரிக்கப்படிருக்கின்றன. நம் உடல் ஓர் அசித்து. அதில் ஒரு ஜீவனிருந்து தன் ஸ்வரூபத்தினாலும், ஜ்ஞானத்தினாலும் அதை தரிக்கிறான். ஜீவனில்லை எனில் உடல் அழிந்துவிடுகிறது. அசேதனப் பொருள் ஒவ்வொன்றிலும் ஒரு ஜீவனிருந்து அதனை தன் ஸ்வரூபத்தினால் தரிக்கிறான். அங்கே ஜீவனுக்கு ஞானம் பிரகாசிப்பதில்லை.

**உதாரணம் :** ஒரு வண்டியின் சக்கரத்தில் வட்டம் (Rim) என்றும், ஆரக்கால் (Spokes) என்றும், (HUB) என்றும் மூன்று பாகங்கள் உள்ளன. இவைகளில் வட்டத்தை ஆரங்கால் தரிக்கின்றன. ஆரத்தையும் வட்டத்தையும் குடம் தரிக்கிறது. அது போல உலகம் முழுவதுமுள்ள ஒவ்வொரு பொருளிலும் ஒவ்வோர் ஜீவன் இருந்து அவைகளை தரிக்கிறான். இந்த ஜீவாத்மாவுக்குள் பகவான் உள் இருந்தும் தன் சங்கல்பத்தினாலும் (நினைவினால்) ஜகத்தை தரிக்கிறான்.

இந்த ச்லோகத்தில் "து", "அந்யத்", என இரண்டு பதங்களினால், ஜீவன் அசித்தைக் காட்டிலும் வேறுபட்டவன் என்பதை உறுதிப்படுத்தியிருக்கிறான்.

**ஏதத்யோநீநி பூதாநி ஸர்வாணீத்யுபதாரய ।**
**அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரளயஸ் ததா ॥ 6 ॥**

உலகிலுள்ள எல்லா உயிர்களும், கீழ் சொன்ன என்னுடைய இருவித ப்ரக்ருதிகளை, அதாவது சேதன, அசேதனங்களைக் காரணமாக உடையவை. ஆதலால் உலகின் படைப்புக்கு நானே காரணன். அவைகளின் லயத்திற்கும், அதாவது மறைவுக்கும் காரணன் நான்.

இந்த ஏழாம் அத்யாயத்தின் முதல் மூன்று சுலோகங்களில் தான் சொல்லும் விஷயத்தின் சிறப்பைக் கூறினான். மேல் இரண்டு சுலோகங்களில் நீர் நிலம் போன்ற எட்டு அசேதனப் பொருள்களும்

ஜீவாத்மாவான சேதனமும் என்னுடையவை; என் சொத்து. நான் அவைகளுக்கு ஸ்வாமீ. அவை இரண்டையும் நான் என் மூலப்ரக்ருதியிலிருந்து படைக்கிறேன் என்று சமஷ்டி ச்ருஷ்டியைச் சொன்னான். (அதாவது தானே நேரில் படைப்பது).

இந்த ஐந்தாம் சுலோகத்தில் "ஸ்வாநி பூதாநி யேதத் யோநீநி" என்பதினால் ப்ரஹ்மா முதல் புழு பூச்சி வரை எல்லா ஜீவராசிகளையும் மேலே சொன்ன எனக்குச் சொந்தமான சேதன அசேதனங்களைக் கொண்டு நான் சிருஷ்டிக்கிறேன் என்று வ்யஷ்டி சிருஷ்டியைச் சொல்லுகிறான். அதாவது முதலில் ப்ரஹ்மாவைப் படைத்து அதன் மூலம் தேவும் எப்பொருளும் படைக்கப் படுகின்றன என்கிறான்.

**உதாரணம் :** ஒரு மோட்டார் வண்டி செய்யும் தொழிற் சாலையில், முதலில் அவ்வண்டிக்கு வேண்டிய பல பாகங்களையும் என்ஜின்களையும் தனித்தனியாகத் தயார் செய்து வைத்துக் கொள்ளுவர். பிறகு அவைகளில் ஒவ்வொன்றிலும் ஒன்றை எடுத்துச் சேர்த்து, வண்டியை உருவாக்குவர். அது போல பகவான் முதலில் எட்டு விதமான அசேதனப் பொருள்களை தன் மூலப்ரக்ருதியிலிருந்து படைத்து, ஜீவசமூகத்துடன் இணைத்து, உலகைப் படைகின்றான். ஆதலால் இவ்வுலகெல்லாம் அவன் விபூதி, அதாவது அவனுடைய சொத்து, அவனே உலகுக்கெல்லாம் ஸ்வாமி.

**அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரளயஸ் ததா:** உலகையெல்லாம் படைப்பவன் நானே; அவைகளின் லயத்திற்கும் காரணம் நான். அதாவது உலகெல்லாம் என்னிடமிருந்து உண்டாகி என்னிடமே லயமடைகின்றன. உலகுக்கு உற்பத்தி ஸ்தானமும் நான்; லயஸ்தானமும் நான் என்கிறான்.

உலகின் ஸம்ஹார கர்த்தாவே மேலான தெய்வம் என்று பொருள் தோற்ற ஒரு வேத வாக்யம் உள்ளது. ஆதலால், உலக ச்ருஷ்டிக்கு நான் எப்படி கர்த்தாவோ, அதே போல அதின் ஸம்ஹாரத்திற்கும் நானே கர்த்தா என்கிறான். ச்ருஷ்டி கர்த்தா எனச் சொல்லப்படும் ப்ரஹ்மாவுக்கும் ச்ருஷ்டி கர்த்தா நான்; ஸம்ஹார கர்த்தா எனப்படும் சிவனுக்கும் ஸம்ஹார கர்த்தா நான் என்கிறான் கண்ணன்.

முக்காலத்திலும் உள்ளவை சத்யம். ஒருக்கால் இருந்து மற்றொருக்கால் அழிவது மித்யை, பொய். உலகம் ஒரு சமயம் தோன்றி இருந்து, ப்ரளய காலத்தில் அழிந்து விடுகிறது. ஆதலால் உலகம்

மித்யை, பொய் என்பர் சிலர். இங்கே பகவான் உலகம் எக்காலத்திலும் உள்ளதே. என்னிடமிருந்து உண்டாகி என்னிடமே வந்து சேருகிறது. ஆதலால் உலகம் சத்யம்; மித்யையல்ல என்பதை தெளிவாகக் கூறியிருக்கிறுன்.

வேதமும் உலக ப்ரளயத்தைச் சொல்லும்போது, முதலில் பூமி தண்ணீரில் கரைந்து அதில் லயத்தை அடைகிறது; அந்த தண்ணீர் அக்நியில் லயத்தை அடைகிறது. அப்படியே அக்நி காற்றிலும், காற்று ஆகாயத்திலும், ஆகாயம் மஹத் தத்வத்திலும், மஹத் அவ்யக்தத்திலும், அவ்யக்தம் அக்ஷரத்திலும், இப்படி ஒன்று மற்ருென்றில் லயித்து (சேர்ந்து) முடிவில் உலகம் யாவையும் தமஸ்ஸில் லயமடைந்து, அந்த 'தமஸ்' என்ற சொல்லுக்குப் பொருளான உலகம், பரமனை ஸர்வேச்வரனிடம் 'ஏகீபவதி''. ஒருமித்த பாவத்தை அடைகிறது. அதை ச்ருஷ்டி காலத்தில் வெளி நாடு காண பகவான் மறுபடியும் படைக்கிறுன். இரண்டு தத்வங்கள் உள்ள இடத்தில்தான் ஏகீ பாவத்தை (ஒன்றைப்போல் மற்ருென்று) என்று சொல்ல முடியும். 'ஏகீ பவதி' என்பதினுல் உலகம் அழிவதில்லை. பகவானுடன் ஒன்றைப்போல சேர்ந்திருக்கிறது; ஆதலால் உலகம் என்றுமுளது, நித்யமானது, சத்யம் என்பது தேறுகிறது. ஜீவன் அணு ஸ்வரூபன். தமஸ்ஸைக் காட்டிலும் சிறியவன். ஆதலால் ஜீவ சமூகம் எதிலும் லயத்தை அடைவதில்லை. உலகின் பல மாறுதலிலும் ஜீவன்கூடியிருந்து பகவானிடம் ஒன்றிக் கிடக்கிறுன். ச்ருஷ்டிக்கும் போது உலகையும் ஜீவனையும் பகவான் தன்னிடமிருந்து வெளிப்படுத்துகிறுன். இதுவே தத்வம், உண்மை.

"மத்த: பரதரம் நான்யத் கிஞ்சித் அஸ்தி தனஞ்சய"
மயி ஸர்வம் இதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணு இவ ‖ 7 ‖

அர்ஜுன! என்னைவிட உயர்ந்த தத்வம் உலகில் எதுவுமில்லை.

(அபரம்-தாழ்ந்தது; பரம்-உயர்ந்தது; பரதரம்-எல்லாவற்றிலும் உயர்ந்தது.) அபரம்-அறிவில்லாத அசேதனப் பொருள். பரம்-அதைக் காட்டிலும் மேலான அறிவுள்ள ஜீவாத்மா பரதரம்-ஜீவனைக் காட்டிலும் மேலான ஸர்வஜ்ஞனை பரமாத்மா என்பதே பொருள்.

ஸர்வ காரணத்வத்தாலும், ஸர்வ ஸ்வாமித்வத்தாலும், தன் மேன்மையைக் கூறுகிறுன் இங்கே. ஜ்ஞான, சக்தி, கல்யாண குணங்களினுலும் நானே மேன் பட்டவன் என்பதைக்

கண்ணன் கூறுகிறான் என்பது ஸ்ரீராமாநுஜரின் கருத்து. எவ்வகையிலும் என்னைவிட மேற்பட்டவன் எவ்வுலகிலும் இல்லை என்கிறான்.

சிலர் கூறுவதுபோல், மற்ற பொருள்கள் எதுவுமில்லை, ப்ரஹ்மம் ஒன்றே உண்மையாக உள்ளது என்று இங்கு கண்ணன் கூறவில்லை. மற்றப் பொருள்களை வைத்தே என்னைவிட மேற்பட்ட பொருள் உலகில் எதுவுமில்லை என்கிறான். இங்கு 'அந்யத்', 'பரதரம்', 'கிஞ்சித்', என்கிற மூன்று பதங்களினால், மற்றவைகளும் உண்டு என்னும் விசிஷ்டாத்வைத மதமே கண்ணனின் கருத்தாகக் கூறப்படுகிறது.

ஸத்வ ரஜஸ் தமோ குணங்களே உலகமாக பரிணாமத்தை அடைகின்றன என்கிற சாங்கிய மதமும், மும்மூர்த்திகளிருக்கின்றனர் என்கிறதையும் மும்மூர்த்திகளும் சமம் என்பதையும், அதாவது ப்ரஹ்மா, விஷ்ணு, சிவன் என மூன்று தெய்வங்களும் உண்டு ; அம் மூன்றும் சமம் என்று சொல்லுகிறவரின் பக்ஷமும், இங்கு கிருஷ்ணனால் கண்டிக்கப் படுகிறது.

7. (ii) மயி ஸர்வம் இதம் ப்ரோதம் ஸூத்ரே மணி கணா இவ-

இதுவரையில், தன் ஸர்வ காரணத்வ, ஸர்வ ஸ்வாமித்வ, ஞான, சக்தி கலியாண குணங்களாலேயும் தானே மேன்பட்டவன்; தனக்கு ஒத்தார் மிக்கார் எங்குமில்லை என்பதைச் சொன்னான். இதில் ஸர்வ தாரகத்வத்தாலும், அதாவது உலகிலுள்ளவற்றையெல்லாம் தரிக்கும் தன் தன்மையினாலும், தானே உயர்ந்தவன் என்பதைக் கூறுகிறான்.

ஒரு நூலில் கோக்கப்பட்டிருக்கும் மணிகளை எப்படி அந்த நூல் தரிக்கிறதோ, அதேபோல உலகம் யாவையும் என்னாலேயே தரிக்கப்பட்டிருக்கிறது.

மாலையிலுள்ள நூல் நம் கண்ணுக்குப் புலப்படுவதில்லை. ஆனால் அந்த நூலே மணிகளை தரிக்கிறது. அதுபோல பகவான் நம் கண்களுக்குப் புலப்படாமலிருந்து இந்த உலகத்தை தரிக்கிறான். ஒரே நூல் எல்லா மணிகளையும் தரிப்பதுபோல, ஸர்வேச்வரன் ஒருவனே உலகுக்கெல்லாம் தாரகம்.

நூல் மணிகளுக்கு ஆதாரமாயிருக்கிறதே ஒழிய, மணிகளால் நூலுக்கு ஆதாரமில்லை. அதேபோல உலகுக்கெல்லாம் பகவான் ஆதாரமே ஒழிய, உலகம் பகவானுக்கு ஆதாரமாகாது என்பது போன்ற உண்மைகளை இந்த உதாரணத்தைக் கொண்டு நாம் அறியலாம்.

ரஸோzஹமப்ஸு கௌந்தேய ப்ரபாzஸ்மி சசிஸூர்யயோ: ।
ப்ரணவ: ஸர்வவேதேஷு சப்த: கே பௌருஷம் ந்ருஷு ‖ 8 ‖

புண்யோ கந்த: ப்ருதிவ்யாம்ச தேஜச்சாஸ்மி விபாவஸௌ ।
ஜீவநம் ஸர்வபூதேஷு தபச்சாஸ்மி தபஸ்விஷு ‖ 9 ‖

பீஜம் மாம் ஸர்வபூதாநாம் வித்தி பார்த்த ஸநாதநம் ।
புத்திர் புத்திமதாம் அஸ்மி தேஜஸ்தேஜஸ்விநாம் அஹம் ‖ 10 ‖

பலம் பலவதாஞ்சாஹம் காமராகவிவர்ஜிதம் ।
தர்மாவிருத்தோ பூதேஷு காமோzஸ்மி பரதர்ஷப ‖ 11 ‖

அர்ஜுன! தண்ணீருக்கிருக்கும் ருசி நான். சந்திர சூரியர்களுக்குள்ள காந்தி நான், வேதத்தில் ப்ரணவமாகவும். ஆகாயத்தின் ஒலியாகவும், புருஷர்களின் பௌருஷமாகவும், பூமிக்குள்ள நல்ல வாசனையாகவும், நெருப்பின் எரியும் சக்தியாகவும், நான் இருக்கிறேன்.

எல்லா ஜீவராசிகளின் பிராணனுகவும், தபஸ்விகளின் தபஸ்ஸாகவும் நானிருக்கிறேன். எல்லா உயிர்களுக்கும் அநாதி காரணன் நான் என்பதை நீ அறிவாய்,

புத்திசாலிகளின் புத்தியும், பராக்ரமும் நானே. பலசாலிகளின் காமக்ரோதமற்ற பலமும் நான், எல்லோருடைய தர்ம விரோதமற்ற காமமும் நான். அதாவது எனக்கு உடலாய், என் உடைமையாய் இருக்கும் எல்லாப் பிராணிகளிடத்தும் அந்தந்த குணங்களோடு நானிருக்கிறேன்.

இங்கே சொல்லப்பட்டிருக்கும் குணங்கள் சக்திகள் எல்லாம் அசேதனப் பொருள்கள். அதாவது அறிவில்லாதவை. ஈச்வரனே பரமசேதனன், ஸர்வஜ்ஞன், எல்லாம் அறிந்தவன். அறிவேயில்லாத இந்த அசேதன தத்வங்களும் அறிவு நிரம்பப் பெற்ற பகவானும் ஒன்று என பொருள் சொல்வது எப்படிப் பொருந்தும்? ஆதலால் இங்கு சொல்லப்பட்ட குணங்கள், சக்திகள் எல்லாம் அந்தந்த பொருள்களுக்கு இருக்கட்டும் என்பது அவன் சங்கல்பம்

(இச்சை) என்பதே சரியான பொருளாகும். அவைகளெல்லாம், அவன் இட்ட வழக்கு என்பதேயாகும். எப்படி படைத்தல் காத்தல், அழித்தல் எல்லாம் அவன் அதீனமோ, அதேபோல, அவைகளின் குணம், சக்தி, ப்ரவர்த்தி, நிவர்த்தி (மூளுதல் மீளுதல்) எல்லாம் அவன் சங்கல்பத்தினாலேயே உண்டாகின்றன. அதாவது அவையெல்லாமும் பகவான் இட்ட வழக்கேயாம்.

உபநிஷத்தில் பேத (வேற்றுமை), அபேத (ஒற்றுமை), கடக (வேற்றுமையில் ஒற்றுமை) என மூன்று விதமான ச்ருதிகள் உள்ளன. அவைகளின் பொருளையே கண்ணன் கீதையில் அருளிச் செய்கிறான். பேத ச்ருதியில் சித் அசித் ஈச்வரன் என மூன்றும் தனிப்பட்ட தத்வங்கள் எனப்படுகிறது. அபேதச்ருதி அம்மூன்றும் ஒன்று என பொருள்படும்படி சொல்கிறது. கடகச்ருதி இம்மூன்றும் ஒன்று என்றும் பலவென்றும் 'உரைக்கலாம்படி மேற் சொன்ன இரண்டு சுருதியின் பொருளின் ஒற்றுமையைக் காட்டுகிறது.

கண்ணன் இந்த அத்யாயத்தில் 'பூமி ராபோ' என்கிற சுலோகம் முதல் 'தார்யதே ஜகத்' முடிய அசேதனம், சேதனம், பரமன் மூன்று தத்வங்களும் தனிப்பட்டவையென்று பேத சுருதியின் கருத்தையே சொல்லியிருக்கிறான். ''மயி ஸர்வம் இதம் ப்ரோதம்'' என்னும் சுலோகத்தில் ஒருவகையில் அவைகளை ஒன்று என்றும், மற்றொரு வகையில் பல என்றும் சொல்லலாம்படி கடக சுருதியின் பொருளைக் கூறியுள்ளான். இந்த நான்கு சுலோகங்களில், எல்லாம் தனக்கு சரீரமாய், தனக்கு விசேஷணமாய் (உரிமைப் பொருளாய்) கொண்ட ஆத்மாவான பகவான் தான் ஒருவனே தத்வம்; மற்றவைகளைச் சொல்லும் சொற்களெல்லாம் அவன் ஒருவனையே குறிக்கும் என்று அபேத ச்ருதியின் பொருளையே கண்ணன் அருளிச் செய் கிறான்.

**யே சைவ ஸாத்விகா பாவா ராஜஸாஸ் தாமஸாச்ச யே |**
**மத்த ஏவேதி தாந் வித்தி ந த்வஹம் தேஷு தே மயி || 12 ||**

ஸத்வ ரஜஸ் தமோ குணங்களால் ஆன எல்லாப் பொருள்களும் என்னிடமிருந்தே உண்டானவை.

உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் ஸத்வ ரஜஸ் தமஸ்ஸான முக்குணங்களை உடையவை; ஒவ்வோரு பொருளுக்கும் இம்மூன்றில் ஒவ்வோரு குணம் மேலிட்டிருக்கும். எந்தக் குணம் மேலிட்டிருந்தாலும் அவை யெல்லாம் என்னிடமிருந்தே உண்டானவை என்கிறான் கண்ணன்.

அஹம் து தேஷு ந தே மயி அவைகளில் நானில்லை; அவைகள் என்னிடமிருக்கின்றன என்கிறான்.

வாசுதேவன், நாராயணன், விஷ்ணு என்கிற திருநாமங்கள் பகவான் எங்கும் நிறைந்தவன்; எப்பொருளிலும் இருப்பவன் என்னும் பொருளையே குறிக்கின்றன. அப்படியிருக்க, "நான் அவைகளில் இல்லை" என்கிறானே, அது எப்படிப் பொருந்தும்?

நம் உடலில் ஜீவனிருக்கிறான் என்று சொல்லலாமே ஒழிய ஜீவனில் உடலிருக்கிறது என்று எப்படிச் சொல்லக் கூடும் எனில், உடலை விட்டு ஜீவன் விலகினால், அவ் உடல் அழிந்து விடுகிறது. ஜீவனாலேயே உடல் தரிக்கப்பட்டிருப்பதினால், ஜீவனில் உடலிருக்கிறது என்று சொல்லலாம்.

உடலில்லாமல் ஜீவன் எப்போதும் இருப்பவனுமல்லன், ஆனால் பகவனுக்கும் உலகுக்கும் அப்படிப்பட்ட தொடர்பு சொல்வதற்கில்லை. உலகில்லாமல் பகவான் இல்லை என சொல்ல முடியாது. பகவான் உலகை தரிக்கிறானே ஒழிய உலகம் அவனுக்கு தாரகமில்லை என்பதைப் பற்றி அவைகள் என்னை பற்றியிருக்கின்றன, என்னை தாரகமாக உடையன, எனக்கு அவை தாரகமில்லை என்பதையே தான் அவைகளில் இல்லை என்கிறான். மற்ற எந்த வஸ்துவினாலும் பகவனுக்கு ஒன்றும் ஆக வேண்டியதில்லை என்னும் சிறப்பை, ஸர்வ ஸ்வதந்திரன் என்பதையே கிருஷ்ணன் இங்கு அருளிச் செய்கிறான்.

**த்ரிபிர்குணமயைர் பாவைரேபி: ஸர்வமிதம் ஜகத் ।**
**மோஹிதம் நாபிஜாநாதி மாமேப்ய: பரம்அவ்யயம் ॥ 13 ॥**

இயற்கையின் (ப்ரக்ருதியின்) ஸத்வ ரஜஸ் தமஸ்ஸான முக்குணங்களால் எல்லாப் பிராணிகளும் மயக்கமுற்று இருப்பதால், எல்லாப் படியாலும் மேம்பட்ட நித்யனான என்னை எவரும் அறிகிறதில்லை.

இப்படி, ஸர்வகாரணனாயும், ஸர்வ ஸ்வாமியாயும், ஸர்வ ஸ்வதந்திரனாயுமுள்ள உன்னை ஏன் உலகில் உள்ளோர் உள்ளபடி அறிகிறதில்லை? என்கிற அர்ஜுனன் சந்தேகத்திற்குப் பதில் கூறுகிறான்.

உலக விஷயமெல்லாம் அபோக்யமாயும், அல்பமாயும், அழிவுள்ளவையாயும், துன்பத்தையே கொடுப்பவையாயுமிருந்தும்

ப்ரக்ருதியின் இயற்கையான ஸத்வ ரஜஸ்தமோ குணங்களில் கட்டுண்டு இடப்பதால், கலியாண குணக்கடலாய் இன்பகரனும், அறப்பெரியோனுமுள்ள என்னை எவரும் அறிகிறதில்லை என்கிறான்.

ப்ரக்ருதி என்பது ஸ்திரீ லிங்கம் (பெண்பால்) ஒரு கெட்ட நடத்தையுள்ள பெண் தன்னிடம் அன்பைச் செய்யும் ஒரு ஆணை மயக்கி அவன் மனைவி மக்களை மறக்கச் செய்வதுபோல, இந்த ப்ரக்ருதியினாலான முக்குணங்களின் மாயை எல்லாப் பிராணிகளையும் தன்னிடம் கட்டுப்படுத்தி அவர்களின் மாதா பிதா ப்ராதா ஸுஹ்ருத் சரணம் கதிர் நாராயண என்கிறபடி எல்லா உறவுமான பகவானை மறக்கச் செய்கிறது. (உடலை அழிக்கக்கூடிய அசித் ஸ்திரீ தத்வம்.)

இங்கு மாயை என்பதற்கு ப்ரக்ருதி என்றே பொருள். நம் சரீரம் ப்ரக்ருதியினாலானது. "மாயனூர் குயவன் செய்த மண்ணு பாண்டம் ஓடடா" என்பர் சித்தர். சரீரம் க்ஷணம் தோறும் மாறிக் கொண்டேயிருந்து முடிவில் அழியக் கூடியதே. ஆதி வியாதிகள் நிறைந்து மிகவும் அருவருக்கத் தக்கது. இவ்உடலின் உள்புறம் வெளிப் புறமாகத் தெரிந்தால் காக்கையை விரட்ட வேண்டியதாயிருக்கும். அப்படிப்பட்ட சரீரத்தில் நாம் எவ்வளவு விருப்பத்தோடு அன்பைச் செய்கிறோம். நமக்கு நம் சரீரம் ஒன்று தான் தெரிகிறது; அதனுள் உள்ள ஆத்மாவே தெரிவதில்லை; அப்படியிருக்க பரமாத்மாவை எப்படி அறிய முடியும்?

இயற்கையான இந்த மாயையைக் கடப்பது எப்படி ?

**தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா ।**
**மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாம் ஏதாம் தரந்தி தே ॥ 14 ॥**

அர்ஜுன ! ஸர்வேச்வரனான என்னால் உண்டாக்கப்பட்ட மாயையை யாராலும் கடக்கப்போகாது ; எவர் என் ஒருவனையே சரணமாகப் பற்றுகிறார்களோ, அவர்களே இந்த ப்ரக்ருதியான மாயையைத் தாண்டமுடியும்.

மாயை என்றால் ப்ரக்ருதி (இயற்கை) என்பது பொருள். மித்யை, பொய் என்பது பொருளன்று. இந்த மாயை அனாதியானது, என்னுடையது, ஸத்வ ரஜஸ் தமோ குணங்களாலானது. இதை எவராலும் கடக்கப் போகாது. எவராலும் என்பதினால் ப்ரஹ்மா, சிவன் போன்ற எத்தகைய அறிவு பெற்றவர்களாலும் தங்கள் முயற்சியினால் கடக்கப் போகாது. அவர்களும் இந்த மாயைக்கு

கட்டுப்பட்டவர்களே. ஒரு குருவி பிணைத்த பிணையை (கூட்டை) ஒருவராலும் அவிழ்க்கப் போவதில்லை. ஸர்வ சக்தி (பகவான்) கர்மாநு குணமாகப் பிணைத்த பிணையை (கட்டை) அவனையே கால்கட்டி அவிழ்த்துக் கொள்ள வேணுமித்தனே; அவன் காலைக் நாம் கட்டினால், நம் கட்டு தானே விலகும்.

மாமேவ யே ப்ரபத்யந்தே மயாம் ஏதாம் தரந்திதே—எவர் என்னைச் சரணமாக அடைகிறார்களோ. அவர்களே இந்த ப்ரக்ருதியைத் தாண்டுகிறார்கள். இறைவன் அடி சேராதார் பிறவிக்கடல் நீந்தார். ஸத்ய ஸங்கல்பனையும், மிக்க கருணையுள்ளவனையும், எல்லோரையும் காப்பவனையும் இருக்கிற என்னையே எவர் சரணமடைகிறார்களோ அவர்களே என்னுடைய முக்குணங்களாலான இப்பிறவிக் கடலைத் தாண்டுகிறார்கள். ஜீவனை பந்தப்படுத்துவதில் பகவான் எப்படி ஸத்ய ஸங்கல்பனோ அதுபோல் தன்னைச் சரணம் பற்றினவர்களை அதிலிருந்து விடுவிப்பதிலும் ஸத்ய சங்கல்பனேயாம்.

கருணை மிக்கவனான கண்ணன் ஜீவ ராசிகளை இப்படி ப்ரக்ருதியில் கட்டிவைப்பானேன்? பகவானிடம் பக்தி செய்ய திதிக்ஷை (பொறுமை) திருதி (வலிமை) விடா முயற்சி ஊக்கம் போன்ற சில குணங்கள் ஒருவனுக்கு இருக்க வேண்டும். இவைகளைப் பழக்குவதற்காகவே, அவன் ஜீவனை ப்ரக்ருதியில் கட்டி வைக்கிறான். ஒரு குழந்தைக்கு நடை பழக அது விரும்பும் சில பொம்மைகளை அதன் முன் வைக்கிறோம்; அதைப் பெற ஆசைப்பட்டு அக்குழந்தை தட்டுத்தடுமாறி நடக்கிறது; சில சமயம் கீழே விழுகிறது. அதைக் கண்டு நாம் சிரிக்கிறோம். இதுவே பகவானின் லீலை; விளையாட்டு. அதே போல பகவான் உலக விஷயங்களில் நமக்கு ருசியைப் பிறப்பிக்கிறான். அவைகளைப் பெற நாம் விடா முயற்சி, ஊக்கம், பொறுமை போன்ற குணங்களை அடைகிறோம். அவ் விஷயங்களிலேயே நாம் ஆழ்ந்து விடாதபடி, அவைகளில் துன்பங்களைக் கலசியே வைத்திருக்கிறான். ஆராய்ந்து பார்த்தால், கொண்ட பெண்டிர் மக்கள் உற்றார் செல்வம் இவைகளை அடைவதும் கஷ்டம், அவைகளைக் காப்பாற்றி அனுபவிப்பதும் கஷ்டம், அவைகளைப் பிரிவதும் துன்பம். "ஆதலால் பிறவி வேண்டேன்" என்றும், "வீடுமின் முற்றவும்" என்றும், ஆழ்வார்கள், விஷயப் பற்றுதலை அறவே விட வேண்டும் என்கிறார்கள். இவற்றை நம்மால் விடப் போகாது; அவனுடைய பொற்றாமரை மலர் போன்ற திருவடிகளை நாம் பற்றினால் அவன் அருளினாலே விடுவன விட்டு, மோக்ஷ இன்பம் பெறலாம்.

ஏன் எல்லோரும் பகவானைப்பற்றி ஆத்ம க்ஷேமம் பெறுவதில்லை ?

**ந மாம் துஷ்க்ருதிநோ மூடா: ப்ரபத்யந்தே நராதமா: ।**
**மாயயாऽபஹ்ருத ஜ்ஞாநா: ஆஸுரம் பாவம் ஆச்ரிதா ॥ 15 ॥**

அறிவே இல்லாத மூடர்கள், தாழ்ந்த நிலையில் உள்ளவர்கள், மாயையினால் ஜ்ஞானமற்றவர்கள், அசுரத் தன்மையுள்ளவர்கள் என நான்கு விதமான பாபிகள் என்னைச் சரணம் பற்றுவதில்லை.

பகவத் பக்தி செய்யத் தடையான பாபம் உள்ளவர் நான்கு வகைப்படுவர்.

மூடர்கள்- அறிவின்மையினால் பகவானுக்கே உரிய செல்வம் வீடு மனை மனைவி மக்களை தங்களுடையதாக எண்ணி, எம்பெருமானின் உணர்வு இன்றி, தாங்களே அனுபவிக்கிறவர்.

நராதமர் - ஈச்வரன் ஒருவன் உண்டு; அவன் அறப்பெரியோன் என்பதை அறிந்தும், அவனுக்கு பூஜை நமஸ்காரங்களைச் செய்யாதவர்கள்.

ஜ்ஞானஹீனர் - பகவத் ஞானமிருந்தும், அது உறுதியாக இல்லாதவர். கெட்ட புத்தியினால் அது உண்மையாகயிராது என்கிற சந்தேக புத்தியுள்ளவர்.

அசுரத் தன்மை உள்ளவர்.- ஈச்வரனுடைய பெருமையை அறிந்து, அவனிடம் அசூயைப்படுகிறவர். அவன் மேன்மையை இவர்கள் சகிப்பதே இல்லை. அவனிடம் பகையே கொண்டவர்.

இவர்களில் ஒருவரைக் காட்டிலும் ஒருவர் அதிக பாபம் செய்தவர்களாவர்.

பரம புருஷனைச் சரணம் பற்றி அவனிடம் பக்தியைச் செய்பவரும் நான்கு வகைப்படுவர். இவர்கள் புண்யம் செய்தவர்.

**சதுர்விதா பஜந்தே மாம் ஜநா: ஸுக்ருதிநோऽர்ஜுந ।**
**ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப ॥ 16 ॥**

அர்ஜுன! புண்யம் செய்து அதனால் என்னைப் பற்றுபவர் நான்கு வகைப்படுவர். இழந்த செல்வத்தைப்பெற இச்சிக்கிறவன், புதிதாய் பொருள்பெற வேண்டுகிறவன், தன் ஆத்மாவையே அனு

பவிக்க விரும்புகிறவன், என்னையே அடைய விரும்பும் ஜ்ஞானி என நான்கு வகைப்படுவர்.

ஆர்த்த: இழந்த செல்வத்தைப்பெற இச்சிக்கிறவன், அர்த்தார்த்தி—புதிதாகச் செல்வம் வேண்டுபவன் இவ்விருவரையும் ஒரு கோடியில் சேர்த்து விடலாம்.

ஜிஜ்ஞாஸு—கேவல நிலையில் உள்ளவன் தன் ஆத்மாவை அனுபவிக்க இச்சிக்கிறவன்.

ஜ்ஞாநி—பகவானின் திருவடிகளையே பெற விரும்புகிறவன். இப்படி நான்கு வகைப்படுவர்.

முதல் இருவரும் நிலையில்லா செல்வத்தை விரும்புகிறவர்கள். ஜிஜ்ஞாஸு என்னும் கேவலன், இந்த ப்ரக்ருதி மண்டலத்தை விட்டு நீங்கிய தன் சுத்த ஜீவாத்மாவையே அனுபவிக்க ஆசையுள்ளவன்; ஜ்ஞானியானவன், 'இதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம்' என்பதில் சொல்லப்பட்ட பகவானுக்கு அடிமையாக இருத்தலையே, இயல்பான ஆத்மாவின் தன்மையை அறிந்தவன். ஆகையால் ஜீவாத்மா தன் தரிசனத்தில் நிற்காமல், ஆத்மாவின் ஸ்வரூபத்திற்குச் சேர, பகவானுக்குத் தொண்டு செய்வதையே விரும்புகிறான்.

தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த ஏகபக்திர் விசிஷ்யதே ।
ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்தம் அஹம் ஸ ச மம ப்ரிய: ॥ 17 ॥

மேலே சொன்ன நால்வரில், என்னுடன் எப்பொழுதும் கூடியிருப்பவனும், என் ஒருவனிடமே பக்தி செய்பவனுமான ஜ்ஞானியே மேலானவன். எக்காரணத்தினால் ஜ்ஞானிக்கு நான் ப்ரியனோ, அதனாலேயே எனக்கும் ஜ்ஞானி ப்ரியன்.

முதல் மூவரும் என்னிடம் பக்தி செய்யும் போதும் தாங்கள் பெற விரும்பும் பலன்களையே நினைத்திருப்பர். பலனை பெற்ற பிறகு என்னை மறந்து, அப் பலன்களை அனுபவித்திருப்பர், ஜ்ஞானியோ எனில், என்னைப் பற்றும் போதும், என்னை அடைந்த பிறகும் என் ஒருவனிடமே அன்பைச் செய்திருப்பான். இப்படி அவன் என்னிடம் எப்போதும் ப்ரியமாக யிருப்பதைப்பற்றி, நானும் அவனிடம் ப்ரியமாக இருக்கிறேன்.

புருஷோத்தமனுகையால் ஜ்ஞானியின் அன்பை மேம்படுத்தி, தான் அவனிடம் செய்யும் அன்பைப் பெரிது படுத்தாமலும் சொல் கிறன். உண்மையில் பகவானுக்குத் தன் பக்தனிடம் உள்ள அன்பே அதிகம்; ஆயினும் அவனது உத்தமத் தன்மை, ஞானியிடம் அவன் செய்யும் அன்பைப் பெரிது படுத்தாமல் பேச வைக்கிறது.

**உதாரா: ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம் ।**
**ஆஸ்த்தித: ஸ ஹி யுக்தாத்மா மாமேவாநுத்தமாம் கதிம் ॥ 18 ॥**

இந் நால்வருமே உதாரர்கள். ஆனல் ஜ்ஞானியோ வெனில் எனக்கு ஆத்மா என்பது என் கருத்து. ஏனெனில் ஞானி என்னு டன் கூடியிருப்பதையே மேலான பயனுக எண்ணியிருப் பவனன்றே!

மற்றவர்கள் போல ஏதோ ஒரு பலனை விரும்பியாவது இவர் கள் என்னிடம் பக்தியைச் செய்வதனுல, இந்நால்வருமே உதாரர் கள். செல்வத்தையோ ஆத்மானுபவத்தையோ அவர்கள் பெற்றுப் போனுலும் எனக்கு "ஸர்வ பல ப்ரதாதா" வேண்டிற்றெல்லாம் தரும் கோதில் சீர் கண்ணன் என்கிற புகழைக் கொடுக்கிருர்கள். சாதாரணமாக உலகில் ஏற்பவனே இகழ்வதுண்டு; ஆனல் சிந்தித் துப் பார்த்தால் யாசகர் நம்மைத்தேடி வந்து, நிலையில்லா அற்ப பொருள்களை நம்மிடம் பெற்று அழியாத புகழையும், ஆத்ம நன்மை யையும் நமக்குத் தருவதினுல், அந்த யாசகர்களே, வள்ளல்களைக் காட்டிலும் மேம்பட்டவர் என்பது தேறும்.

ஜ்ஞாநித்வாத்மைவ மே மதம்:- ஜ்ஞானியோ எனில் எனக்கு ஆத்மா என்பது என் கொள்கை. அவனுலேயே என் ஸ்வரூபம் தரிக்கப்படு வதாக நான் நினைக்கிறேன். ஜ்ஞானியினுல் என்னை விட்டுப் பிரிந்து ஒரு க்ஷணமும் தரித்திருக்க முடிகிறதில்லை. ஆதலால் நானும் அந்த ஜ்ஞானியை விட்டு ஒரு க்ஷணமும் பிரிந்திருக்க சக்தனல்லேன். ஜ்ஞானியே எனக்கு ஆத்மா; என் ஆத்ம ஸ்தானத்திலிருப்பவன்.

**பஹூநாம் ஜந்மநாம் அந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்யதே ।**
**வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப: ॥ 19 ॥**

பல பிறவிகளின் முடிவில் தனக்கு எல்லாம் கண்ணன் என்கிற ஞானம் பிறந்து ஞானி என்னை அடைகிருன்; இப்படிப்பட்ட மஹாத்மா கிடைப்பது மிக அரிது.

ஆத்மாவின் உண்மை ஸ்வரூபத்தை அறிந்து என்னைப் பற்று கிறவன் இரண்டொரு நற்பிறவிகளில் தொடர்ந்தாற்போல் புண்யம் செய்து, முடிவில் ஞானி என்னைச் சரணம் அடைகிறான்.

வாசு தேவ ஸர்வம் ''பூமிராப:'' என்கிற சுலோகம் முதல் 'அஹங்கார இதீயம் மே' வரையில் சேதன அசேதனங்களெல்லாம் பகவானுடைய எனக்குச் சொத்து என்பது சொல்லப்பட்டது. 'அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத:' என்பது முதல் 'யே சைவ ஸாத்விகா பாவா' என்கிற ச்லோகம் முடிய காரிய தசை, காரண தசை (அதாவது ப்ரளய தசை, சிருஷ்டி தசை) இரண்டிலும் அசேதனம் சேதனம் இவ்விரு தத்வங்களும் பரம புருஷனுடைய அவன் இட்ட வழக்காய் உள்ளவை. அவைகளின் ஸ்வரூபம், ஸ்திதி (நிலைத்திருத்தல்) ப்ரவர்த்தி நிவர்த்தி, (ஒரு செயலில் மூளுதல், அதினின்றும் மீளுதல், எல்லாம் இறைவன் இட்ட வழக்கு, மற்ற எல்லா தத்வங்களைக் காட்டிலும் அந்த பரமாத்மாவே மேலானவன் என்றும் சொல்லப் பட்டது. இதை யெல்லாம் உள்ளபடி அறிந்தவனே இங்கு சொல்லப்படும் ஞானியாகிறான். இப்படிப்பட்ட மகாத்மா இவ் வுலகில் கிடைப்பது அரிது என்கிறான் கண்ணன்.

வாசுதேவ ஸர்வம்: உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன் என்கிற ஆழ்வார் பாசுரப்படி, தாரக, போஷக, போக்யங்களெல்லாம் தனக்குக் கண்ணன் என்று இருக்கும் ஞானியை இவ்வுலகில் காண்பது மிக அரிது, என்கிறான்.

**காமைஸ் தைஸ்தைர் ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்யந்தேऽந்யதேவதா: |**
**தம்தம் நியமமாஸ்த்தாய ப்ரக்ருத்யா நியதா: ஸ்வயா || 20 ||**

தங்கள் இயல்புக்குச் சேர ஆசை மிக்கவர் ஞானமில்லாமல் அவரவர் விதி வழி அவரவர் இறையவரை அடைவர்.

ஜீவனும் அநாதியானவன். காலமும் அநாதி, இந்த அநாதி யான காலத்தில் ஜீவன் பல பிறவிகள் எடுத்திருக்கிறான். ''திறந்து கிடக்கும் வாசல் தோறும் நுழைந்து புறப்படும் பதார்த்தம் போல'' என்பர் ஜீவனை. அந்நாள் நீ தந்த ஆக்கையின் வழி உழல்வேன், என்கிறபடி பல் உடல் தொறும் மூத்து, மூதாவியில் தடுமாறும் உயிர், உப்பில் ஊறின ஊறுகாய் போல், பல பிறவிகளிலும் விஷய சுகங்களில் ஊறியிருக்கிறான். அந்த இன்ப வாசனைகள் பிறவி தோறும் இவனைத் தொடர்ந்தே வருகிறது. இப்பிறவியிலும் இன்ப நாட்டம் கொண்டு ஆசை பெருகுகிறது; மதியின்மையினால் அவை களைப் பெற மற்ற தேவதைகளை அணுகி வணங்குகிறார்கள்.

**யோ யோ யாம் யாம் தநும் பக்த: ச்ரத்தயாऽர்ச்சிதும் இச்சதி ।**
**தஸ்ய தஸ்ய அசலாம் ச்ரத்தாம் தாம் ஏவ விததாம்யஹம் ॥ 21 ॥**

எவனெவன் தான் விரும்பும் விஷயங்களைப் பெற எனக்குச் சரீரமான தேவதைகளை வழிபட விரும்புகிறார்களோ, அவ்வழி பாட்டில் ருசியும் நம்பிக்கையும் மன உறுதியும் அவனுக்கு இருக்கும்படி நானே செய்கிறேன்.

இப்படி அவன் செய்வதற்குக் காரணம் என்ன! உலகில் பலர் தங்களையே தெய்வமாக மதித்து மமதையினால் மற்றொருவரையும் வணங்குவதில்லை; அவர்களும் திருந்தி பகவத் பக்தி செய்து ஆத்ம நன்மை பெறவேண்டும் என்கிற அருளினாலே அவர்களுக்கு முதன் முதலில் மற்ற தெய்வங்களையாவது வணங்கும் வழக்கத்தை ஏற்படுத்துகிறான். 'அங்காந் அந்யா தேவதா:' என்கிற சுருதியின் படிக்கு எல்லா தேவதைகளும் பரமனின் அங்கங்கள் (உடல்) இதை, அவர்கள் அறியாமல் மற்ற தேவதைகளைப் பூஜித்தாலும், உடலுக்குச் செய்யும் நன்மையினால் நம் ஆத்மா திருப்தி அடைவது போல இறைவன் உவந்த உள்ளத்தனாய் அவர்கள் விரும்பும் பலனை அளிக்கிறான். ஸத்வ குணமுள்ளவர்களே பகவானிடம் பக்தி செய்வர். ராஜஸ தாமஸ குணங்கள் உள்ளவர்களை அந்த தாமஸ ராஜஸ குணமுள்ள தெய்வங்களையே வழிபடச் செய்து, அவ்வழி யாக அக்குணங்களைப் போக்கி ஸத்வ குணத்தை வளர்த்து நாளடை வில் தன்னையே வணங்கும்படி செய்கிறான் பகவான்.

**ஸ தயா ச்ரத்தயா யுக்த: தஸ்யாராதநமீஹதே ।**
**லபதே ச தத: காமாந் மயைவ விஹிதாந் ஹி தாந் ॥ 22 ॥**

என்னால் வழங்கப்பட்ட சிரத்தையுடன் சிலர் மற்ற தேவதை களை ஆராதிக்கிறார்கள். அதனால் என்னாலேயே வழங்கப்பட்ட இஷ்டப் பலன்களைப் பெறுகிறார்கள்.

இவ்வுலகில் பகவத் பக்தி உண்டாவது அரிது. பகவானை அடையவேண்டும் என்கிற இச்சை சுலபமாக எல்லோருக்கும் உண்டாவதில்லை; மற்ற அற்பமானதும் நிலையற்றதுமான பொருள் களைப் பெற்று அனுபவிப்பதிலேயே எல்லோருக்கும் ஆசை அதிகம். அவைகளைப் பெற மற்ற தேவதைகளை யாக யஜ்ஞாதிகளால் பூசிக் கிறார்கள். அவனுக்குச் சரீரமான அத்தேவதைகளை ஆராதிப்ப தினால், ஆத்மாவான பகவான் மகிழ்ச்சி பெறுகிறான். அவர்கள் விரும்பும் பலன்களை அத்தேவதைகளின் மூலமே பகவான் அளிக் கிறான்.

**அந்தவத்து பலம் தேஷாம் தத் பவத்யல்ப மேதஸாம் !**
**தேவாந் தேவயஜோ யாந்தி மத்பக்தா யாந்தி மாமபி ॥ 23 ॥**

*மட்டமான புத்தியுள்ள அவர்கள் விரும்பும் பலன் அல்பமாயும் நிலையில்லாததாயும் முடிவுறும், அவர்கள் வழிபடும் அத்தேவதை களின் உலகத்தை அவர்கள் அடைவர், என்னிடம் பக்தி செய்ப வர்கள் என் இருப்பிடமான பரமபதத்தையே அடைகிறார்கள்.*

*இந்திராதி தேவதைகளை வழிபட்டாலும் பகவானையே நேராக ஆராதித்தாலும் அந்த பகவானே உகந்து பலனை அளிக்கிறான் என்று இருக்க, இவ்விரண்டிற்கும் இடையே வேற்றுமை மிக உண்டு. தேவதைகளை வணங்கிப் பெறுகிற பயன் அற்பமாயும் நிலை யற்றதாயும் ஆகும். ஸர்வேச்வரனிடம் நேருக்கு நேர் பக்தி செய்து பெறுவது அழியாச் செல்வமான மோக்ஷ இன்பமாயிருக்கும்.*

**அல்ப மேதஸாம் :** *ஈச்வரனின் மேன்மையை அறியாமல் மற்ற தேவதைகளே உயர்ந்தவர் என எண்ணியிருப்பவர் அல்ப புத்தி யுள்ளவர், அல்பமான பலனை விரும்புகிறவர்கள்.*

**தேஷாம் தத் பலம் அல்ப: அந்த வந்த:** *ராஜஸ தாமஸ குணமுள்ள அவர்கள அடையும் பயன் அல்பமாயும் முடிவை உடையதாயு மிருக்கும்.*

**தேவாந் தேவயஜோ யாந்தி, மத்பக்தோ யாந்தி மாமபி :** *மற்ற தேவதைகளை ஆராதிப்பவர், அந்த தேவதைகளின் லோகத்தை அடைவர். அந்த உலகுக்கெல்லாம் அழிவு உண்டு. அவர்கள் பலனுக்கும் முடிவு உண்டு. என்னை பக்தி செய்பவர் என்னையே அடைகிறார்கள். அதாவது மறுபிறவியில்லா மோக்ஷம் பெறு கிறார்கள்.*

**அவ்யக்தம் வ்யக்திமாபந்நம் மந்யந்தே மாம் அபுத்தய: !**
**பரம் பாவம் அஜாநந்தோ மமாவ்யயம் அநுத்தமம் ॥ 24 ॥**

*அர்ஜுனா! அறிவில்லாதார் என் மேன்மையை உணராமல் இதற்குமுன் நான் பிறவி எடுத்து, தங்களைப் போல சில காலம் மறைந்திருந்து, பிறகு கர்ம வசத்தினால் இப்பொழுது நான் பிறந் திருப்பதாக என்னை எண்ணுகிறார்கள்.*

*அர்ஜுனா! உலகில் உள்ள எல்லோரும் என்னைக் கிட்டி என் னிடம் அன்பைச் செய்து ஆத்ம நன்மையை அடைய வேண்டு*

மென்றே நான் வசுதேவருக்கு மகனாய் மனித வடிவத்துடன் என் இச்சையினால் தோன்றியிருக்கிறேன். நானே பரதெய்வம் என்பதை நான் அப்போதைக்கப்போது என் ஆச்சர்ய செயல்களால் அவர்களுக்குக் காட்டியுமிருக்கிறேன். ஆனால் மூட மனிதர்களுக்கு என் தெய்வத் தன்மை விளங்குவதில்லை என் உடலைப் பார்த்து நானும் அவர்களைப் போல ஒரு மனிதன் என்றே எண்ணுகிறார்கள். (பரம் பாவம் என்றால் மநுஷ்யத்வே பரத்வம்) உதாரணமாக, தர்ம புத்திரருக்கு கண்ணன் பரமாத்மா என்பது நன்றாகத் தெரிந்திருந்தும், போர் நடக்குமுன், பரமாத்மாவான அக்கிருஷ்ணன் எதிரில் இருக்க, காளியை வழிபட்டு வணங்கச் சென்றார்.

**நாஹம் ப்ரகாச: ஸர்வஸ்ய யோகமாயா ஸமாவ்ருத: ।**
**மூடோ'யம் நாபிஜாநாதி லோகோ மாம் அஜம் அவ்யயம் ॥ 25 ॥**

உறுப்புக்களுடன் கூடிய இவ்வுடலினால் (மாயையினால்) மறைக்கப்பட்டிருக்கும் நான் எல்லோருக்கும் ப்ராகாசிப்பதில்லை. ஆதலால், பிறவியற்றவனையும் முடிவற்றவனையும் உள்ள பரமனாக என்னை மூடர் அறிகிறதில்லை.

மானிட வடிவடிமே (மனிதனைப் போல தோற்றமே) இங்கு மாயை எனப்படுகிறது. யோகம் என்றால் சம்பந்தம். இந்த மாயையின் தொடர்பினால் என் தோற்றத்தை மட்டுமே கண்டு என்னை ஸர்வேச்வரன் என்று மூட ஜனங்கள் அறிவதில்லை என்கிறான். ஆனால் அக்ரூரர், விதுரர், மாலாகாரர் போன்ற மஹான்களை கிருஷ்ணன் தன் வடிவழகு, ஆத்ம குணங்களால் ஈடுபடுத்தி கிருஷ்ணன் தர்மம் ஸநாதனம் என்பதை நிலைநாட்டியிருக்கிறான்.

பிறக்கும் போதே பரத்வ சின்னமான சங்க சக்ராதிகளுடனே தோன்றியிருக்கிறான். குழந்தைப் பருவத்தில் பூதனை கொடுத்த கொடிய விஷத்தை அருந்தியும் இறவாமலிருந்திருக்கிறான்; இள வயதில் சாணூரன், முஷ்டிகன், கம்ஸன் முதலியவர்களை அனாயாசமாகக் கொன்றிருக்கிறான். ஏழு வயதில் பசி தாகமின்றி, சிறிதும் களைப்படையாமல், ஏழு நாள் கோவர்த்தன மலையை விரல் நுனியால் தாங்கி, எல்லா ஆயர்களையும் ஆவினங்களையும் காத்திருக்கிறான். தன் அழகிய திருவிளையாடல்களால் ஆயர் சிறுமியர்களைத் தன்னிடம் ஈடுபடச் செய்திருக்கிறான். இப்படி மனிதர்க்கரிய பல பெரும் செயல்களைக் கண்டும் அறிவிலி மக்கள் மாயையில் சிக்கி, அவனை ஸர்வேச்வரன் என்று தெரிந்து கொள்வதில்லை.

**வேதாஹம் ஸமதீதாநி வர்த்தமாநாநி சார்ஜுந ।**
**பவிஷ்யாணி ச பூதாநி மாந்து வேத ந கச்சந ॥ 26 ॥**

அர்ஜுனா! இதற்கு முன் இருந்தவைகளையும், இப்போது இருப்பவைகளையும், இனி இருக்கப் போவதையும் எல்லாம் நான் அறிவேன்; என்னையோ எனில் ஒருவரும் அறிவதில்லை.

நான் ஸர்வஜ்ஞன்; எல்லாம் அறிந்தவன். முக்காலத்திலுள்ளவற்றையெல்லாம் நான் அறிவேன். ஆனால் ப்ரஹ்மா, சிவன், இந்திரன் போன்றவர்கள் உள்பட யாரும் என்னை உள்ளபடி அறிகிறதில்லை.

**இச்சாத்வேஷஸமுத்தேந த்வந்த்வமோஹேந பாரத ।**
**ஸர்வபூதாநி ஸம்மோஹம் ஸர்கே யாந்தி பரந்தப ॥ 27 ॥**

எல்லா உயிர்களுக்கும் விஷயங்களில் உள்ள ஆசையே விரோதி, குளிர்ச்சி, வெப்பம், இன்ப துன்பங்கள் போன்ற இரட்டைகளே விருப்பு வெறுப்புக்கு விஷயங்கள். இவை அறிவின்மையினால் உண்டாகின்றன. இந்த அறிவின்மை (அஜ்ஞானம்) படைப்புக் காலமுதல் ஜீவன்களுக்கு இருக்கிறது.

ஜீவாத்மாக்கள் இன்று நேற்று உண்டானவர்களல்லர் அநாதியானவர்கள்; முதலும் முடிவு மற்றவர்கள். அவர்களின் புண்ய பாபங்களும் முதலறியாக் காலம் தொடங்கி இருந்து வருகின்றன. ஆதலால் பல பிறவிகள் எடுத்துக் கொண்டே வருகின்றனர். அந்தந்த பிறவிகளில் அவர்கள் செய்யும் புண்ய பாபங்களும் கணக்கில் அடங்கா. முற்பிறவியின் வாசனையை யொட்டி, ஒன்றில் விருப்பமும், மற்றொன்றில் வெறுப்பும் உண்டாகிறது. இது தான் இருள் சேர் இருவினை எனப்படும். தான் விரும்பியது கிடைத்தால் இன்பமும், இன்றேல் துன்பமும் உண்டாகிறது.

**யேஷாந் த்வந்தகதம் பாபம் ஜநாநாம் புண்யகர்மணாம் ।**
**தே த்வந்த்வமோஹ நிர்முக்தாঃ பஜந்தே மாம் த்ருடவ்ரதா: ॥ 28 ॥**

ஒருவனுக்குள்ள பாபம் குறைந்து புண்யம் அதிகரித்தால் கீழ் சொன்ன மோஹத்திலிருந்து விடுபடுகிறான். பிறகு என்னை அடைய உறுதியுடன் விரும்பி, என்னை அடைகிறான்.

பல பிறவிகளில் செய்த புண்ணியப் பயனாய் பகவத் பக்திக்குத் தடையான பாபம் விலகுகிறது; என்னை அடைவதே முக்கிய

பயனுக, உறுதியுடன் என்னிடம் பக்தி செய்து என்னை அடைகிறுன் என்கிறுன் கண்ணன்.

**ஜராமரணமோக்ஷாய மாம் ஆச்ரித்ய யதந்தி யே ।**
**தே ப்ரஹ்ம தத் விதுः க்ருத்ஸ்நம் அத்யாத்மம் கர்ம சாகிலம் ॥ 29 ॥**

மூப்பு மரணம் மறுபிறவி அற்று, தங்கள் பரிசுத்த ஆத்மாவையே அனுபவிக்க இச்சிக்கிறவன், ஆத்ம யாதாத்ம ஸ்வரூபத்தை அறிய வேண்டும்.

**ஸாதிபூதாதி தைவம் மாம் ஸாதியஜ்ஞும் ச யே விதுः ।**
**ப்ரயாணகாலேऽபி ச மாம் தே விதுர் யுக்தசேதஸः ॥ 30 ॥**

பகவானிடம் பக்தி செய்யும் நான்கு வகையினரும் அறிய வேண்டியவற்றையும், அவர்களின் அந்திம ஸ்ம்ருதி பற்றியும் சொல்ல ஆரம்பிக்கிறுன் கண்ணன். கேவலன் ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தையும் தான் செய்யவேண்டிய கர்மாக்களையும் அறியவேண்டும் என்கிறுன்.

செல்வம் வேண்டி பக்தி செய்பவன், அதிபூதம், அதி தெய்வம், அதியஜ்ஞும் இவைகளை அறிய வேண்டும். நால்வருமே என்னை தங்கள் மரண காலத்தில் நினைத்தல் வேண்டும். நித்ய நைமித்ய கருமங்களையும் இந்நால்வரும் செய்யவேண்டும் என்று சொல்லி, அடுத்த அத்யாயத்தில் இவைகளை விவரிக்கப் போகிறுன் கண்ணன்.

## ஸ்ரீ ஆளவந்தாரின் கீதா ஸங்க்ரஹம்

**ஸ்வயாதாத்ம்யம் ப்ரக்ருத்யா Z ஸ்ய திரோதிச் சரணுகதி:**
**பக்தபேத: ப்ரபுத்தஸ்ய சிரைஷ்ட்யம் சப்தம உச்யதே**

சேதன அசேதனங்களுக் கெல்லாம் தான் ஆத்மாவாகவும், காரணமாகவும், இருப்பதைப் பற்றியும், இந்த உண்மை மாயையினுல். மறைக்கப்படுகிறது என்பதையும், அந்த மாயை நீங்க தன்னிடம் சரணுகதி செய்ய வேண்டும் என்பதையும் சொல்லி, தன்னிடம் பக்தி செய்பவர் நான்கு வகைப்படுவர், அவர்களில் ஜ்ஞானியே மேம்பட்டவன் என்பதையும் இந்த ஏழாம் அத்யாயத்தில் கண்ணன் அருளிச் செய்தான்.

ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே சரணம்.

ஏழாம் அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீமத் பகவத் கீதை

## எட்டாம் அத்யாயம்

### அவதாரிகை

ஸ்ரிய:பதியான ஸர்வேச்வரனிடம் பக்தி உண்டாக அவனுடைய மேன்மையை நாம் உள்ளபடி அறிய வேண்டும். ஆதலால் கண்ணன் தன் பெருமையை யெல்லாம் ஏழாம் அத்யாயத்தில் விரிவாக அருளிச் செய்தான். தன் ஸர்வ காரணத்வம், ஸ்வாமித்வம், ரக்ஷகத்வம் இவை யெல்லாவற்றையும் விளக்கினான். தானே உலக ச்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் (ஆக்கல், காத்தல், அழித்தல்) இவைகளைச் செய்பவன்; ஆதலால் தானே அறப்பெரியோன் என்பதை விவரமாக எடுத்துரைத்தான்.

இப்படிப்பட்ட தன் மேன்மையை ப்ரக்ருதியான மாயையின் சம்பந்தத்தினால் எவரும் அறிகிறதில்லை. இந்த மாயை நீங்க, தன்னையே சரணம் பற்ற வேண்டும் என்பதைச் சொல்லி, இப்படி தன்னை சரணம் பற்றி உள்ளபடி அறிந்து, தன்னிடம் பக்தி செய்பவர் நான்கு வகைப்படுவர். அவர்களில் ஜ்ஞானியே மேன்பட்டவன்; அவன் எனக்குப் ப்ரியன் என்பதையும் கூறினான்.

இந்த எட்டாம் அத்யாயத்தில் தன்னிடம் பக்தி செய்யும் நால்வரும் அறிய வேண்டியவை, அவர்கள் பக்தி செய்யும் விதம், அவர்களின் அந்திமஸ்ம்ருதி (இறுதி நினைவு), இவைகள் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதைக் கூறி, மோக்ஷம் செல்லும் அர்ச்சிராதி மார்க்கத்தையும் விரிவாக அருளிச் செய்கிறான் கண்ணன்.

அர்ஜுன உவாச—அர்ஜுனன் கூறியது.

**கிம் தத் ப்ரஹ்ம கிம் அத்யாத்மம் கிம் கர்ம புருஷோத்தம!**
**அதிபூதஞ்ச கிம் ப்ரோக்தம் அதிதைவம் கிமுச்யதே || 1 ||**

**அதியஜ்ஞ: கதம் கோऽத்ர தேஹேऽஸ்மிந் மதுஸூதந ।**
**ப்ரயாணகாலே ச கதம் ஜ்ஞேயோऽஸி நியதாத்மபி: || 2 ||**

*புருஷோத்தம! அந்த ப்ரஹ்மம் என்பது என்ன? அத்யாத்மம் என்பது யாது? அதிதைய்வம் என்றால் என்ன? அதி பூதம் என்பது எதனை? கர்மா என்றால் என்ன? மதுசூதந! இச்சரீரத்தில் அதி யஜ்ஞம் என்பது யாது? நல்ல மனத்தை உடையவனால் மரண காலத்தில் நீர் எப்படி அறியப்படுகிறீர்?*

*ஜனன, மரணமற்று தன் ஆத்மாவையே அநுபவிக்க விரும்பும் கேவலன் உம்மை எவ்விதம் த்யானம் செய்ய வேண்டும். அவனுக்கு வேண்டிய அத்யாத்மம் கர்மா, என்பவை எவை? ஐச்வர்யத்தை விரும்புகிறவன் உம்மை எப்படி வழிபட வேண்டும். அவன் அறிய வேண்டிய அதிபூதம் அதி தெய்வதம என்பவை எவை? மூவரும் பொதுவாக அறியவேண்டிய அதியஜ்ஞன் என்பவன் யார். மூவரும் மரண காலத்தில் உம்மை எப்படி அறிய வேண்டும் என்று அர்ஜுனன் கண்ணனைக் கேட்கிறான்.*

பகவான் உவாச—கண்ணன் கூறிய பதில்

அக்ஷரம் ப்ரஹ்ம பரமம் ஸ்வபாவோzத்யாத்மம் உச்யதே ।
பூதபாவோத்பவகரோ விஸர்க: கர்மஸம்ஜ்ஞித: ॥ 3 ॥

*ப்ரஹ்மம் என்றால் ப்ரக்ருதி சம்பந்தமற்ற பரிசுத்த ஜீவன். ப்ரக்ருதி அத்யாத்மகம் எனப்படுவது. பிராணிகள் உண்டாக ரேதஸ்ஸை விடுவதே கர்மா எனச் சொல்லப்படும்.*

*ப்ரக்ருதியை விட்ட சுத்த ஜீவன் அக்ஷரம் எனப்படுபவன். இவன் நித்யன்; சரீரத்தைக் காட்டிலும் வேறுபட்டவன்; ஞான முள்ளவன்; எப்போதும் ஒருபடிப்பட்டிருப்பவன் மாறுதல் அற்றவன்.*

*அத்யாத்மம் என்பது ஸ்வபாவம் (இயற்கை) இது தான் ப்ரக்ருதி, இது ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்டது. ஜீவனின் உடல் இந்த ப்ரக்ருதியினாலானது. இந்த ப்ரக்ருதியின் (உடலின்) தொடர்பினாலேயே அஜ்ஞானம், கர்மம், வாசனை, ருசி முதலானவை ஜீவனுக்கு உண்டாகின்றன. இதை அறிந்து இந்த உடலைவிட முயல வேண்டும் கேவலன். கர்மா என்பது இவ்விடத்தில், ஆண் பெண் சேரும் போது, பெண்ணின் உடலில் ரேதஸ்ஸை விடுவதையே குறிக்கும். இது அருவருக்கத் தக்கது என்பதை அறிந்து கேவலன் (ஆத்மாவை அனுபவிக்க இச்சிக்கிறவன்) இதை விட்டுவிட வேண்டும்.*

ஒருவன் இறந்து மறுபிறவி எடுக்கும் வரையில் ஜீவன் ஐந்து வித மாறுதலை அடைகிறான் என்பதை பஞ்சாக்னி வித்யையில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஐந்து மாறுதலையும் ஐந்து ஹோமமாகக் கருதப்படுகிறது. இந்த ஐந்துமே ஜீவனின் ஸ்வபாவம் (இயல்பு) எனப்படுகிறது. சுவர்க நரகங்களை விட்டு ஒரு ஜீவன் ஒரு பெண்ணின் கருப்பையை அடையும் வரையில் ஸூக்ஷ்ம சரீரத்துடன் ஞான சூன்யமாக விளங்குகிறான். ஒரு பெண்ணின் கருப்பையில் வந்ததும் ஜீவனுக்கு ஞானம் உண்டாகிறது. ஆனால் கர்ப்பத்திலிருந்து பூமி சம்பந்தம் உண்டானதும் அஜ்ஞானமான இருள் அவனை மூடிக் கொள்கிறது. ஆதலால் குழந்தை பிறந்ததும் அழுகிறது.

இதில் ஆண் பெண் கலவியை ஐந்தாம் ஆஹுதியாகச் சொல்லப்படுகிறது. இது தர்மத்தின் கட்டளையாகவே யிருக்க வேண்டும். காமத்தினால் இச்சேர்க்கை கூடாது. இதைத் தெரிந்து இதில் பற்றின்மை உண்டாகி, இதை விட்டுவிட வேண்டும் கைவல்ய நிஷ்டன். சில ஆபாஸ வஸ்துக்களை க்ரிமி க்ரீடாதிகள் (ஈ, எறும்பு) மொய்ப்பது போல் தான் நாம் இந்த ஆபாஸமான ஸம்ஸாரத்தில் பற்று வைப்பது என்பதை அறிந்து, அதை விட்டு விட வேண்டும் ஆத்ம தரிசனத்தை விரும்புபவன்.

**அதிபூதம் க்ஷரோ பாவ: புருஷச்சாதிதைவதம் ।**
**அதியஜ்ஞோZஹமேவாத்ர தேஹே தேஹப்ருதாம் வர ॥ 4 ॥**

அர்ஜுன! அதிபூதம் என்பது இயற்கையினால் உண்டான வடிவம், ரஸம், மனம் (வாஸனை) முதலான குணங்களுடைய அறிவில்லா அசித் வஸ்துக்கள். இவை எப்போதும் மாறுதல் உடையவை. செல்வம் விரும்புகிறவன் இதை நினைத்திருக்க வேண்டும்.

அதி தெய்வம்: ப்ரஹ்மா, இந்த்ராதிகளைக் காட்டிலும் மேலான சுகத்தை அனுபவிக்க விரும்பும் ஆத்ம காமன், இவன் இந்த மேலான இன்பத்தை தன் ஆத்மானுபவத்தில் பெறப்போவதாக நினைத்திருத்தல் வேண்டும்.

அதியஜ்ஞம்—என்பது பகவானான நானே. நானே யஜ்ஞம் முதலான நல்ல கர்மாக்களினால் பூசிக்கப்படுபவன். நித்ய நைமித்ய கருமங்களைச் செய்யும் போதும், யஜ்ஞ யாகாதிகளால் இந்த்ரன் முதலிய தேவதைகளைப் பூசிக்கும்போதும், அவர்களுக்கு ஆத்மாவான நானே ஆராதிக்கப்படுவதாக முன் சொன்ன மூன்று வித பக்தர்களும் எண்ணவேண்டும்.

**அந்தகாலே ச மாமேவ ஸ்மரந் முக்த்வா களேபரம் ।**
**ய: ப்ரயாதி ஸ மத்பாவம் யாதி நாஸ்த்யத்ர ஸம்சய: ॥ 5 ॥**

*எவன் மரண காலத்தில் என்னையே நினைத்துக்கொண்டு உடலை விட்டு வெளிச்செல்கிறானோ, அவன் என்னுடைய தன்மையை அவன் நினைக்கிறபடி அடைகிறான். இதில் சந்தேகமேயில்லை.*

*இதுவும் மூன்றுவித பக்தர்களுக்கும் பொதுவானது. தன் உடலைவிட்டு ஜீவன் பிரியும்போது, வேறொன்றையும் நினையாமல் பகவானையே நினைத்திருக்க வேண்டும். பகவானை அண்டாதிபதியாக (செல்வந்தனாக) அச்சமயம் நினைத்திருந்தால், அந்த ஜீவன் அடுத்த பிறவியில் செல்வத்தை அடைகிறான். ஆத்மாநுபவத்தை நினைத்திருந்தால் அதையே பெறுகிறான். பகவானே தனக்கு எல்லாமாக நினைத்து பிராணனை விடுபவன் பகவானையே அடைகிறான்.*

*இங்கு மத்பாவம் என்பதற்கு, "என் தன்மை" என்பதே பொருள். பகவானாகவே ஆகிவிடுகிறான் என்று சிலர் கூறும் பொருள் பொருந்தாது. பல ஈச்வரர்கள் இருப்பதாக தேறிவிடும். இது சாஸ்த்ர விரோதம். ஆதலால் இது சரியான பொருளல்ல.*

*மேலும், இங்கு மூன்று வித பலன்களை விரும்பும் மூன்று வித பக்தர்களைப் பற்றி, கண்ணன் சொல்லி வருகிறான். இவர்கள் எல்லோரும் பகவானாக ஆகிவிடுகிறார்கள் என்று சொன்னால், அவர்கள் பெறும் பலன்களில் வேற்றுமை இல்லாமல் போகும். ஆதலால் மரண காலத்தில் எதை அடைய விரும்பி, பகவானை அந்த குணங்களுடையவனாக ஒருவன் நினைக்கிறானோ, அந்த குணத்தைப் பற்றிய நினைவுக்கு ஏற்ப பயனை அடைகிறான் என்பதே சரியான பொருள்.*

**யம்யம் வாऽபி ஸ்மரந் பாவம் த்யஜத்யந்தே களேபரம் ।**
**தம்தம் ஏவைதி கௌந்தேய ஸதா தத்பாவ பாவித: ॥ 6 ॥**

*மரண காலத்தில் எந்தெந்த விஷயத்தை நினைத்துக் கொண்டு ஒருவன் தன் உடலை விடுகிறானோ, அர்ஜுன! எப்பொழுதும் அவன் அந்த விஷயத்தையே நினைத்திருப்பதனால், அந்த விஷயத்தின் இயல்பையே அடைகிறான்.*

*மரண காலத்தில் உண்டாகும் நினைவுக்கு ஒரு சக்தி உண்டு; எதை நினைத்துக் கொண்டு ஒருவன் இறக்கிறானோ, அதையே*

அடுத்த பிறவியில் தொடர்ந்து அடைவிக்கும் சக்தி உண்டு. ஒருவன் வாழும் நாளில் எதை நினைத்திருக்கிறானோ, அதுவே மரண காலத்தில் நினைவுக்கு வரும்.

**தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு மாம் அநுஸ்மர யுத்ய ச ।**
**மய்யர்பிதமநோபுத்திர் மாமேவைஷ்யஸ்யஸம்சய: ॥ 7 ॥**

ஆதலால், அர்ஜுன! எல்லாக் காலத்திலும் என்னை நினைத்துக் கொண்டிரு; போர் செய், இப்படி என்னிடம் வைக்கப்பட்ட மனம், புத்தி இவைகளை யுடையவனாய்க் கொண்டு, என்னையே அடையப் போகிறாய்; இதில் ஐயமில்லை.

மரணாவஸ்த்தை என்பது மிகவும் துன்பமானது. அந்த சமயத்தில் பகவானை நினைப்பது எளிதில் ஏற்படாது; ஆகையால் நீ சுகமாக வாழும் நாட்களில் என்னை நினைத்துக் கொண்டே உன் வர்ணாசிரம தர்மங்களைச் செய்து வந்தால், இறுதி காலத்தில் உன் மனத்தையும் புத்தியையும் என்னிடம் வைத்து, நீ விரும்பும் பலனை அடைவாய்; இதில் சந்தேகமேயில்லை என்கிறான் கண்ணன்.

இங்கே அவன் இறுதி நினைவுக்குத் தக்க பலனை அடைவான் என்கிறானே ஒழிய, போரில் ஜயமடைவாய் என்று சொல்லவில்லை இதை நாம் உற்று நோக்க வேண்டும். கர்மம் செய்வது என்பது ஒன்று, பகவத் சிந்தனை மற்றொன்று, இரண்டையும் சொல்லி, பகவத் சிந்தனைக்கு மாத்திரம் பலனைக் கூறியுள்ளான். கர்மம் அங்கம் (உறுப்பு) பகவத் சிந்தனை அங்கி (உடல்) என்பது தேறுகிறது; இந்த இடத்திலும் "நீ பகவானாக ஆகிவிடுவாய்" என்று கண்ணன் சொல்லவில்லை.

**அப்யாஸயோகயுக்தேந சேதஸா நாந்யகாமிநா ।**
**பரமம் புருஷம் திவ்யம் யாதி பார்த்தாநுசிந்தயந் ॥ 8 ॥**

அர்ஜுன! அப்யாஸம் யோகம் இவைகளுடன் வேறு விஷயத்தில் மனம் செல்லாமல் பரம புருஷனை த்யானம் செய்பவன் அந்த பரம புருஷனையே அடைகிறான்.

நாள் தோறும் அப்யாஸமும் (பயிற்சியும்) யோகமும் செய்து வந்தால், மனம் மற்றொன்றையும் நாடாமல் அந்திம (இறுதி) காலத்தில் பரமபுருஷனான என் திவ்ய மங்கள வடிவழகையே நினைத்திருந்து என்னையே அடைவான் என்கிறான். மற்ற காலங்களில்

பகவத் சிந்தனை செய்தால்தான், மரண காலத்தில் அவனை நினைக்க முடியும் என்பதை கீழ் சுலோகத்தில் சொன்னார். அவனை சிந்திப்பது எப்படி? என்பதை இதில் கூறுகிறான்.

அப்யாஸம் என்றால் பயிற்சி. சாஸ்திரம் சொல்கிறபடி நாம் செயல் புரிவதை பகவத் சிந்தனையுடனிருந்து செய்து வர வேண்டும். அக்கருமங்களினால் (செயல்களினால்) பகவானே ஆராதிக்கப்படுவதாக நினைத்தல் வேண்டும். கருமம் செய்யாத காலத்திலும் பகவானையே சிந்திக்கப் பழகிக் கொள்ள வேண்டும்.

யோகம்: என்றால் குறித்த காலத்தில் ஓர் இடத்திலிருந்து பகவானை தைலதாரையைப் போல் (எண்ணெய் ஒழுக்குப் போல்) இடைவிடாது முறைப்படி தியானம் செய்ய வேண்டும் ந அன்ய காமி ந பகவத் சிந்தனை செய்யும் போது வேறு விஷயத்தை விரும்பாமல் இருக்க வேண்டும்.

பகவதாராதனம், சந்தியாவந்தனம் போன்ற கருமங்களைச் செய்யும் போது, பகவானிடம் உகப்போடு, (பக்தியுடன்) செய்ய வேண்டும். மற்ற காலங்களிலும் பகவானையே நினைத்திருக்கப் பழகிக் கொள்ள வேண்டும். எவ்வளவுக் கெவ்வளவு இப்படி பயிற்சி செய்கிறானோ, அவ்வளவுக்கு பகவானிடம் அன்பு (பக்தி) உண்டாகும். இப்படிப்பட்ட மனத்தினால் அநுசிந்தயா இறுதி காலத்தில் அவனை நினைக்க வேண்டும். பரமம்—எவனைவிட மேலானது இல்லையோ. திவ்யம்—ப்ரக்ருதியினாலாகாத திவ்ய மங்கள திருமேனியை உடைய புருஷம்—அந்த பகவானை, இறுதி நினைவினால் அடைவாய் என்கிறான்.

பகவானை நினைப்பது எவ்விதம்:

கவிம் புராணம் அநுசாஸிதாரம்
அணோரணீயாம்ஸம் அநுஸ்மரேத் ய: ।
ஸர்வஸ்ய தாதாரம் அசிந்த்யரூபம்
ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் ॥ 9 ॥

ப்ரயாணகாலே மநஸாऽசலேந
பக்த்யா யுக்தோ யோகபலேந சைவ ।
ப்ருவோர் மத்யே ப்ராணம் ஆவேச்ய ஸம்யக்
ஸ தம் பரம் புருஷம் உபைதி திவ்யம் ॥ 10 ॥

ஐச்வர்யார்த்தியின் (செல்வத்தை விரும்புகிறவனின்) இறுதி நினைவை (அந்திம ஸ்ம்ருதியை)ச் சொல்கிறான்.

நிறை ஞானத்தனும் (ஸர்வஜ்ஞனும்) முதலறிய முடியாதவனும் (அநாதியாயும்) எல்லாவற்றையும் ஆணையிட்டு ஆள்பவனும் (நியமிக்கிறவனும்), (அணுவான ஜீவனைக் காட்டிலும் ஸூக்ஷமனும்) கருதற்கரிய உயிர்களிலும் நுண்ணியனும், எல்லாவற்றையும் படைக்கிறவனாகவும், மற்ற எந்தப் பொருள்களுடனும் இணை என்று நினைக்கவொண்ணாத உருவுடையவனும், கதிரவனைப் போன்ற நிறத்தையுடையவனுமிருக்கிறவனை தமஸ இயற்கை மண்டலத்திற்கு அப்பாலுள்ள திவ்யமான பரம புருஷனை பக்தியோடும், யோக பலத்தோடும் தெளிந்த உள்ளத்தனாய் மரண காலத்தில், இருபுருவங்களின் நடுவில் பிராணனை வைத்து நன்றாக எவன் நினைக்கிறானோ, அவன் அந்த பரம புருஷனையே அடைகிறான்.

ஸர்வஸ்ய தாதாரம்— ஸர்வ ச்ருஷ்டி கர்த்தா.

அசிந்த்ய ரூபம்—நினைக்க வொண்ணாத வடிவம் உடையவன். அதாவது, நாம் உலகில் காணும் பொருள்களையிட்டு பகவானை சிந்திக்க முடியாது; மற்ற இனத்தவன். ஆதித்யவர்ணம்-சூரியனைப் போல ஒளி உள்ளவன்; தமஸ பரஸ்தாத்-உலகிற்கு காரணமாயுள்ள ப்ரக்ருதியை விட மேலான; சுத்த ஸத்வமயமான திருமேனியுடையவன். கருமத்திற்கு (வினைக்கு) வசப்படாதது; அழிவேயில்லாதது; நித்யமான ஒருவித குற்றமும் இல்லாதது. பல சூரியர்கள் சேர்ந்து உதித்தாற் போன்ற ஒளி நிறைந்தது அவனுடைய திருமேனி.

திவ்யம் பரம புருஷம் – இப்படிப்பட்ட மேலான பரமாத்மாவை பக்த்யா யோகம் பலேன யுக்த: யோக வலிமையுடன் அன்புடன்; அசலேந மநஸா, சலியாத உறுதியான உள்ளத்துடன், ப்ரயாண காலே புருவோமத்யே ப்ராணம் ஆவேச்யம்; மரண காலத்தில் இரண்டு புருவங்கள் இடையே உயிரை நிறுத்தி ய: ஸம்யக் அநுஸ்மரேதி: எவன் இப்படி பகவானை நன்றாக நினைக்கிறானோ ஸ:தம் உபைதி: அவன் அந்த பரமபுருஷனைப் போல செல்வந்தனாகிறான். ஆணையிட்டு ஆட் கொள்ளும் ஆற்றல் பெறுகிறான். செல்வத்தை விரும்புகிறவன் இவ்வாறாக இறைவனை இறுதி காலத்தில் நினைத்திருந்து, அவன் விரும்பும் செல்வத்தைப் பெறுகிறான்.

இனி, ஆத்மானுபவத்தை விரும்பும் கைவல்ய நிஷ்டனின் இறுதி நினைவு எவ்வாறு இருக்க வேண்டும் என்பதைக் கூறுகிறான்.

யதக்ஷரம் வேதவிதோ வதந்தி விசந்தி யத் யதயோ வீதராகா:
யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி தத் தே பதய் ஸங்க்ரஹேண
ப்ரவக்ஷ்யே ॥ 11 ॥

வேதம் அறிந்தவர் எந்த ப்ரஹ்மத்தைச் சொல்கிறார்களோ, காமக்ரோதம் விலக்ய சந்யாஸிகள் எந்த ப்ரஹ்மத்தை அடைகிறார் களோ, ப்ரஹ்மசர்ய விரதத்தை அநுஷ்டித்து எந்த ப்ரஹ்மத்தை அடைய விரும்புகிறார்களோ அப்படி அறிய வேண்டிய ப்ரஹ் மத்தை நான் உனக்குச் சொல்லுகிறேன்.

வேதத்தில் சொல்லப்பட்ட, உருவத்தால் மாறுதல் இல்லாத அக்ஷரத்தை (ப்ரஹ்மத்தை) வேத வித்துக்கள் கூறுகின்றனர். விஷயப் பற்று அற்ற சந்யாஸிகள் அந்த ப்ரஹ்மத்தை அடைய விரும்புகிறார்கள். சிலர் ப்ரஹ்மசர்ய வ்ரதத்தை கைப்பற்றி ஒருவித மாறுதல் இல்லாத அந்த ப்ரஹ்மத்தை அடைய விரும்புகிறார்கள். கேவலன் அனுபவிக்க விரும்புவது ஜீவனை. ஜீவனுக்கு ஒருவித மாறுதல் இல்லை. அதையே இவன் நிதானம் செய்ய வேண்டும். இங்கு ப்ரஹ்மம் என்பது பரிசுத்த ஜீவாத்மாவையே சொல்லு கிறது.

ஸர்வத்வாராணி ஸம்யம்ய மனோ ஹ்ருதி நிருத்ய ச ।
மூர்த்ந்யாதாயாzzத்மந: ப்ராணம் ஆஸ்த்திதோ யோக
தாரணாம் ॥ 12 ॥

ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரந் மாமநுஸ்மரந் ।
ய: ப்ரயாதி த்யஜந் தேஹம் ஸ யாதி பரமாம் கதிம் ॥ 13 ॥

புலன்கள் எல்லாவற்றையும் நன்றாக அடக்கி, விஷயங்களில் செல்லாமல், மனத்தை ஹ்ருதயத்தில் நிறுத்தி, தன் உயிரை தலை உச்சியில் வைத்து. பகவானை என்னையே நினைத்து சரீரத்தை விட்டுச் செல்லும் ஜீவன், உயர்ந்த கதியை அடைகிறான். அதாவது பரிசுத்த ஜீவாத்மாவை அநுபவிக்கப் பெறுகிறான்.

பிரத்யாஹாரம் - கண் முதலிய புலன்களை வெளி விஷயங்களில் ஈடு படாமல் அடக்குதல். தாரணை - சிந்திக்க வேண்டிய விஷயத் தில் மனத்தை ஊன்றி வைத்தல். தியானம் - வேறு விஷயம் கல சாமல் அந்த அத்மாவையே நினைத்திருத்தல். இப்படி யோகத்தின் மூன்று படிகள் உள்ளன.

அநந்யசேதா: ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யச: ।
தஸ்யாஹம் ஸுலப: பார்த்த நித்யயுக்தஸ்ய யோகிந: ॥ 14 ॥

இனி ஞானி பகவானை உபாஸிக்க வேண்டிய முறையைக் கூறு கிறான்.

அர்ஜுன! மற்றொன்றிலும் பற்றில்லாமல் என்னையே எப்பொழுதும் இடைவிடாது சிந்திக்கிற யோகிக்கு, நான் எளிதில் அடையக்கூடியவனாகிறேன்.

நித்யம் - யோகம் ஆரம்ப முதல் தினமும் ஸததம் - எப்பொழுதும் அநந்ய சேதஸாம் - மற்ற எதிலும் பற்றில்லாமல் ஸ்மரணம் - என்பதற்கு இங்கே ஞானம் என்பது பொருள்.

செல்வம் விரும்புகிறவர்களும் ஆத்மானுபவத்தை விரும்புகிறவர்களும், தங்கள் விருப்பத்தைப்பெற, செய்ய வேண்டியவை மிகவும் கஷ்டமானவை அவர்கள் பெறும் பலனோ அல்பமானது. ஜ்ஞானிக் கோவெனில் அவன் செய்ய வேண்டிய பகவத் சிந்தனம் ஆனந்தமாயிருக்கும். இவன் பெறும் பலனும் மிக உயர்ந்த அர்ஜுன! இப்படி என்னையே நினைத்திருக்கும் ஜ்ஞானி எளிதாய என்னை அடையும்படி நானே செய்கிறேன்.

பக்தி என்பது ஒரு ஜ்ஞான விசேஷமே. இந்த ஞானம் இருவகைப்படும். சப்த ஜன்ய ஞானம். அதாவது ஒரு ஆசார்யனிடத்தில் பகவானையும் அவன் ஸ்வரூபத்தையும் கேட்டு அறிவது.

ஸ்மரண ஜ்ஞானம் அப்படி கேட்டதை ஒரு தனி இடத்திலிருந்து வேறு விஷயம், கலசாமல் அன்போடு சிந்திப்பது பக்தி எனப்படும்.

ஸ்ரீசங்கராசாரியர் - சப்த ஜன்ய, அதாவது காதினால் கேட்டறிந்த ஜ்ஞானமே மோக்ஷம் முக்தி என்கிறார். கேட்டறிந்த ஜ்ஞானமே மோக்ஷ ஸாதனம்; பக்தி ஸாதனம் அல்ல என்கிறார்.

ஸ்ரீ ராமாநுஜர் :- இப்படிக் கேட்டறிந்து பகவானைப் பற்றியும் அவன் ஸ்வரூப ரூப குணங்களையும் ஒரு தனி இடத்திலிருந்து சிந்திக்கிற ஸ்மரண ஜ்ஞானமான பக்தியே மோக்ஷ ஸாதனம். காதினால் கேட்டறிந்த ஞானம் மோக்ஷ ஸாதனமாகாது என்கிறார். பகவானைச் சிந்திக்கும்போது அன்போடு சிந்திக்க வேண்டும். வேறு விஷயம் கலசாமல் சிந்திக்க வேண்டும். தன் தலைவனை விட்டுப் பிரிந்த ஒரு உத்தமத் தலைவிக்கு அவனைப் பற்றிச் சிந்திப்பதே இன்பமாயிருப்பது போல், பகவானைப் பற்றி சிந்திக்கிற சிந்தனம் ஜ்ஞானிக்கு ஆனந்தமாயிருக்கும்.

இந்த ச்லோகத்தில் ஜ்ஞானி தன்னை எப்படி தியானம் செய்ய வேண்டுமென்பதையோ, அவனுடைய இறுதி நிலையைப் பற்றியோ பகவான் கூறவில்லை; பகவத் சிந்தனை ஜ்ஞானிக்கு

இன்பமாயிருக்கும் என்பதை மாத்திரம் சொல்லியிருக்கிறன், மேலும் "தஸ்ய அஹம் சுலபம்" என்கிறனே ஒழிய, கீழே செல்வம் வேண்டுபவனுக்கும், ஆத்மானுபவத்தை விரும்புபவனுக்கும் சொன்னது போல, "யாதி பரமாம் கதிம்" என்பது போல இங்கே சொல்லவில்லை. ஏன்? இத்தகைய ஜ்ஞானியினிடம் நான் மேல் விழுந்து செல்கிறேன்; நான் அவனை வரிக்கிறேன் என்கிறன். கீழ் சொன்னது போல செல்வம் பெறுகிறர்கள், ஆத்மானுபவம் பெறுகிறர்கள் என்று பலனையும் இங்கு சொல்லாமல் ஜ்ஞானிக்கு நானே என்னைக் கொண்டுபோய் காட்டுகிறேன் என்கிறன். நம்மாழ்வார் சிறந்த ஜ்ஞானி; அவர் இருந்த புளிய மரத்தடிக்கே பகவான் தன்னைக் கொண்டு வந்து அவருக்குக் காட்டியிருக்கிறன்.

பகவான் எல்லோருடைய ஹ்ருதயத்திலும் சுலபமாயிருக்க, "என்னை அன்போடு சிந்திக்கிறவனுக்கு நான் எளியன்" என்பதின் கருத்து என்ன?

பகவானுக்கும் ஜீவனுக்குமுள்ள சரீர ஆத்ம உறவை இங்கு சொல்லவில்லை. "நாயம் ஆத்மா ப்ரவசனேந லப்யோ நமேதயா ந பஹுநா ச்ருதேந। யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய: தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே, தநூம் ஸ்வாம்॥ பரமாத்மா ப்ரவசனம், த்யானம், கேள்விஜ்ஞானம் ஆகியவற்றல் அடையத்தக்கவனல்லன்; இந்த பரமன் எவனை வரிக்கிறனே அவனுல் அடையத் தக்கவன்; அவனுக்கு, பரமாத்மா தனது வடிவத்தைக் காட்டுகிறன் 'எவனை பகவான் மேல் விழுந்து வரிக்கிறனே' என்கிறபடி ஞானியைத் தேடி ஓடுகிறன் என்பதே கருத்து.

நம் உடல், உடலைப் பற்றின மனைவி மக்கள் வீடு வாசல் இவைகளில் உள்ள அன்பு தமோ குணத்தால் உண்டாகிறது. இந்த தமோ குணம் அடங்கினல்தான், இவைகளில் பற்றைப் போக்கிக் கொள்ள முடியும். நம் முயற்சியால் இந்தப் பற்றை அதிகப்படுத்திக் கொள்ள முடியுமே ஒழிய, போக்கிக் கொள்ள முடியாது. பகவானை அன்போடு சிந்திக்கிறவனே, பகவானுடைய அருளினல் இச்சிற்றின்பத்தின் பற்றுதலைப் போக்கிக் கொள்ள முடியும். அப்படி தாமஸம், ராஜஸம் அடங்கி ஸத்வ குணம் மேலிட்டவனே பகவத் பக்தியைச் செய்து மோக்ஷம் பெறலாம். அவனை, பகவானே முன் வந்து, தன்னை அவன் அடையும்படி செய்கிறன்.

**மாமுபேத்ய புநர்ஜந்ம துக்காலயம் அசாச்வதம்।**
**நாப்நுவந்தி மஹாத்மாந: ஸம்ஸித்திம் பரமாம் கதா:॥ 15 ॥**

என்னை அடைந்த மஹாத்மாக்களோவெனில், உயர்ந்த பேற்றைப் பெறுகிறார்கள். அதாவது பகவானையே எல்லாமாகப் பெற்று வாழ்கிறார்கள். துன்பங்களுக்கு இருப்பிடமாயும் நிலை யற்றதுமான மறுபிறவியை அவர்கள் அடைவதில்லை.

என்னை உள்ளபடி அறிந்த மஹாத்மாக்கள், என்னிடம் அள வற்ற அன்பைச் செய்து, என்னைப் பிரிந்து ஒரு க்ஷணமும் தரிக்க முடியாது என்னிடமே எப்போதும் தங்கள் மனத்தை வைத்து, என்னையே சிந்தித்து, உயர்ந்த பயனான என்னையே அடைகிறார்கள்.

இதனால் மூக்தி தசையிலும் ஜீவனும் பரமனும் தனிப்பட்ட தத்வங்களாகவே பகவான் இங்கு கூறியிருக்கிறான். மோக்ஷ தசையி லும் பல ஜீவாத்மாக்கள் இருக்கிறார்கள் என்பதும் இதனால் தேறு கிறது. சம்சார தசையில் மாத்திரம் ஜீவன், பகவான் என இரண்டு தத்வங்களாகச் சொல்லப்படுகின்றன; முக்தி தசையில் எல்லாம் ஒன்று, (ப்ரஹ்மம் ஒன்றே உள்ளது) என்கிற அத்வைத மதக் கொள்கை, கண்ணன் கருத்துக்கு விரோதமானது. மோக்ஷ தசை யிலும் ஜீவாத்மாக்கள் பல என்பதும், அந்த ஜீவாத்மாக்களும் பகவானும் தனிப்பட்ட தத்வங்கள் என்கிற விசிஷ்டாத்வைத மதக்கொள்கையே இங்கு க்ருஷ்ணனால் கூறப்பட்டுள்ளது. (அடை பவர் பலர், அடையப்படுபவன் ஒருவன் ஆக இருவகைத் தத்வங்கள் மோக்ஷ தசையிலும் உள்ளன)

**ஆப்ரஹ்ம புவநால் லோகா: புநராவர்த்திநோ(அ)ர்ஜுந।**
**மாமுபேத்ய து கௌந்தேய புநர்ஜந்ம ந வித்யதே ॥ 16 ॥**

குந்தி புத்திரனே! ப்ரஹ்ம லோகம் உள்பட கீழ் உள்ள உலகம் அனைத்தும் அழிவை உடையவைகளே. (என் உலகமான பரம பதத்திற்கு எக்காலத்தும் அழிவேயில்லை). ஆதலால் என்னை அடைபவர்களுக்கு (பரமபதம் அடைபவர்களுக்கு) மீண்டும் பிறவி என்பதில்லை.

**ஆப்ரஹ்ம புவநால் லோகா:**-கீழ் ஏழு லோகம் மேல் ஏழு லோகம் கொண்டது ஓர் அண்டம். அண்டத்திற்கு அதிபதி ப்ரஹ்மா. செல்வத்தை விரும்பும் ஆர்த்தன் இந்த உலகங்களுக்குச் சென்று இன்பங்களை அனுபவிக்கிறான். இந்த உலகங்கள் அழியும் போது, இவர்கள் தங்கள் போகங்களை இழந்து, மறுபிறவியைப் பெறுகின் றனர்.

**மாமுபேத்யது** - ஸத்ய ஸங்கல்பனும், பரம காருணிகனும், ஜகத் உற்பத்தி, ஸ்திதி, லயத்திற்குக் காரணனும், ஸகல

கல்யாண குணங்கள் உடையவனுயுமுள்ள மாம் என்னை அடைபவர் களோ (பரமபதம் அடைபவர்கள்) மறுபிறவி அடைவதில்லை.

ஸஹஸ்ரயுகபர்யந்தம் அஹர் யத் ப்ரஹ்மணோ விது: ।
ராத்ரிம் யுகஸஹஸ்ராந்தாம் தேऽஹோராத்ரவிதோ ஜனா: ॥ 17 ॥

அவ்யக்தாத் வ்யக்தய: ஸர்வா: ப்ரவந்த்யஹராகமே ।
ராத்ர்யாகமே ப்ரலீயந்தே தத்ரைவாவ்யக்தஸம்ஜ்ஞகே ॥ 18 ॥

பூதக்ராம: ஸ ஏவாயம் பூத்வா பூத்வா ப்ரலீயதே ।
ராத்ர்யாகமேऽவச: பார்த்த ப்ரபவத்யஹராகமே ॥ 19 ॥

தேவ லோகத்தின் காலம் : பூலோகத்தின் ஆறு மாதம் உத்தராயணம். இது தேவர்களின் பகல்; தக்ஷிணாயனம் ஆறு மாதம் அவர்களின் இரவு. இப்படி நம் ஒரு வருடம் அவர்களுக்கு ஒரு நாள். இப்படி 365 நாட்கள் ஒரு வருடம். இப்படி 100 வருடமானதும், இந்திரனும் இந்திர லோகமும் மற்ற கீழ் உள்ள எல்லா உலகமும் அழிந்து விடுகின்றன. இது ஒரு யுகம். இதுவே நித்ய ப்ரளயம்.

ப்ரஹ்ம லோகத்தின் காலம் : தேவ லோகத்தின் ஆயிரம் சதுர் யுகம், ப்ரஹ்மாவின் பகல்; ஆயிரம் சதுர்யுகம் ஓர் இரவு. இப்படி 365 நாட்கள் பிரஹ்ம வருடம். இதப்படி 100 வருடமானதும் சதுர்முக ப்ரஹ்மாவும் அவர் உலகமும் கீழ் உள்ள எல்லா உலகங் களும் அழிந்து வீடுகின்றன.

ப்ரஹ்மாவின் இரவு வந்ததும் பூ லோகம், புவர் லோகம், ஸுவர் லோகம் போன்ற எல்லா உலகமும் அழிந்து ப்ரஹ்மனின் உட லில் லயத்தை அடைகின்றன அதாவது ஒன்றிக் கிடக்கின்றன. இது தான் நைமித்ய ப்ரளயம். அவருடைய பகல் வந்ததும் அவை களை முன் போலவே பிரமன் படைக்கிறுன்.

மஹாப்ரளயம் - ப்ரஹ்மாவின் 100 வயதானதும் பூ லோகம் முதல் ப்ரஹ்ம லோகம் உள்பட எல்லாம் அழிந்து வீடுகின்றன. இதுவே மஹாப்ரளயம் எனப்படும். அப்போது அவையெல்லாம் ஆதிபுருஷனை பகவானிடம், அடங்கிக் கிடக்கின்றன. பிறகு, தன் க்ருபையினுலேயே "பஹுஸ்யாம் ப்ரஜாயே யேதி", அவை பழையபடி உண்டாகட்டும் என்கிற தன் ஸங்கல்பத்தினுல் (எண்ணத்தினுல்) அவைகளை ஸர்வேச்வரன் மறுபடியும் படைக் கிறுன். பகவானுடைய தேசமான பரமபதத்திற்கு கால எல்லையே இல்லை; என்றைக்கும் அது அழிவதேயில்லை. ஆதலால், என்னை அடைந்தவர்களுக்கு மறுபிறவி இல்லை; மற்ற லோகங்களுக்குச் செல்பவருக்குப் பிறவி உண்டு என்கிறுன்.

வேதம், இந்த மஹாப்ரளயத்தை சொல்லும் வரிசை என்ன எனில்,: ப்ரஹ்மாவின் நூறு ஆண்டு ஆனதும், பூமி நீரில் லயமாகிறது. நீர் அக்னியில் லயமடைகிறது, நெருப்பு காற்றிலும், காற்று ஆகாயத்திலும், இப்படி ஒன்று மற்றொன்றில் லயத்தை அடைந்து, இறுதியில் 'தமஸ்' என்னும் தத்துவமாக மாறிவிடுகின்றன. எல்லாம் 'தம: பர தேவ ஏகீ பவதி'' என்று சொல்லப்பட்டிருக்கிறது. கீழேல்லாம் லீயதே லீயதே எனச் சொல்லி வந்து, இறுதியில் எல்லாம் தமஸ்ஸாக மாறி அந்த தமஸ் பரம்பொருளான நாராயணனிடம் ஏகீ பாவத்தை, ஒருமைப்பாட்டை அடைகிறது என்கிறது, ச்ருதி; ப்ரஹ்மமாகவே ஆகிவிடுகிறது என்று இங்கு சொல்லவில்லை.

"தங்கமில்லாமல் எப்படி ஆபரணங்கள் இருக்க முடியாதோ, மண்ணில்லாமல் எப்படி குடம் இருக்க முடியாதோ, அதே போல தமஸ் பகவானிடம் ஒன்றிய பிறகு தமஸ்ஸினாலான, ப்ரஹ்மனும், அவன் லோகமும், அதாவது அண்டமும் அண்டத்திற்குட்பட்ட மற்ற பதார்த்தங்களும் இருக்க முடியாது. அப்போது, 'ஏகோ ஹவை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்ம ந ஈசான:' நாராயணன் ஒருவனே அப்போது இருக்கிறான். ப்ரஹ்மாவுமில்லை; சிவனுமில்லை என்று தெளிவாக வேதம் பேசியுள்ளது. "தம பரதேவ ஏகீ பவதி" என்பதுடன் "ஏகோ ஹவைநாராயண ஆஸீத்" என்கிற ச்ருதியைச் சேர்த்துப் பார்த்தால், அந்த பரதேவதை நாராயணனே என்பதும் விளங்குகிறது. இதையே கீதையிலும் கண்ணன் "அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ ப்ரளயஸ்ததா" என்று கீழே கூறியுள்ளான்.

நாம் மோர் சாதம் சாப்பிட ஊறுகாயை உபயோகப்படுத்துகிறோம். சாப்பிட்ட பிறகு, அந்த ஊறுகாயை விழுங்கி விடுகிறோம். அதே போல படைத்தல், அழித்தல் முதலான செயல்களுக்கு ப்ரஹ்மா, சிவன் முதலான தேவதைகளைச் சிறிது காலம் வைத்திருந்து மஹாபிரளய காலம் வந்ததும் அவர்களையும் அழித்து விடுகிறான் பகவான்.

பரஸ் தஸ்மாத்து பாவோऽந்யோऽவ்யக்தாத் ஸநாதந: ।
ய:ஸ ஸர்வேஷு பூதேஷு நச்யத்ஸு ந விநச்யதி ॥ 20 ॥

அவ்யக்தோऽக்ஷர இத்யுக்த: தமாஹு: பரமாம் கதிம் ।
யம் ப்ராப்ய ந நிவர்த்தந்தே தத்தாம பரமம் மம ॥ 21 ॥

ஆத்மானுபவம் செய்கிற கேவலனுக்கும் மறு பிறவி இல்லை என்கிறான்.

அசேதனமான ப்ரக்ருதியைவிட வேறானதாயும் மேற்பட்டதாயுமுள்ள தத்வம் ஜீவாத்மா. சாஸ்திரத்தினால்தான் இவனை அறிய முடியுமே ஒழிய, வேறு எதைக் கொண்டும் இவனை அறிய முடியாது. ஆகாஸம் முதலான பஞ்சபூதங்கள் அழியும் போதும் இவன் அழிகிறதில்லை. அந்த ஆத்மா அவ்யக்தம் என்றும் அக்ஷரம் என்றும் சொல்லப்படுகிறான். இந்தஆத்மானுபவத்தைப் பெறுவதே மேலான பயனாகக் கேவலன் கருதுகிறான். எந்த ஜீவாத்மாவை அடைந்து திரும்பி வருவதில்லையோ அந்த ஜீவாத்மாவின் ஸ்வரூபம் என்னால் நியமிக்கப்படும் மேலான இடம், அதாவது உயர்ந்த ஜ்ஞான ஒளியுடைய அந்த ஆத்மா எனக்குச் சேஷமானது (என்னுடைய சொத்து) என்கிறான் கண்ணன்.

அறிவேயில்லா ப்ரக்ருதியைக் காட்டிலும், அறிவுள்ள ஜீவன் மேம்பட்டவன். ஜீவன் அழிவில்லாதவன், நித்யன். அவன் அவ்யக்தம், அக்ஷரன் எனப்படுபவன்; ப்ரகருதி அழியும் போதும் ஜீவன் அழிகிறதில்லை என்பதைக் கீழே சொல்லியிருக்கிறான். இந்த பரிசுத்த ஜீவனை அனுபவிக்கப் பெற்றவனே கேவலன் எனப்படுபவன். பகவானை அடைபவனுக்கு மறுபிறவியில்லாதாப் போல இவனுக்கும் மறுபிறவியில்லை. எப்படி அசித்தும், அதில் கட்டுண்ட ஜீவனும் என் சொத்தோ, அதே போல இவனும் என் சொத்து; என்னால் நியமிக்கப்படுகிறவன். இவனுக்கு மறுபிறவியில்லாததினால் அசித்து, மற்றும் ஜீவனைக் காட்டிலும் இவன் உயர்ந்தவன்.

இங்கே பகவான் ப்ரஹ்மத்தைக் கூறுவதாகச் சிலர் பொருள் சொல்லுவர். இது சரியானதல்ல; ஏனெனில் கீழே கண்ணன் ஐச்வர்யத்தை விரும்புவனைப் பற்றிச் சொல்லி, இதற்கு மேல் சுலோகத்தில் "லப்யஸ்து", ஞானியோவெனில் என்று பகவானை அடைய விரும்பும் ஞானியைப் பற்றி சொல்லியிருப்பதினால், இங்கே நடுவில் அவன் ஆத்மானுபவத்தைப் பெற்றிருக்கும் கேவலனைப் பற்றியே சொல்லுகிறான் என்பது தெளிவாகிறது.

அவ்யக்தாத் பர: வியக்தம் என்றால் ஸத்வ ரஜஸ் தமோ குணங்களோடு கூடிய, கண்களால் காணப்படும் ப்ரக்ருதி. ஜீவன் அவ்யக்தன்; ப்ரக்ருதியைப் போல கண்களால் காண முடியாதவனாயும்

பர: மேம்பட்டவனாயுமிருக்கிறவன் ஜீவன்.

அந்ய: பரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்டவன்.

ஸநாதன: பிறப்பு, இறப்பு இல்லாதவன் நித்யன்.

ய : ஸர்வேஷு பூதேஷு நச்யத்ஸு நவிநச்யதி - ப்ரளயதசையில் பஞ்சபூதங்கள் அழியும் போதும், ஜீவன் அழிகிறதில்லை. இப்படிப் பட்ட ஜீவன் அவ்யக்தம், அக்ஷரம் எனப்படுபவன்.

ய பரமாம் கதிம்: இவன் ஆத்மானுபவத்தைப் பெற்று திரும்பி வராத கதியை அடைகிறான். இந்த ஜீவாத்மா எனக்கு அன்புக் குரியவன், என் ஆணைக்கு உட்பட்டவன். இப்படி ஆத்மானுபவம் பெற்றவனுக்கும் மறு பிறவி இல்லை என்பதை கண்ணன் இதில் சொல்லுகிறான்.

புருஷஸ் ஸ பர: பார்த்த பக்த்யா லப்யஸ்த்வநந்யயா ।
யஸ்யாந்தஸ்ஸ்த்தாநி பூதாநி யேந ஸர்வமிதம் ததம் ॥ 22 ॥

அர்ஜுனா! எல்லா உயிர்களும் எந்த இறைவனிடம் உறைகின் றனவோ, எந்த புருஷோத்தமன் எல்லாவற்றிலும் வியாபித்திருக் கிறானோ, அந்த பரமபுருஷன் வேறு மற்றொன்றிலும் மனம் வைக் காமல் செய்யும் பக்தியினால் அடையப்படுகிறான்.

கேவலன் பெறும் ஆத்மானுபவத்தைக் கீழே சொல்லி, இதில் ஜ்ஞானி பெறும் பகவதனுபவத்தைச் சொல்லுகிறான்.

யஸ்ய அந்தஸ்தாநி - எவனுக்குள் எல்லாம் இருக்கின்றனவோ யேந இதம் ஸர்வம் ததம் - எவன் எல்லாவற்றிலும் பரந்துளனோ: அநந்ய பக்த்யா லப்ய - அவன் ஒருமுகப்பட்ட அன்பினால் அடையத் தக்கவன்.

எல்லாவற்றையும் விட ஸர்வேச்வரன் மேம்பட்டவன் என்று கீழே சொன்னான்; இங்கு அவன் எங்கும் பரந்திருக்கிறான். அவனுள்ளே எல்லாம் அடங்கியிருக்கின்றன. அப்படியுள்ள அவன் அநந்ய பக்தியினால்; ஒருமடையாகச் செய்யும் அன்பினால் அடை யத்தக்கவன் என்கிறான்.

ஸர்வத்ர வஸதி இதி வாசுதேவ: - எங்கும் வஸிப்பவன் வாசு தேவன் என்கிற பொருளையும்; நாராயணன்–நாரங்களும் அயநம் ய: ஸ; நாராயணன் என்றும், நாரா அயநம் யஸ்ய ஸ: நாராயணன் என்றும் பிரித்துப் பொருள் கூறுவர். "அனைத்துலகும் தன்னுள்ளே நிற்க, நெறிமையால் தானும் அவற்றுள் நிற்கும் பிரான்" என்று நம்மாழ் வார் இங்கு கண்ணன் சொல்வதையே அருளிச் செய்திருக்கிறார்.

யத்ர காலே த்வநாவ்ருத்திம் ஆவ்ருத்திஞ்சைவ யோகிந: ।
ப்ரயாதா யாந்தி தம் காலம் வக்ஷ்யாமி பரதர்ஷப ॥ 23 ॥

**அக்நிர் ஜ்யோதிரஹச் சுக்ல: ஷண்மாஸா உத்தராயணம் ।
தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்மவிதோ ஜநா: ॥ 24 ॥**

**அவதாரிகை** – இறைவனுக்கும் உயிர்களுக்கும் மிக நெருங்கிய உறவுண்டு. ஒன்று என்னலாம்படி அவ்வளவு நெருங்கிய சம்பந்தம். ஆனால் பகவான் வேறு ஜீவன் வேறு என்பதே தத்வம் (உண்மை) அவையிரண்டும் எக்காலத்திலும் சேர்ந்தேயிருக்கும். ஒன்றை விட்டு ஒன்று பிரியாத தத்வங்கள். நாரத்தை விட்டு அயனமில்லை; அயனத்தைவிட்டு நாரமில்லை. ஆதலால் நாராயணன் எனப்படுகிறான்.

ரத்னத்தை விட்டு அதன் ஒளியைப் பிரிக்க முடியாதாப் போலவும், மலரைவிட்டு அதன் மணத்தைப் பிரிக்க முடியாதாப் போலவும், பகவானை விட்டு ஜீவனைப் பிரிக்க முடியாது. இதனையே "அப்ரதக் சித்தி விசேஷணம்" என்பர். இப்படி இரண்டும் ஒரு தத்வம் போல சேர்ந்திருக்க ஜ்ஞானி பகவானை அனுபவிப்பதற்கும், கேவலன் ஆத்மாவை அனுபவிப்பதற்கும் வாசி என்ன?

பூதலே கட: பூமியின் பேரில் குடமிருக்கிறது. பூதஸ்து கட: பூமியிலிருக்கும் குடம். இவை இரண்டுக்கும் பொருள் ஒன்றாகயிருந்தாலும், உற்று நோக்கினால் முதல் வாக்யத்தில் பூமி முக்கியம் (பிரதானம்) (விசேஷ்யம்) குடம் முக்கியமில்லை (விசேஷணம்) இரண்டாம் வாக்யத்தில் குடம் முக்கியம் (விசேஷ்யம்), பூமி முக்கியமில்லை. (விசேஷணம்) என்கிற வேறுபாட்டைக் காணலாம். கிருஷ்ணனுடன் ராமன் வந்தான் என்பதற்கும் ராமனுடன் க்ருஷ்ணன் வந்தான் என்பதற்கும் உள்ள வேறுபாடு போன்றது.

அதே போல முக்தன், ஜீவனை சரீரமாகக் கொண்ட பகவானை அனுபவிக்கிறான்; இதில் பகவான் ப்ரதானம். கேவலன் பகவானுக்குச் சரீரமான ஆத்மாவை அனுபவிக்கிறான். இங்கே பகவானை அப்ரதானமாகக் கொண்டு ஜீவனையே முக்யமாகக் கேவலன் அனுபவிக்கிறான். இவ்விரண்டுக்கும் நெடு வாசி உண்டு; பகவானுக்கு சேஷமாய் (அடிமையாய்), அவன் இட்ட வழக்காயுள்ள ஜீவனை இவன் அனுபவிப்பது போற்றத்தக்கதல்ல. 21–வது ச்லோகத்தில் கேவலன் அனுபவிக்கும் பரிசுத்த ஆத்மாவும் எனக்கு உரியதே, என் உடைமையே அவன் அனுபவிக்கிறான் என்று கூறியுள்ளான் கண்ணன்.

ஸ்தூலம் (பரு) என்றும், ஸூக்ஷ்மம் (நுண்மை) என்றும் பஞ்சபூதங்களுக்கு இரண்டு நிலை உண்டு. கேவலன் சூக்ஷ்ம

நுண்ணிய உடலில் உள்ள ஜீவனை அனுபவிக்கிருனே ஒழிய, ஸ்தூல (பருவான) உடலிலுள்ள ஆத்மாவையன்று. ஜீவன் எப்பொழுதும் ஒரு சரீரத்தைப் பற்றியே இருக்கும். சரீரமில்லாத ஆத்மாவே இல்லை; பூமியிலிருக்கையில் பஞ்ச பூதங்களாலான கண்ணுல் காணக்கூடிய பரு உடலைப்பற்றிக் கிடக்கிருன். 'ஸ்வர்க்க நரகம் போகும் போதும் வரும்போதும் நுண்ணிய சரீரத்தையே பற்றியிருக்கிருன் ஜீவன். சுவர்க்கத்தில் தேவ சரீரத்தையும், நரகத்தில் யாதனு சரீரத்தையும் அடைகிருன். மோக்ஷத்தில் விரஜா நதியில் நீராடின பிறகு அப்ராக்ருத திவ்ய மங்கள சரீரத்தைப் பெறுகிருன்.

கேவலன் தான் அனுபவிக்க விரும்பும் ஜீவாத்மாவை ஸூக்ஷ்ம சரீரத்திலுள்ள ஜீவனையே பகவானுக்கு சரீரமாக நினைத்து த்யானம் செய்யவேண்டும். ஒரு இரும்புத் துண்டை நெருப்பில் பழுக்கக் காய்ச்சினுல் அது எப்படி நெருப்புத்துண்டாகவே தோன்றி, இரும்புக்கும் அதற்கும் வேறுபாடு தெரியாதோ, அதேபோல ஜீவனுக்கும் அவன் அடைந்திருக்கும் சரீரத்திற்கும் வேற்றுமை தோன்றுவதில்லை.

இந்த மண்ணுலகிலுள்ள தன் பரு உடலை விட்டு ஜீவன் வெளியேறும் மார்க்கம் (வழி), அர்ச்சிராதி மார்க்கம் (பரமபதம் செல்லும் வழி) என்றும் தூமாதி மார்க்கம் (ஸ்வர்க்கம் செல்லும் வழி) என்றும், யாம்ய மார்க்கம் (நரகம் செல்லும் வழி) என்றும் மூன்று வழிகள் சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. இங்கு க்ருஷ்ணன் யாம்ய வழியைக் கூறவில்லை; மற்றய இரண்டையுமே கூறியிருக்கிருன்.

ஒளிமயமான பகல், அக்னி, சுக்ல பக்ஷம் உத்தராயணம் இவைகளின் வழியாய் என் அடியார்கள் பரமபதம் செல்கிருர்கள். அர்ச்சிஸ் என்பது ஒரு ஜ்யோதி (பேரொளி), இதற்கு அபிமான தேவதை, நுண் சரீரத்துடன் பரமபதம் செல்லும் ஜீவனை முதன் முதலில் எதிர் கொண்டு அழைத்துச் செல்வதினுல் இதற்கு ''அர்ச்சிராதி மார்க்கம்'' எனப் பெயர்.

முதலில் அர்ச்சிஸ் என்னும் ஜ்யோதிக்கு அபிமான தேவதை, பிறகு பகலுக்கு அபிமான தேவதை, அதன் பின்பும் சுக்லபக்ஷத்திற்கும், பின்பு உத்தராயணத்திற்கும் அபிமான தேவதைகள் முக்தாத்மாவை எதிர் கொண்டு அழைத்து, தம் தம் தேசங்களின் வழியாக நடத்திச் சென்று முடிவில் விரஜா நதியில் நீராடி

அமானவன் கரம் தொட அப்ராக்ருத திவ்ய மங்கள திருமேனியைப் பெற்று பரமபதம் அடைகிருன். இங்கு முக்தன் செல்லும் வழியைச் சொல்கிறதே ஒழிய, பகல், சுக்லபக்ஷம் உத்தராயணங்களில் பிராணன் விடுபவர்களுக்கல்லால், மற்றவர்களுக்கு மோக்ஷமில்லை என்பது பொருளல்ல; எவராகிலும் பரமபதம் செல்பவர்கள் இந்த அர்ச்சிராதி கதியில் செல்கிருர்கள் என்பதே பொருள் என்பதை வியாசர், ஸ்ரீபாஷ்யகாரர் இவர்கள் சர்ச்சை செய்து முடிவு செய்துள்ளனர்.

இந்த அர்ச்சிராதி மார்க்கம் நமக்குக் கிட்டி மோக்ஷம் பெற, அந்திம ஸ்மிருதி வேண்டும். உடலை விட்டு உயிர் பிரியுமுன் பகவானை நினைக்க வேண்டும்.

நம் வாழ்நாளில் நாம் பகவானைச் சிந்தனை செய்து வந்தால் தான், இந்த இறுதி நினைவு உண்டாகும். 'உண்ணு நாள் பசியாவதொன்றில்லை......., கேசவனை நண்ணு நாள், பட்டினி நாளே'' என்கிருர்பெரியாழ்வார். பகவானே அடைவிக்கிறவன். அடைபவனும் அவனே என்கிற திடநம்பிக்கையுள்ள ப்ரபந்நனுக்கு (பகவானைச் சரணம் பற்றியிருப்பவனுக்கு) இந்த அந்திம ஸ்மருதி (இறுதி நினைவு) வேண்டுமென்பதில்லை.

''ஸ்திதே மநஸி ஸுஸ்வஸ்தே சரீரே ஸதி யோ நர :
தாது ஸாம்யே ஸ்திதே ஸ்மர்த்தா விசுவரூபஞ்சமாமஜம்
ததஸ்தம் ம்ரிய மாணந்து காஷ்டபாஷாண ஸந்நிபம்,
அஹம் ஸ்மராமி மத் பக்தம் நயாமி பரமாம்கதிம்''

என்கிற ஸ்ரீவராஹ சரம சுலோகத்தின்படி இப்படிப்பட்ட பிரபந்நனுக்காக பகவானே இறுதி நினைவைச் செய்து, ஜீவன் உடலை விட்டு வெளிபேறினதும் மற்ற ஆதிவாஹிகர் கையிலும் காட்டிக் கொடாமல், தானே வந்து அவனை அணைத்து வழி நடத்தி பரமபதம் கொண்டு செல்கிருன்.

பொதுவாக மோக்ஷம் பெற அந்திம ஸ்ம்ருதி வேண்டியதே. அது கைகூட, இருக்கும் நாளில் தொடர்ந்து பகவத் சிந்தனை செய்யவேண்டும்.

உடல் திடகாத்திரமாக இருந்தால் புலன் இன்பங்களிலேயே புத்தி செல்லும். ஆயுள் அதிகமாக யிருந்தால் நம்மிலும் இளையவர்களான உறவினர் மரணத்துன்பம் நம்மை வாட்டும். ஆதலால், மஹான்கள் தங்கள் உடல் ஆரோக்யத்திற்கோ. ஆயுள் வளர்ச்சிக்கோ பகவானை வேண்ட மாட்டார்கள் ; ஜ்ஞானம் சம்பாதிக்க

சரீரம் வேண்டும். அப்படி அடைந்த ஞானத்திற்கேற்ப சரீரத்தை படிப்படியாக விடவேண்டும். அரணிக் கட்டையிலிருந்து உண்டாகும் நெருப்பே அக்கட்டையை அழித்து விடுகிறது. அதே போல சரீரத்தினால் உண்டாகும் ஜ்ஞானமே அந்த உடலை அழித்து விடுகிறது.

**தூமோ ராத்ரிஸ் ததா க்ருஷ்ண: ஷண்மாஸா தக்ஷிணாயநம் ।**
**தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதிர் யோகீ ப்ராப்ய நிவர்த்ததே ॥ 25 ॥**

*புண்ணியம் செய்தவர்கள் தூமம் (புகை), இரவு, க்ருஷ்ண பக்ஷம், தக்ஷிணாயனம், பித்ருலோகம் ஆகாயம் இவ்வழியாக சுவர்க்க லோகம் போய் திரும்பி வருகிறார்கள்.*

புண்ணியம் செய்தவர் தாங்கள் விரும்பும் செல்வம், அதனால் வரும் இன்பங்களை அனுபவிக்க தூமாதி மார்க்கம் வழியாக சுவர்கம் அடைந்து, புண்ய பலன்களை அங்கே அனுபவித்து திரும்பி பூலோகத்தில் பிறக்கிறார்கள். இது (தூமம்) புகை நிறைந்த வழியாகையினால் இதற்கு தூமாதி மார்கம் எனப் பெயர்.

**சுக்லக்ருஷ்ணே கதீ ஹ்யேதே ஜகத: சாச்வதே மதே ।**
**ஏகயா யாத்யநாவ்ருத்திம் அந்யயாZZவர்த்ததே புந: ॥ 26 ॥**

*இந்த அர்ச்சிராதி கதியும் தூமாதி கதியும் உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆற்று வெள்ளம் போல் இவை நித்யமாயிருக்கும். அர்ச்சிராதி மார்க்கத்தில் செல்பவனுக்கு மறு பிறவி யில்லை. தூமாதி மார்க்கத்தில் செல்பவனுக்கு மறுபிறவி உண்டு.*

**நைதே ஸ்ருதீ பார்த்த ஜாநந் யோகீ முஹ்யதி கச்சந ।**
**தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு யோகயுக்தோ பவார்ஜுந ॥ 27 ॥**

*இவ்விரண்டு வழியையும் நன்றாய் அறிந்தவன் கலக்கமடைய மாட்டான். ஆதலால், அர்ஜுனா! நீ இரண்டு மார்க்கத்தையும் நன்கு அறிந்து, அர்ச்சிராதி மார்க்கத்தையே சிந்தனை செய்து கொண்டிருப்பாயாக. அப்படியிருந்தால் நீ அர்ச்சிராதி வழியில் சென்று மோக்ஷம் அடைவாய்.*

தூமாதி வழியாகப் போகாமலிருக்க நாம் அதையும் தெரிந்திருக்க வேண்டும். அர்ச்சிராதி மார்க்கத்தையே எப்போதும் சிந்தித்திருத்தல் வேண்டும். இம் மார்க்க சிந்தனமே இன்பமாயிருக்கும்; 'நயாமி பரமாங்கதிம்' தன் பக்தனை தானே அணைத்து வழி நடத்திச் சென்று மோக்ஷம் அடைவிப்பதாக வராஹ பகவான் அருளியிருக்கிறான்; தன் நாயகனுடன் கை கோத்து உலாவுதலை நினைப்பது எப்படி ஒரு உத்தம நாயகிக்கு ஆனந்தமாக யிருக்குமோ,

அதே போல, பகவான் அர்ச்சிராதி வழியில் அணைத்து அழைத்துப் போவதை நினைப்பதே ஒரு பக்தனுக்குப் போக ரூபமாயிருக்கும். வெகு காலம் வசித்து வந்த தன் சரீரத்தை விடுவதில் ஜீவனுக்கு துக்கம் அதிகமாயிருக்கும். அச்சமயத்தில் பகவானே தனக்கெல்லா மாக சரணம் பற்றினவனுக்கு அந்த ஸர்வேச்வரனே (மார்க்கதரிசி) வழிகாட்டியாக, அந்த முக்தனை அணைத்து வழி [illegible] நடத்திச் செல்கிறான். இதை நினைப்பதே ஆனந்தமாகயிருக்கும்.

**வேதேஷு யஜ்ஞேஷு தபஸ்ஸு சைவ**
**தாநே ச யத் புண்யபலம் ப்ரதிஷ்டம் ।**
**அத்யேதி தத் ஸர்வம் இதம் விதித்வா**
**யோகீ பரம் ஸ்த்தாநம் உபைதி சாத்யம் ॥ 28 ॥**

இந்த ஏழு, எட்டு அத்யாயங்களைப் படித்தறிந்தவர்கள், தானம், தபஸ், வேதாத்யயனம், யஜ்ஞ யாகாதிகளால் வரக்கூடிய பயன்கள் எதையும், ஒரு பயனாக மதியார், உலக விஷயங்களில் பற்று அற்று இருப்பர். (இங்கு யோகி என்பதற்கு ஜ்ஞானி என்பதே பொருள்) இவர்கள் மேலான பதவியைப் பெறுவர்.

முதல் ஆறு அத்யாயங்களுக்கும் ஒரு பலனையும் கண்ணன் கூற வில்லை. ஏனெனில் அதில் ஜீவாத்ம ஸ்வரூபம், ஜீவன் செய்ய வேண்டிய கர்மயோகம் ஜ்ஞானயோகமே சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், இந்த ஏழு எட்டு அத்தியாயங்களில், ஸர்வேச்வரனுடைய ஸகல ஜ்ஞான சக்தி, கல்யாண குணங்களையெல்லாம் பரக்க உபதே சித்திருக்கிறான். இன்னும் தன்னிடம் பக்தி செய்யும் ஜ்ஞானியின் பெருமையையும், அவன் பெறும் மேலான மோக்ஷ பலனைப் பற்றி யும், சொல்லி அதை அடையும் மார்கத்தையும் விரிவாகக் கூறியுள் ளான். ஆதலால் இவ்விரண்டு அத்தியாயங்களையும் நன்கு கற்று அறிந்தவர்கள் மேலான மோக்ஷ பலத்தை அடைகிறார்கள் என்று கண்ணனே இதற்குப் பலனாக அருளிச் செய்திருக்கிறான்.

எட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

## ஸ்ரீ ஆளவந்தார் அருளிய கீதார்த்த ஸங்க்ரஹம்

**ஐச்வர்யாக்ஷர யதாத்ம்ய பகவத் சரணார்த்திநாம்**
**வேத்யோபாதேய பாவதாம் அஷ்டமே பேத உச்யதே**

ஐச்வர்யம், ஆத்மானுபவம், பகவத் அனுபவம் இவைகளை விரும்புகிற என் பக்தர்கள் அறிந்து அநுஷ்டிக்க வேண்டியவை களையும் அவைகளில் காணப்படும் வேறுபாடுகளையும் இந்த எட்டாம் அத்தியாயத்தில் கண்ணன் அருளிச் செய்திருக்கிறான்.

ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே சரணம்!

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீமத் பகவத் கீதை

## ஒன்பதாம் அத்யாயம்

### அவதாரிகை

எட்டாம் அத்தியாயத்தில் பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் புருஷோத்தமனை தன் மேன்மைக் குணங்களையெல்லாம் எடுத்துக்கூறி, தான் மேற்கொள்ளும் அவதாரங்கள் தோறும், தன் குணங்கள் ஒன்றையும் விடாமல், அவைகளுடனேயே பிறப்பதாகக் கூறுகிறுன்.

தன்னிடம் பக்தி செய்வோரை நான்கு விதத்தால் பகுத்துக் காட்டி, அவரவர் செய்யும் பக்தியின் தன்மைகளையும், அவர்களுள் தன்னையே விரும்பி பக்தி செய்யும் ஜ்ஞானியே மேம்பட்டவன் என்றும், அவர்கள் செய்யவேண்டிய அந்திம ஸ்மிருதி பற்றியும் குறிப்பிட்டு, அவ்வத்தியாயத்தை முடித்துக் கொள்ளுகிறுன்.

இந்த ஒன்பதாவது அத்தியாயத்தில், பக்தியின் பெருமைகளையும் அதை அனுஷ்டிக்கும் ஜ்ஞானியின் சிறப்புக்களையும் விவரிக்கிருன்.

**இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே ।**
**ஜ்ஞாநம் விஜ்ஞாநஸஹிதம் யத் ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽசுபாத் ॥ 1 ॥**

அர்ஜுன! மிகவும் ரஹஸ்யமான இந்த பக்தி என்னும் ஜ்ஞானத்தை, அதன் எல்லாத் தன்மைகளுடன், அஸூயை இல்லாத உனக்கு நான் விரிவாகச் சொல்லப் போகிறேன்; இதை நீ அறிந்து, உன் பாபங்களிலிருந்து விடுபடுவாய்.

**குஹ்யம் :** என்றுல் ரஹஸ்யம். தகுதியில்லாதவர்களுக்குச் சொல்லாமல் மறைத்து வைக்க வேண்டியது. கர்ம யோகத்தை குஹ்யம் என்றும், ஜ்ஞான யோகத்தை குஹ்யதரம் என்றும் சொல்லி, இங்கே பக்தி யோகத்தை "குஹ்யதமம்" மேற்கூறிய இரண்டைக் காட்டிலும் மேம்பட்டது என்கிருன்.

**மஹநீய விஷயே ப்ரீதி: பக்தி** । உயர்ந்தவனிடம் தாழ்ந்தவன் செய்யும் அன்பே பக்தி எனப்படும்; உயர்ந்தவன் யார்? பகவானுனதானே எல்லா விதத்திலும் மிக உயர்ந்தவன் என்பதைக் கண்ணன் கீதையில் பல இடங்களில் சொல்லி வருகிறுன். இதைக் கேட்கும் அர்ஜுனனுக்கு, கண்ணனிடம் சிறிதும் அஸூயை (பொருமை) உண்டாகவில்லை, இது ஒரு உத்தம குணம். கண்ண

னுடைய மேன்மையெல்லாம் கேட்டு அர்ஜுனன் உவந்தே இருக்கிறான். இதைக் கண்ட பகவான், அர்ஜுன! நீயே இந்த சிறந்த ரஹஸ்யமான பக்தி யோகத்தை உபதேசம் பெறத்தகுதியுடையவன் ஆதலால் அதை நான் உனக்கு உபதேசிக்கிறேன். இதை என்னிடமிருந்து நீ கேட்டறிந்தால், பக்தி உண்டாவதற்குத் தடையாயுள்ள உன் பாபமெல்லாம் விலகும், பிறகு நீ என்னிடம் பக்தியைச் செய்து ஆத்ம நன்மைகளை அடைவாய் என்கிறான்.

இதம் விஜ்ஞான ஸஹிதம் ஜ்ஞானம் :—பக்தி என்பது ஒரு ஜ்ஞான விசேஷம், எவ்வகையிலும் உயர்ந்த பகவானிடம் செய்யும் அன்பே பக்தி, இது ச்ரவணம் (கேட்டல்), மனனம் (தான் கேட்டதை மனத்தினால் ஆராய்ந்து உறுதி கொள்ளுதல்); சிந்தனம் அப்படி உறுதிப் பட்டதை தைலதாரை போல எப்போதும் சிந்தித்திருத்தல், என மூன்று வகைப் பட்டிருக்கும் இப்படி அன்போடு பகவானை இடைவிடாது சிந்தித்தலே பக்தி. உண்மையான பகவத் பக்தி உண்டாயிருப்பவன், பகவானைத் துதித்தல், வணங்குதல், அவனுக்குத் தொண்டு செய்தல் இப்படி ஏதாவது ஒன்றை பகவான் மகிழும்படி செய்து கொண்டே இருப்பான்.

யஜ்ஞாத்வா மோக்ஷ்யஸே அசுபாத் : அஜ்ஞானம் (அறிவின்மை), கர்ம வாஸனை ருசி இவைகள் அசுபம். இவை விலகுவதே சுபம். பகவானை உள்ளபடி அறிந்து அவனிடம் பக்தி செய்தால், மோக்ஷத்திற்குத் தடையான பாபங்கள் விலகும்.

ராஜவித்யா ராஜகுஹ்யம் பவித்ரமிதம் உத்தமம் ।
ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம் ஸுஸுகம் கர்த்தும் அவ்யயம் ॥ 2 ॥

இந்த ஜ்ஞானம் ராஜவித்யை, மறை பொருளுள் மேலானது. தூய்மை தருதலில் தலை சிறந்தது, உத்தமமானது. தர்மத்தோடு கூடியது, கண் கூடானது; செய்வதற்கு மிக எளியது அழிவற்றது.

இந்த பக்தி யோகம் அறிய வேண்டிய வித்யைகளுக்கெல்லாம் மேன்பட்டது. நம்பிக்கை, சிரத்தை இல்லாதவர்களிடமிருந்து இதை மறைத்து வைக்க வேண்டிய ரஹஸ்யமானது; தூய்மையை பயக்கக்கூடியது; உயர்ந்த ஆத்ம நன்மையை, அதாவது மோக்ஷத்தை அளிக்கக் கூடியது. இதைச் செய்வதும் இனிமையாக இருக்கும், இதன் பலனோ அழிவில்லா பரமபதம்.

இப்படி ராஜ வித்யை, ராஜகுஹ்யம், உத்தமம்; பவித்ரம், ப்ரத்க்ஷாவஹம், ஸுஸுகம், அவ்யயம் என ஏழுவிதமாக, மற்ற

கர்ம ஞானத்திற்கில்லாத இதற்குள்ள சிறப்புகளைச் சொல்லிப் புகழ்கிறான் கண்ணன்.

**அச்ரத்ததாநா: புருஷா: தர்மஸ்யாஸ்ய பரந்தப !**
**அப்ராப்ய மாம் நிவர்தந்தே ம்ருத்யுஸம்ஸார வர்த்மநி ॥ 3 ॥**

அர்ஜுனா ! இத்தர்மத்தில் சிரத்தை யில்லாதவர்கள் என்னை அடையாமல் பிறப்பு, இறப்பு பிணி மூப்பாகிற ஸம்ஸாரத்திலேயே உழல்கிறார்கள்.

பகவத் பக்தி அன்பினால் செய்யப்படுவதாகையினால், செய்வதற்கு, கர்ம ஜ்ஞான யோகம் போலன்றியே, இது இனிமையாகவும் எளியதாகவுமிருக்கும். இதனால் பெறும் பயனோ கொள்ளமாளா இன்ப வெள்ளமானதும், அழிவில்லாததுமான மோக்ஷமாகும். இப்படி இதை அறிந்தும், பலர் இதில் ஊக்கமின்றி, நரகத்திற்கு ஒத்த துன்பமே நிறைந்த ஸம்ஸாரத்தையே மிகவும் ஆசையுடன் பற்றி அதிலேயே உழல்கிறார்களே, இது என்ன ஆச்சர்யம் என்கிறான், கண்ணன் !

**மயா ததமிதம் ஸர்வம் ஜகத் அவ்யக்தமூர்த்திநா !**
**மத்ஸ்த்தாநி ஸர்வபூதாநி ந சாஹம் தேஷ்வவஸ்த்தித: ॥ 4 ॥**
**நசமத்ஸ்த்தாநி பூதாநி பச்ய மே யோகமைச்வரம் !**
**பூதப்ருத் ந ச பூதஸ்த்த: மமாத்மா பூதபாவந: ॥ 5 ॥**

இந்திரியங்களுக்குப் புலப்படாத வடிவினனாய் என்னால் இந்த உலகம் யாவும் வியாபிக்கப்பட்டிருக்கிறது; உயிர்கள் அனைத்தும் என்னிடத்திலிருக்கின்றன; நானோ அவைகளில் இருக்கவில்லை என்கிறான்.

அடுத்த சுலோகத்திலோ உயிர்கள் அனைத்தும் தன்னிடம் இருக்கவில்லை என்கிறான். இப்படி என் ஈச்வர யோகத்தின் சிறப்பைப் பார்; நான் எல்லாப் பிராணிகளையும் தரிப்பவன்; ஆனால் அந்தப் பிராணிகளுள் இருப்பவனல்லன்; என் ஸங்கல்பத்தினால் எல்லாப் பிராணிகளையும் தரித்து நியமிக்கிறேன் என்கிறான்.

**அவ்யக்த மூர்த்திநா மயா இதம் ஸர்வம் ஜகத் ததம் :-** கண்களால் காண இயலாத வடிவத்துடன் நான் இந்த உலகெல்லாம் பரவி நிற்கிறேன், "கரந்து எங்கும் பரந்துளன்" (கரந்து-மறைந்து) என்பது நம்மாழ்வாரின் திருவாக்கு.

**ஸர்வ பூதாநி மஸ்தாநி :** உலகில் உள்ள எல்லா ஜீவராசிகளும் என்னிடம் இருக்கின்றன; அதாவது என்னால் அவைகள் தரிக்கப்பட்டு, நியமிக்கப்பட்டிருக்கின்றன, என் அதீனமாயுள்ளவை.

உலகிலுள்ள பொருள்களெல்லாம் பகவானுக்குச் சரீரமாய், அவைகளுக்கு, ஆத்மாவாயிருந்து தரிக்கிறான். இதை 'யஸ்ய ஆத்மா சரீரம், "யஸ்ய ப்ரதிவி சரீரம்" என்கிறது ச்ருதி.

நம் சரீரம் நம் ஆத்மாவினால் தரிக்கப்பட்டிருக்கிறது. ஜீவன் வெளியேறினால் உடல் அழிகிறது. அதுபோல, உலகிலுள்ள எல்லா சேதன அசேதனங்களிலும் பகவான் அந்தர்யாமியாயிருந்து அவைகளை தரிக்கிறான். இதையே இந்த வாக்கியத்தினால் கண்ணன் கூறுகிறான்.

அஹம் தேஷ்வ நாவஸ்தித: நான் அவைகளில் இருக்கவில்லை, அதாவது என் ஸத்தா, ஸ்திதி 'உண்டாதல்', இருத்தல் அவைகளின் அதீனமில்லை; நான் அவைகளுக்கு ஆதாரமாயிருப்பது போல், அவைகள் எனக்கு ஆதாரமாயிருக்கவில்லை என்பதே இங்கு கண்ணன் கூறும் கருத்தாகும்.

இனி ஐந்தாம் சுலோகம்—

பூதானி நச மஸ்தானி: உயிர்கள் என்னிடமிருக்கவுமில்லை; பூதப்ருத்-உயிர்களை எல்லாம் தரிப்பவன் நான்; நசபூதஸ்த அந்தப் பிராணிகளில் நான் இருப்பவனல்லன்.

மம ஆத்மா பூதபாவன! என் ஸங்கல்பத்தினாலேயே (என் நினைவினாலேயே) எல்லா ஜீவன்களையும் நான் தரித்து நியமிக்கிறேன். என் இருப்புக்கு அவை பொறுப்பல்ல.

மே ஐச்வரம் யோகம் பச்ய இத்தகைய எனது அஸாதாரண இயல்பை நியமன சக்தியைப் பார் என்கிறான்.

தண்ணீரை ஒரு குடம் தரிப்பது போல், உருக்கொண்டு பொருள்களை நான் தாங்குவதில்லை, அதாவது என் ஸ்வருபத்தினாலே தரிக்கவில்லை; என் ஸங்கல்பத்தினாலேயே (நினைவு மாத்திரத்தினாலேயே எல்லாவற்றையும் தாங்கி நிற்கிறேன். படைக்கப்பட வேண்டிய அனைத்தும் படைக்கப் படட்டும்; அவைகளின் கர்மாவுக்குச் சேர, அவை சில காலம் இருந்து, செயல் படட்டும் என்று நான் நினைக்கிறேன். பகவான் தன் நினைவுப்படி எல்லாம் நடைபெறுகின்றன என்பதை "பூதப்ருத்" என்பதினால் சொல்லி, அந்தப் பிராணிகளை தரிப்பதற்காகவே, அவைகளில் தான் இருப்பவனல்லன் என்பதை விளக்குகிறான்.

ஆக, நான்காம் சுலோகத்தினால் "உலகிலுள்ள எல்லா ஜீவராசிகளும் தன்னிடம் இருக்கின்றன" என்பதினால், அவைகளின்

ஸத்தை, ஸ்திதி எல்லாம் தன்னைப் பற்றி உள்ளன என்பதும், "நான் அவைகளிலில்லை" என்பதினால் தனது ஸத்தா ஸ்திதி அவைகளைப் பற்றியதில்லை என்பதையும் தெரிவிக்கிறான்.

**யதாzzகாசஸ்த்திதோ நித்யம் வாயு ஸர்வத்ரகோ மஹாந் ।**
**ததா ஸர்வாணி பூதாநி மத்ஸ்த்தாநீத்யுபதாரய ॥ 6 ॥**

எப்படி ஒரு பெரிய காற்று ஆகாயத்தில் ஒரு பிடிப்புமில்லாமல், எல்லா இடங்களிலும் ஸஞ்சரிக்கிறதோ, அதுபோலவே எல்லா உயிரினங்களும் என்னிடத்தில் நிலைத்து இருக்கின்றன என்பதை நீ தெரிந்து கொள்.

உயிரில்லாத ஒரு பறவை ஆகாயத்தில் பறக்க முடியாது; அது போல காற்று ஆகாயத்தில் பகவானுடைய இச்சையில்லாமல் ஸஞ்சரிக்க இயலாது. அப்படியே எல்லாப் பிராணிகளும் பகவானுடைய நினைவினாலேயே அவனை ஆதாரமாகப் பற்றி தரித்திருக்கின்றன

**ஸர்வபூதாநி கௌந்தேய ப்ரக்ருதிம் யாந்தி மாமிகாம் ।**
**கல்பக்ஷயே புநஸ்தாநி கல்பாதௌ விஸ்ருஜாம்யஹம் ॥ 7 ॥**

அர்ஜுனா! எல்லா உயிரினங்களும் கல்ப முடிவில் என் மூல பிரக்ருதியை வந்து அடைகின்றன; மறுபடி மூலபிரக்ருதியிலிருந்தே அவைகளை நான் படைக்கிறேன்.

நான்முக ப்ரஹ்மாவின் ஆயுள் முடிந்ததும் மஹாபிரளயம் வருகிறது. அந்த ஊழிக் காலத்தில் அசையும் பொருள், அசைவற்றவை அனைத்தும் அழிந்து, அதாவது பெயர் வடிவங்களை இழந்து, தமஸ்ஸாகி, பரமனுடைய மூலபிரக்ருதியில் அடங்கி விடுகின்றன. சிருஷ்டி காலம் வந்ததும் அவைகளை பகவான் தன் ஸங்கல்பத்தினால் மறுபடியும் பலவிதமான பொருள்களாகப் பெயர் வடிவங்களுடன் படைக்கிறான்.

**ப்ரக்ருதிம் ஸ்வாம் அவஷ்டப்ய விஸ்ருஜாமி புந புந: ।**
**பூதக்ராமம் இமம் க்ருத்ஸ்நம் அவசம் ப்ரக்ருதேர் வசாத் ॥ 8 ॥**

இப்படி முடிவில் மூல பிரக்ருதியில் அடங்கியுள்ள எல்லா உயிர் இனங்களையும் என் ஸங்கல்பத்தினால் பற்பல வகையாகவும் விசித்ரமாயும் உள்ள பொருள்கள் நிறைந்த உலகாக நான் படைக்கிறேன்.

ஊழிக்காலத்தில் உலகிலுள்ள எல்லாப் பொருள்களும், "தமஸ்" என்ற ஒரே சொல்லுக்குப் பொருளாகி மூலப்ருக்ருதியில் அடங்கிவிடுகின்றன என்றான். கீழ் அந்த பிரக்ருதி, தான் இட்ட

வழக்காய் இருப்பது. (ப்ரக்ருதி என்பது அவன் சரீரம்) இப்படி எனக்கு அதீனமாயுள்ள மூல ப்ரக்ருதியிலிருந்து, இச்சையினால் முதலில் நிலம், நீர், தீ, கால், விண், மனம், புத்தி, அஹங்காரம் என்கிற எட்டு விதமான ஸ்ருஷ்டிப் பொருள்களையும் ஜீவ சமூகத்தையும் படைத்து, அவைகளைக் கொண்டு தேவன், மனிதன், ஊர்வன, தாவரம் போன்ற பற்பல விந்தைப் படைப்புகளை, ஸாத்விக ராஜஸ தாமஸ குணங்களுடன் உண்டாக்குகிறான் பகவான்.

நச மாம் தாநி கர்மாணி நிபத்நந்தி தநஞ்ஜய ।
உதாஸீநவத் ஆஸீநம் அஸக்தம் தேஷு கர்மஸு ॥ 9 ॥

அர்ஜுனா! அந்தப் படைப்புச் செயலில், நான் உதாஸீனனாக (எதையும் பொருட்படுத்தாமல்) பற்றுதல் அற்று இருப்பதினால் என்னை ஒருவித தோஷமும் (குற்றமும்) சார்வதில்லை.

தமஸில் அடங்கிக் கிடக்கும் உயிரினங்களில் சிலவற்றை மனிதர்களாகவும், சிலவற்றைப் பறவை விலங்குகளாகவும், சில இன்பம் துய்ப்பவையாயும் சில துன்பமுள்ளவையாயும் படைக்கப் படுவதில் எனக்குப் பொறுப்பு எதுவும் இல்லை; அந்த அந்த உயிர்களின் முன் வினைப் பயனாக அவ்வாறு என்னால் படைக்கப் படுகின்றன. இப் படைப்பின் வேறுபாடுகளில் எனக்குப் பொறுப் பில்லை ஆதலால் எனக்கொரு குற்றமும் இதில் சார்வதில்லை.

மயாऽத்யக்ஷேண ப்ரக்ருதி: ஸூயதே ஸசராசரம் ।
ஹேதுநாऽநேந கௌந்தேய ஜகத் ஹி பரிவர்த்ததே ॥ 10

அர்ஜுனா! என் மேற்பார்வையினாலேயே ப்ரக்ருதியானது சராசரப் பொருள்களான உலகைப் படைக்கிறது (மாறுகிறது) இப்படி உலகம் மாறி மாறி உண்டாகிறது.

ஆத்மாக்கள் தம் தம் வினைப்பயனால் தேவ, மனித, ஊர்வன, தாவரங்களாகப் பிறக்கின்றன என்றால், இதில் பகவானின் செயல் எங்கு வருகிறது? பகவான் இவைகளைப் படைக்கிறான் என்று எப்படிச் சொல்ல முடியும்?

ப்ரக்ருதி என்பது அசித் (அறிவில்லாத) தத்வம். அதற்குப் படைக்கும் சக்தியில்லை; பகவான் ஸர்வஜ்ஞன், ஸர்வசக்தன். அதாவது அறிவு ஆற்றல் மிகுந்தவன், பெயர் வடிவங்களை இழந்து, சிறகொடிந்த பறவை போல, தமஸ் என்னும்

சொல்லுக்குப் பொருளாய், மூலபிரக்ருதியில் தான் இட்ட வழக்காய் இருக்கும் ஜீவாத்மாக்களை ஸர்வேச்வரன் அருளுடன் நோக்கு கிறான். அவனுக்கு அவைகளிடம் கருணை பெருகுகிறது. அருளினால், அவை முன் போன்று தோன்றக்கடவது என்று எண்ணுகிறான் (ஸங்கல்பிக்கிறான்) ஸத்ய ஸங்கல்பனாகையினால், அவனுடைய எண்ணத்தின்படி அவை அனைத்தும் தம் தம் வினைப் பயனுக்குச் சேர மூலபிரக்ருதியிலிருந்து உண்டாகின்றன. ஆத்மாக்களின் பூர்வஜன்ம வினைக்குத் தக்கபடி சரீரம் எடுத்துப் பிறக்கிறார்கள் இப்பிறவிகளின் ஏற்றத் தாழ்வுக்கு (வேற்றுமைக்கு) பகவான் காரணமில்லை; அவன் விருப்பு வெறுப்பு அற்றவன்.

**அவஜாநந்தி மாம் மூடா: மாநுஷீம் தநும் ஆச்ரிதம் ।**
**பரம் பாவம் அஜாநந்தோ மம பூதமஹேச்வரம் ॥ 11 ॥**

அறிவில்லாத மூடர்கள் எனது ஸர்வேச்வரத் தன்மையை அறியாமல் என் மனித சரீரத்தையே பார்த்து, என்னை அவமதிக்கிறார்கள்.

அர்ஜுன ! உலகில் உள்ள எல்லோரும் என்னை எளிதாகக் கிட்டி வணங்கி ஆத்ம நன்மையை அடைவதற்காகவே நான் என் இச்சையினால் மனித உருவத்தோடு வந்து பிறக்கிறேன். ஆனால் இதையே (பிறவியையே) காரணமாகக் கொண்டு அறிவில்லாத மூடர்கள் என்னைத் தங்களைப் போல கர்மமடியாகப் பிறந்திருக்கும், வசுதேவனின் மகன் என்று கருதி, என்னை அவமதிக்கிறார்கள். ஸர்வஜ்ஞனாயும், ஸர்வசக்தியாயும், சத்ய ஸங்கல்பனாயும் (அதாவது நிறைந்த உணர்வுடையவனாகவும், பேராற்றல் வாய்ந்தவனாகவும் திண்ணிய எண்ணமுடையவனாகவும்) உள்ள இறைவன் என்று என்னை அவர்கள் அறிகிறதில்லை.

**மோகாசா மோககர்மாணோ மோகஜ்ஞாநா: விசேதஸ: ।**
**ராக்ஷஸீம் ஆஸுரீஞ்சைவ ப்ரக்ருதிம் மோஹிநீம் ச்ரிதா: ॥ 12 ॥**

மோஹத்தை உண்டாக்கும் அரக்க, அசுர இயல்பை உடையவர்களாய், அதற்கேற்ப வீண் எண்ணம், ஆசைச் செயல்கள் உடையவர்களாய் அறிவிலிகள், என் ஈச்வரத் தன்மையை, அறிகிறதில்லை.

**மஹாத்மாநஸ்து மாம் பார்த்த தைவீம் ப்ரக்ருதிம் ஆச்ரிதா: ।**
**பஜந்த்யநந்யமநஸோ ஜ்ஞாத்வா பூதாதிமவ்யயம் ॥ 13 ॥**

அர்ஜுன! தெய்வத் தன்மை உடைய சில மஹாத்மாக்களோ எனில், எல்லா உயிர்களுக்கும் காரணமாய் நித்யனும் அழிவில்லாத என்னை உள்ளபடி அறிந்து, மற்ற விஷயத்தில் மனத்தைச் செலுத்தாமல் என்னிடம் பக்தியைச் செய்கிறார்கள்.

இப்படி மூட மக்கள் நிறைந்த உலகில் நீ ஏன் தோன்றுகிறாய்?

அர்ஜுன! அக்ரூரர், விதுரர், மாலாகாரர் போன்ற சில மஹாத்மாக்கள் உளர்; அவர்கள் தெய்விகச் செல்வம் படைத்தவர்; பல பிறவிகளின் புண்ய பலனாக ரஜஸ் தமோ குணம் அடங்கி ஸத்வ குணம் மேலிட்டு, என் ஜகத் காரணத்வம், ரக்ஷகத்வம் நித்யத்வத்தை உள்ளபடி அறிந்து, அவர்கள் என்னிடம் பக்தியைச் செய்கிறார்கள். அவர்களின் பொருட்டே நான் அவதரிக்கிறேன்.

ஸததம் கீர்தயந்தோ மாம் யதந்தச்ச த்ருடவ்ரதா: ।
நமஸ்யந்தச்ச மாம் பக்த்யா நித்யயுக்தா உபாஸதே ॥ 14 ॥

பக்தியினால் எப்பொழுதும் என் திருநாமங்களைச் சொல்லிக் கொண்டும், உறுதியான மனம் உடையவர்களாய், என்னை உகப்பிக்கும் பணிகளில் ஈடுபட்டும், எனக்கு வழிபாடு வணக்கங்களைச் செய்து கொண்டும் என்னுடன் எப்பொழுதும் சேர்ந்திருக்க விருப்பமுடையவர்களாய் என்னையே நினைத்துக் கொண்டு அவர்கள் திகழ்கிறார்கள்.

அப்படிப்பட்ட மஹாத்மாக்கள், "ஹ்ரே ராமா, ஹரே க்ருஷ்ணா!" என்று என் நாமாக்களை அன்புடன் சொல்லி தரித்திருப்பர்; எனக்கு உகப்பான தொண்டுகளையே செய்து போதுபோக்குவர்; எனக்கு ஆராதன நமஸ்காரங்களைச் செய்வர். மலர்க்கணையிட்டு என்னை அர்ச்சிப்பர். அன்புக்கு வெளியீடாக எற்றைக்கும் ஏழ் ஏழ் பிறவிக்கும் உன்றன்னோடு உற்றோமே யாவோம், உனக்கே நாம் ஆட்செய்வோம் என்கிறபடி எப்பொழுதும் என்னுடன் கூடியிருந்து எனக்கு அடிமை செய்வதையே விரும்பி, பாரித்திருப்பர்.

ஜ்ஞாநயஜ்ஞேந சாப்யந்யே யஜந்தோ மாம் உபாஸதே ।
ஏகத்வேந ப்ருதக்த்வேந பஹுதா விச்வதோமுகம் ॥ 15 ॥

மற்றும் சில மஹாத்மாக்கள் ஜ்ஞானமாகிய யாகத்தினால், பல படியாக ப்ரபஞ்ச வடிவாயிருக்கும் ஒருவனாக என்னை அறிந்து ஆராதிப்பர்; அதாவது ஊழிக் காலத்தில் அறிவுள்ள சேதனராயும், அறிவில்லா அசேதனமாயும் பொருள்கள் பெயர் வடிவங்களை

இழந்து, எப்படி பகவானுடைய சரீரத்தில் அடங்கியிருக்கின்றனவோ, அதுபோல் படைப்பிலும் எல்லாப் பொருள்களும் அவனுக்குச் 'சரீரமாய் அவன் இட்ட வழக்காயிருக்கின்றன. அவன் அவைகளுக்கெல்லாம் எந்த நிலையிலும் ஆத்மாவாக யிருக்கிறான் என்பதை அறிந்து என்னை யாக யஜ்ஞாதிகளால் ஆராதிக்கிறார்கள்.

அஹம் க்ரதுரஹம் யஜ்ஞ: ஸ்வதாZஹம் அஹமௌஷதம் ।
மந்த்ரோஹம் அஹமேவாஜ்யம் அஹமக்நிரஹம் ஹுதம் ॥ 16 ॥

யாகம் நான், மஹாயஜ்ஞும் நான், ஸ்வதா என்னும் மந்த்ரம் நான், ஹவிஸ்ஸு நான், மந்த்ரமும் நெய்யும் அக்கியும் நானே, செய்யப்படும் ஹோமமும் நானே.

ப்ரஹ்ம யஜ்ஞும், தேவ யஜ்ஞும், பித்ரு யஜ்ஞும், மனித யஜ்ஞும், பூத யஜ்ஞும் எனப்படும் பஞ்சமஹா யஜ்ஞுமும் நானே. அவைகளால் ஆராதிக்கப்படுபவனும் நானே. அந்த யாகாதிகளில் உபயோகப்படுத்தப்படும் நெய், ஹவிஸ், அக்னி, மந்த்ரம் எல்லாம் நானே. அவைகளால் சொல்லப்படும் பொருள்கள் என்னையே குறிக்கும். ஹோமம் மற்றவைகளெல்லாம் எனக்குச் சரீரம். அவைகளில் நான் ஆத்மாவாகயிருக்கிறேன்.

பிதாZஹம் அஸ்ய ஜகதோ மாதா தாதா பிதாமஹ: ।
வேத்யம் பவித்ரம் ஓங்கார: ருக் ஸாம யஜுரேவ ச ॥ 17 ॥

உலகுக் கெல்லாம் தந்தையும், தாயும் நானே. உற்பத்திக்கு உற துணையாய் பாட்டனுமாய் நானிருக்கிறேன். அறியத் தக்கவனும், தூய்மையைக் கொடுப்பவனும், ப்ரணவமான ஓம் என்கிற மந்திரமும், ருக் யஜுஸ் ஸாம வேதமுமாய் நான் இருக்கிறேன்.

உலகுக்கெல்லாம் தாயும், தந்தையுமாய், உற்பத்திக்குக் காரணமாய் அவை அவைகள் தங்கள் வினைப்பயனை அனுபவிக்கச் செய்பவனுயும் நான் இருக்கிறேன். எல்லோரும் தங்கள் ஆத்ம நன்மைக்கு அறிய வேண்டிய உயர்ந்த தத்வம் நான்.

தூய்மையை நல்குபவனும் நான். பகவானை மனத்தினால் நினைத்தாலும், அவன் பெயர்களை வாயினால் சொன்னாலும் நமக்கு ஆத்ம சுத்தி உண்டாகிறது; ஓம் என்கிற ப்ரணவத்தினால் சொல்லப்படுபவனும் நான்; ருக், யஜுஸ் ஸாம வேதங்களும் என்னையே சொல்கின்றன.

பெற்றோர்களிடம் பகவானே அந்தராத்மாவாக யிருந்து குழந்தையைப் பிறப்பிக்கிறான். அவனே பாலகாகவும் அன்னமாகவுமிருந்து அதை வளர்க்கிறான். நம் குற்றங்களைப் போக்கி நமக்கு நற்றங்களைச் செய்பவனும் பகவானே.

கதிர் பர்த்தா ப்ரபு: ஸாக்ஷீ நிவாஸ: சரணம் ஸுஹ்ருத் ।
ப்ரபவப்ரளயஸ்த்தாநம் நிதாநம் பீஜம் அவ்யயம் ॥ 18 ॥

கதியும், போஷகனும், நியாமகனும், ஸாக்ஷியும், வசிக்குமிடமும், சரணமடையத் தக்கவனும், ஹிதபரனும், உற்பத்தி ஸ்தானமும், நாசமற்ற வித்தும் ஆக நான் இருக்கிறேன்.

போம் வழியும், தாங்கிச் செல்பவனும் தலைமை ஏற்பவனும்; நடுநிலையிலிருந்து எல்லாவற்றையும் காண்பவனும், வாழும் இடமும், உற்ற நண்பனும், தோற்றக் கேடுகளுக்கு உரிய இடமும் அனைத்தின் அடிப்படையும், அழிவற்ற முதல் தனிவித்தும் நானே.

தபாம்யஹம் அஹம் வர்ஷம் நிக்ருண்ஹாம்யுத்ஸ்ருஜாமி ச ।
அம்ருதஞ்சைவ ம்ருத்யுச்ச ஸதஸச்சாஹம் அர்ஜுந ॥ 19 ॥

அர்ஜுன நான் வெப்பத்தை உண்டாக்குகிறேன். அதை தணிவிக்கும் மழையைப் பெய்விக்கிறேன். உயிரின் வாழ்வுக்கும் மரணத்துக்கும் காரணன் நானே. இல்லதும் உள்ளதும் நானே, இந்த உண்மையை அறிந்து சில மஹாத்மாக்கள் என்னிடம் பக்தி செய்து, என்னையே அடைகிறார்கள்.

த்ரைவித்யா மாம் ஸோமபா: பூதபாபா:
யஜ்ஞைரிஷ்ட்வா ஸ்வர்கதிம் ப்ரார்த்தயந்தே ।
தே புண்யம் ஆஸாத்ய ஸுரேந்த்ரலோகம்
அச்நந்தி திவ்யாந் திவி தேவபோகாந் ॥ 20 ॥

ருக் யஜுஸ் ஸாம வேதங்களை ஓதி ஸோம லதையின் சாற்றை அருந்தி, யாகாதிகளைச் சிலர் செய்கிறார்கள். தங்கள் பாபங்கள் விலகவும் இன்பத்தை அடையவும் இவர்கள் என்னை வழிபடுகிறார்கள்.

தே தம் புக்த்வா ஸ்வர்கலோகம் விசாலம்
க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி ।
ஏவம் த்ரயீதர்மம் அநுப்ரபந்நா:
கதாகதம் காமகாமா: லபந்தே ॥ 21 ॥

அவர்கள் தேவருலகை அடைந்து புண்ய பலமான தேவ இன்பங்களை அனுபவிக்கிறார்கள்; இனிமையும், பரப்பும் வாய்ந்த தேவர் உலகில் புண்ய பலன்களை அனுபவித்துத் தீர்ந்ததும், அவர்கள் இந்த மண் உலகில் மறுபடியும் பிறந்து, மீண்டும் தேவருலகு செல்ல புண்யச் செயல் புரிகின்றனர். இப்படி சுவர்கம் போவதும் பூலோகம் வருவதுமாக, போக்குவரத்தை அடைகிறார்கள்.

வேதத்தை ஓதும் சில மஹான்கள் மறைகளில் சொல்லப் பட்டிருக்கும் யஜ்ஞ யாகாதிகள் போன்ற சில கார்ய கர்மாக்களைச் செய்து, என்னை ஆராதிக்கிறார்கள். புண்ய பயனை அனுபவிக்க அவர்கள் தேவலோகம் செல்வதும் மீண்டும் வருவதுமாக இருப்பர்; எப்படி ஓர் ஏற்றச்சால் கீழே கிணற்றில் சென்று, தண்ணீரை முகந்து, மேலே வந்து அதைக் கவிழ்த்து விட்டு, மறுபடியும் தண்ணீர் கொள்ள கீழே வருகிறதோ, அதே போல இவர்கள் சுவர்க்கம் போவதும் மண்ணுக்குத் திரும்புவதுமாய், மாறி மாறி பல பிறப்பும் எய்துகின்றனர். (ஸோம லதை என்பது ஆட்டாங் கொடி. அதன் ரசத்தை யாகத்தில் பயன்படுத்தி, மிகுதியை உண்டால் சுவர்க்கம் அடைவதற்குத் தடையான பாபம் நீங்கும்).

**அநந்யாச் சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே |**
**தேஷாம் நித்யாபியுக்தாநாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம் || 22 ||**

வேறு பயனை விரும்பாமல் என் ஒருவனையே பயனாகச் சிந்தித்திருப்பர் மஹாத்மாக்கள். என்னை விட்டுப் பிரியாத அவர்களது யோகத்தையும் க்ஷேமத்தையும் நான் வஹிக்கிறேன்.

**யோகம் :** என்றால் புதிதாகக் கிடைக்கும் நன்மை.

**க்ஷேமம் :** என்றால் அது நிலைத்திருத்தல்.

எவர்கள் வேறு பயன் ஒன்றையும் விரும்பாமல் என்னையும், என் குணங்களையும் என் உடைமைகளையும், எப்போதும் இடைவிடாது சிந்தித்திருந்து என்னிடம் ஆழ்ந்த த்யானம் செய்கிறார்களோ, அவர்களுக்கு என்னை அடைவதான மோக்ஷத்தையும் மறுபிறவி யில்லாத க்ஷேமத்தையும் நான் அளிக்கிறேன்.

**யோக க்ஷேமம் வஹாம்யஹம் :** என்பதற்குச் சிறந்த செல்வத்தைத் தருகிறேன் என்று சிலர் பொருள் கூறுவர். அர்ஜுனன் ஆத்ம நன்மையையே பிரார்த்திக்கிறான். கண்ணனும் அதையே

கீதையில் உபதேசம் செய்கிறான். ஆதலால் செல்வம் என்கிற பொருள் இங்கு பொருந்தாது ; மேலும், நித்யாபியுக்தானாம் என்பதற்கு, 'எப்போதும் என்னுடன் சேர்ந்திருக்க இச்சையுள்ளவன். என்பதே பொருள். ஆகையால் 'மோக்ஷம் கொடுக்கிறேன்' என்பதே சரியான பொருளாகும். இருந்தாலும் இவ்வுலகில் நாமிருக்கும் நாளில், நம் யோக க்ஷேமமும் பகவத் அதீனமாகையினால், செல்வம் என்பதும் ஒருவிதத்தில் பொருந்துவதே.

யே த்வந்யதேவதா பக்தா: யஜந்தே ச்ரத்தயாzந்விதா: ।
தேzபி மாமேவ கௌந்தேய யஜந்த்யவிதிபூர்வகம் ॥ 23 ॥

எவர் மற்ற தேவதைகளிடம் பக்தியுள்ளவர்களாய் சிரத்தையுடன் யாகம் செய்கிறார்களோ, முறையற்ற வழியில் அவர்கள் செய்த போதிலும், அந்த யாகத்தினால் நானே ஆராதிக்கப் பெற்றவனாகிறேன்.

வேதத்தில், "யஸ்ய ப்ருதிவீ சரீரம்: யஸ்ய ஆத்மா சரீரம்" உயிரும் உடலுமாய் விளங்கும் அனைவரும் தேவதைகள் உள்பட, பகவானுக்குச் சரீரமாகவும், அவனை அவர்களுக்கு ஆத்மாவாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. இதை அறியாமல் சிலர் தேவதைகளையே பரம் தெய்வம் என்று எண்ணி அவர்களைக் குறித்து யாகாதிகளைச் செய்கிறார்கள்; அவை முறையற்றவைகளாயினும், அந்த தேவதைகளுக்கு ஆத்மாவான என்னையே சேருகிறது; உடலில் பூசிய சந்தனமும், தலையில் சூட்டிய மாலையும் ஆத்மாவுக்கு உகப்பைத் தருவது போல, அந்த யாகாதிகளால் தேவதைகளின் ஆத்மாவான என்னையே பூசித்தவர்களாகிறார்கள் என்கிறான் கண்ணன்.

அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தா ச ப்ரபுரேவ ச ।
ந து மாம் அபிஜாநந்தி தத்வேநாதச் ச்யவந்தி தே ॥ 24 ॥

நானேயன்றோ எல்லா வேள்விகளையும் அனுபவிக்கிறவன்; அவைகளுக்குப் பலனை அளிப்பவனும் நானே. ஆனால் அவர்கள் என்னை அறிகிறார்களில்லை ; ஆகையினால் அவர்கள் என்னை அடைகிறார்களில்லை.

ப்ரபுரேவச - அந்தந்த கர்ம பலன்களைத் தருபவனும் நானே. அவர்கள் விரும்பும் அற்ப பலன்களை தேவர்கள் மூலம் பெற்றுப் போகிறார்களே ஒழிய உள்ளபடி பலனை அளிப்பவன் நானே என்பதை அவர்கள் உணர்ந்து என்னை அடைகிறதில்லை.

**யாந்தி தேவவ்ரதா தேவாந் பித்ரூந் யாந்தி பித்ருவ்ரதா: ।**
**பூதாநி யாந்தி பூதேஜ்யா: யாந்தி மத்யாஜிநோऽபி மாம் ॥ 25 ॥**

தேவதைகளைக் குறித்து ஆராதனம் செய்பவர் அத்தேவர்களை அடைகிறார்கள். பித்ருக்களை ஆராதிப்பவர் பித்ருக்களையும், மற்ற பூதங்களை ஆராதிப்பவர் அப்பூதங்களையுமே அடைகிறார்கள். என்னைக் குறித்து ஆராதிப்பவர் என்னையே அடைகிறார்கள். செய்யப்படும் யாகமோ ஆராதனமோ ஒன்று போலிருந்தாலும் தேவதைகளையோ பித்ருக்களையோ மற்ற பூதகணங்களையோ குறித்து யாகம் செய்பவர் அந்தந்த தேவதையையோ, பித்ருக்களையோ பூதங்களையோ அடைகின்றனர் "அவரவர் விதிவழி அவரவர் அடைய நின்றனர்". என்னைக்குறித்து யாகம் செய்பவர் மறுபிறவி இல்லாத பரமபதத்தையே அடைகின்றனர். செய்யும் செயல் ஒரே மாதிரி இருந்தாலும் அவரவர் நினைவுக்குச் சேர பலனை அடைகின்றனர் ; அப்படியிருக்க என்னை நினைத்து யாகம் முதலான நற்செயலைப் புரிந்து, அழியா மோக்ஷ இன்பத்தைப் பெறாமல் அல்ப பலனைப் பெறுகிறார்களே! இது என்ன விந்தை என்று வியப்புறுகிறான் கண்ணன்.

பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி ।
ததஹம் பக்த்யுபஹ்ருதமச்நாமி ப்ரயதாத்மந: ॥ 26 ॥

எவன் பக்தியுடன் எனக்கு ஒரு துளசி இலையையோ, ஏதோ ஒரு மலரையோ, கையில் கிடைக்கும் கனியையோ, அல்லது எளிதில் கிடைக்கும் நீரையோ கொடுக்கிறானோ, பக்தியுடன் அவன் தரும் அப்பொருளை நான் மிகுந்த உகப்போடு ஏற்றுக் கொள்கிறேன்.

இனியதொரு கனியோ, இன்றேல் ஒரு நறுமண மலரோ, துளசி இதழோ அதுவும் கிடைக்காவிடில் வெறும் தண்ணீரோ ஒருவன் அன்போடு பகவானுக்கு அர்ப்பணம் செய்தால், அவன் அதை வெகு உகப்போடு உட்கொள்கிறான்.

**பிரயத** : என்பதினால் வேறு ஒரு பலனையும் விரும்பாமல் பகவானுக்கு இடுவதே பயனாக உவப்புடன் சமர்ப்பிக்க வேண்டும். விதுரர் இட்ட அன்னம் போலும், மாலாகாரர் சூட்டிய மலர் போலும், கூனி ஆதரவோடு பூசிய சந்தனம் போலும் யான் எனது என்பது அற்று, வேறு பலனை நாடாமல் நாம் இடும் பொருளின் சீர்மையைக் கணிசியாது, நம் நெஞ்சின் நினைவையே அவன்

பார்க்கிறான். மடிதடவாத சோறும், சுருள் நாறாத பூவும், சுண்ணாம்பு படாத சந்தனமுமே இவர்கள் இட்டது. அதாவது அஹங்கார மமகார மில்லாமல் ஒரு பலனையும் விரும்பாமல் ப்ரீதி யுடனேயே கண்ணனுக்கு இவர்கள் கொடுத்திருக்கிறார்கள்.

**அஹம் அச்நாமி :** நான் உண்கிறேன். அவாப்த சமஸ்த காமனாய், அதாவது குறைவு ஒன்றுமில்லாத கோவிந்தனாய் இருந் தும், எல்லாம் நிறைந்தவனாயினும், அலப்ய லாபம் போல், (கிடைக் காதது தனக்குக் கிடைத்தாற் போல்) மிகவும் ஆதரவுடன் அதை நான் பெற்று உகக்கிறேன். இடுபவன் அன்பைக் காட்டிலும் பல மடங்கு உளம் உவந்து பெரும்பேறாகக் கருதி, அளவு கெட அதை மேல் விழுந்து நான் பெற்றுக் கொள்கிறேன் என்கிறான் பகவான்.

திரௌபதி அட்சய பாத்திரத்தில் ஒட்டியிருந்த ஒரு கீரையை எவ்வளவு மகிழ்ச்சியோடு உண்டானோ, கஜேந்திரன் இட எண்ணிய தாமரை மலரை ஸ்ரீவைகுண்டத்திலிருந்து அரை குலைய தலைகுலைய அம்மடுக்கரைக்கு ஓடி வந்து எவ்வாறு பெற்றுக் கொண் டானோ, சபரி என்னும் வேடுவச்சி வெகு காலமாக ருசி பார்த்து வைத்திருந்த கனிகளை ராமன் எவ்வளவு அன்புடன் உண்டானோ, ஏழை அந்தணன் குசேலர் கொடுத்த பிடிஅவலை எப்படி ருசித்தானோ அதுபோல சாதி, மதம், மனிதன், மிருகம், ஆண், பெண் என்று பாராமல் இடும்பொருள்களின் சிறப்பை நோக்காமல், ஒரு பக்தன் ப்ரீதியுடன் கொடுக்கும் பொருள் எதுவானாலும், பகவான் அதை மிகுந்த பரிப்புடன் பெற்றுச் சுவைக்கிறான்.

பகவான் ஆராதனைக்கு எளியன் என்பதையே இந்த சுலோகம் சொல்லுகிறது. இதற்கு மேல் கர்மயோகம், ஜ்ஞானயோகத்தைக் காட்டிலும் பக்தியோகம் செய்வது எளியது; அதனால் பெரும் பயனோ மிக உயர்ந்தது என்பதைச் சொல்லுகிறான்.

**யத் கரோஷி யதச்நாஸி யஜ்ஜுஹோஷி ததாஸி யத் ।**
**யத் தபஸ்யஸி கௌந்தேய தத் குருஷ்வ மதர்ப்பணம் ॥ 27 ॥**

*கௌந்தேய! நீ எதைச் செய்தாலும், எதை உண்டாலும், மற்று ஹோமம், தானம், தபஸ், தர்மம் எவையாயினும் அவை எல்லா வற்றையும் எனக்கு அர்ப்பணம் செய்துவிடு.*

நாம் செய்யும் எல்லாச் செயல்களையும் லௌகிகமானாலும் சந்தி, ஜபம், தவம், தானம் போன்ற வைதிகம் ஆனாலும்

மற்றும் நித்ய நைமித்ய கருமங்களையும், அதன் பயன்களையும் பகவானுக்கு—''ஸர்வம் ஸ்ரீக்ருஷ்ணார்ப்பணம்'' என்று சொல்லி சமர்ப்பித்துவிட வேண்டும் என்கிறான்.

நாம் செய்பவை யெல்லாம் பகவானால் நமக்குக் கொடுக்கப் பட்டுள்ள ஜ்ஞான சக்தியைக் கொண்டு பொறிபுலன்களாலேயே செய்கிறோம். நான் முன் காலை எடுத்து வைத்து, பின்காலை எடுத்து நடப்பதும் அவன் ஸங்கல்பத்தினாலேயே; நாமாக எதை யும் செய்கிறோம் என்பதில்லை; ஆதலால் நம் எல்லாச் செயல்களுக் கும் காரணன் அவனே. அச்செயல்களின் பலனும் அவனைச் சேர்ந்ததே என்று தெரிந்து, அவைகளை அவனுக்கே ஒப்படைத்து விடவேண்டும்.

**சுபாசுபபலைரேவம் மோக்ஷ்யஸே கர்மபந்தனை: ।**
**ஸந்ந்யாஸயோகயுக்தாத்மா விமுக்தோ மாம் உபைஷ்யஸி ॥ 28 ॥**

இப்படி உன் எல்லாச் செயல்களையும் எனக்குத் தியாகம் செய்யும் மனத்தையுடையவனாயிருந்து, அவைகளின் புண்ய பாப பலன்களிலிருந்து விடுபட்டு நீ என்னையே அடைவாய்.

நாம் செய்யும் எல்லாச் செயல்களையும் அதன் பயன்களையும், பகவானுக்கு அர்ப்பணம் செய்து விட்டால் அவைகளினால் உண்டாகும் புண்ய பாப பலன் நம்மைச் சேர்வதில்லை; பாபம் எப்படி மோக்ஷத்திற்குத் தடையாகுமோ, அதே போல் புண்ணிய மும் தடையே, (இதன் பலனையும் நாம் அனுபவித்தே தீர வேண்டும்) ஆகையால் அதுவும் தடையே.

''பத்ரம் புஷ்பம்'' என்கிற சுலோகத்தினால் தான் ஆராதனைக்கு எளியன் என்று தன் எளிமையைக் கூறினான். இதற்கு மேல்தன் ஸௌசீல்யம் என்னும் குணத்தைச் சொல்லுகிறான்; ''ஸமோஹம் ஸர்வபூதேஷு'' என்கிற சுலோகத்தினால், பகவான் நம்மை ரக்ஷிக் கும் போது, அவன் மேன்மையும், நம் தாழ்ச்சியும் தோன்றாத படி ஒரு நீராகக் கலப்பதே சீலம்' எனப்படும் குணமாகும்.

**ஸமோऽஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோऽஸ்தி ந ப்ரிய: ।**
**யே பஜந்தி து மாம் பக்த்யா மயி தே தேஷு சாப்யஹம் ॥ 29 ॥**

நான் எல்லா உயிர்களிடத்தும் ஸமமான சித்தம் உள்ளவன் எனக்கு நண்பனோ பகைவனோயில்லை. எவர் என்னை உகந்து உபா ஸிக்கிறார்களோ அவர்கள் என்னிடத்தில் இருக்கின்றனர்; நானும் அவர்களிடத்தில் இருக்கிறேன்.

எனக்கு எல்லோரும் ஸமம். ஒருவன் எனக்கு நண்பன் என்பதும் மற்றவன் பகைவன் என்பதுமில்லை; ஒருவரிடம் விருப்பமோ மற்றொருவரிடம் வெறுப்போ எனக்கு இடையாது. தேவனோ, மனிதனோ, விலங்கினமோ, பறவைகளோ ஏதாயினும், பிறப்பினாலும், உருவத்தினாலும், அறிவினாலும், அவர்களின் ஏற்றத் தாழ்வை நான் பார்ப்பதில்லை. ஒரு பயனையும் விரும்பாது என்னிடம் அன்பை (பக்தியை)ச் செய்கிறவர்களிடம் என் உயர்த்தி தோன்றாமல் நான் அவர்களோடு இணைந்து கலக்கிறேன்.

குகன் ஜாதியில் வேடன்; சக்கரவர்த்தி திருமகனான ராமன் அந்த வேடனை, "என் தம்பி" என்று சொல்லி தழுவிக் கொண்டிருக்கிறான். கஜேந்திரன் என்னும் யானை, கோகுலத்தில் பசுக்கள், கிஷ்கிந்தையில் வானரம் இப்படி பல விலங்கினங்களிடம் ஒரு நீராகக் கலந்திருக்கிறான். அதே போல அக்ரூரர், விதுரர், மாலாகாரர் என்று பலரிடமும் அவர்களின் பிறப்பு, ஜாதி, ஞான பக்திகளைப் பாராமல் தன்னை அன்புடன் பற்றினதே பற்றாசாக அவர்களிடம் தன் மேன்மை தோற்றாமல் கலந்து பரிமாறியிருக்கிறான் பகவான்.

**அபிசேத் ஸுதுராசாரோ பஜதே மாம் அநந்யபாக் ।**
**ஸாதுரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ: ॥ 30**

தீய ஒழுக்கம் உடையவனாயினும், வேறு பயனைக் கருதாமல் என்னிடம் உறுதியான அன்புடையோன், என்னால் நன்கு மதிக்கப்பட்டவனாகிறான்.

என்னிடம் உண்மையான பக்தி உடையவன் தீய ஒழுக்கம் உள்ளவனாக இரான். அப்படி ஒருக்கால் ஒருவன் தீய ஒழுக்கம் உள்ளவனாயினும், வேறு பலனை விரும்பாமல் என்னிடம் அன்பைச் செய்வானாகில், அவனை என் உண்மையான பக்தனாகவே நான் மதிக்கிறேன்; ஏனெனில் அவன் என் மேன்மையை அறிந்து மற்ற தேவதைகளைப் பற்றாமல் என்னையே பற்றியிருக்கிறானன்றோ!

தன்னைப் பற்றுகிறவனுடைய, குலம் கோத்திரம் ஒழுக்கம் இவைகளை பகவான் கணிசிப்பதில்லை. எவனும் அவனிடம் பக்தி செய்யலாம் என்பதை மேலே கூறினான்; இதில் தன்னைப் பற்றி நிற்கும் பக்தரின் குற்றம் குறைகளைத்தான் பொருட்படுத்துவதில்லை என்பதை பகவான் எடுத்துக் காட்டுகிறான். தன்னிடம் அவர்கள் வைத்திருக்கும் அன்பையிட்டே அவர்களை அவன் கைக்கொள்ளுகிறான்; "என் அடியார் அது செய்யார்; செய்தாரேல் நன்று செய்தார்" என்பது பகவானுடைய கொள்கை.

ஒவ்வொருவனும் தன் வர்ணாசிரம தர்மத்தைக் கடைபிடித்து நடத்தல் வேண்டும். ஆனால் தன்னிடம் ஒரு மடை செய்து, அன்பு செய்கிறவன் தன் வர்ணாச்ரம தர்மத்திலிருந்து நழுவ நேர்ந்தால், அதைப் பொருட்படுத்தாமல் அவனது அநந்ய பக்தியைத் தான் மிகவும் போற்றுவதாகக் கூறுகிறான் கண்ணன்.

கீழ், "பத்ரம் புஷ்பம்" என்கிற சுலோகத்தில் தன் எளிமையை (ஸௌலப்யத்தைக், கூறினான், "ஸமோஹம் ஸர்வ பூதேஷு" என்கிற சுலோகத்தில் "இணைவனும் எப்பொருட்கும்" என்கிற படியே எவருடனும் புரையறக் கலக்கும் தன் நீர்மையை (ஸௌசீல்யத்தை) வெளியிட்டான்.

"அபிசேத் ஸுதுராசாரோ" என்னும் இதில் தன் பக்தனின் குற்றம் குறைகளைக் காணாத தனது "வாத்ஸல்யத்தை" தெரிவிக்கிறான். வாத்ஸல்யமாவது – தாய்ப் பசுவுக்கு கன்றினிடம் உள்ள பரிவு; கன்றின் அழுக்கைப் பாராமல் அன்பின் மிகுதியால் அதனிடம் பொங்கும் பரிவைக் காட்டுகிறது பசு. தாயைத் தவிர கதியற்றது கன்று; அதுபோல நமது அநந்ய கதித்வத்தைப் பார்த்து (வேறு புகலின்மை) தன் பக்தனின் தோஷங்களை பகவான் பொறுத்துக் கொள்ளுகிறான்.

**க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா சச்வத் சாந்திம் நிகச்சதி ।**
**கௌந்தேய ப்ரதிஜாநீஹி ந மே பக்த: ப்ரணச்யதி ॥ 31 ॥**

விரைவிலேயே பக்தி யோகத்தில் மனமுடைய என் பக்தன் நிலையான அமைதியை அடைகிறான். இது நிச்சயம், அவன் ஒருக்காலும் நாசமடைகிறதில்லை; அர்ஜுன! இதை நீ ப்ரதிக்ஞை செய்.

ஒருவன் பகவானைப் பற்றினால், பக்திக்குத் தடையான பாபங்கள் போய் அவனுக்கு, பகவத் பக்தி உண்டாகிறது. தீய ஒழுக்கங்களுக்குக் காரணமான ராஜஸ, தாமஸ குணங்கள் விலகுகிறது. அவன் பக்தி முதிர்ந்து, சாஸ்திர சம்மதமில்லாத செயல்கள் அவனை விட்டுவிடும் நிலை ஏற்படும். அர்ஜுன! என் பக்தனான நீ இதைச் செய்.

தர்மாத்மா - என்றால் இங்கு பகவத் த்யானம் உள்ளவன் என்பது பொருள். சாந்தி என்றால் இனி பாபங்களைச் செய்ய மாட்டான் என்பது கருத்து.

என் பக்தன் எவனும் அழிவை அடைய மாட்டான் என்பதை நீ சத்யம் செய் என்கிறான் அர்ஜுனனைப் பார்த்துக் கண்ணன். ஏன்? தன் வார்த்தையை அழிய மாறியும் தன் பக்தனின் வார்த்தையை நிறைவேற்றுவதில் முனைந்திருப்பவன் பகவான். 'ஆயுதம் எடேன்' என்ற கண்ணன் பாரதப் போரில் தன் பக்தன் பீஷ்மனின் வார்த்தையை நிறைவேற்ற, தன் வார்த்தையை அழிய மாறி சக்ராயுதத்தைக் கையில் எடுத்திருக்கிறான்; ஆதலால் தன் பக்தனை அர்ஜுனனைப் பார்த்து "நீ ப்ரதிஜ்ஞை செய்" என்கிறான்.

**மாம் ஹி பார்த்த வ்யபாச்ரித்ய யே஽பி ஸ்யு: பாபயோநய: ।**
**ஸ்த்ரியோ வைச்யாஸ் ததா சூத்ரா: தே஽பி யாந்தி பராம் கதிம் ॥ 32 ॥**

**கிம் புநர் ப்ராஹ்மணா: புண்யா: பக்தா ராஜர்ஷயஸ்ததா ।**
**அநித்யம் அஸுகம் லோகம் இமம் ப்ராப்ய பஜஸ்வ மாம் ॥ 33 ॥**

அர்ஜுன! எத்தகைய பாபப் பிறவியாயினும் பெண்களாயினும், வைச்ய சூத்திரராயினும் என்னைப் பற்றினவர் யாராயினும் மேலான கதியைப் பெறுகிறார்கள்.

புண்ய ஜன்மாவில் பிறந்த பிராஹ்மணர், ராஜ ரிஷிகளைப் பற்றி கூறவும் வேண்டுமோ? ஆதலால் அழியக் கூடியதும், துக்கமே நிறைந்ததுமான இந்த உலகிலுள்ள நீ நற்கதி பெற என்னையே பற்றுவாயாக.

ஸர்வேச்வரனை ஒருவன் பற்றினால், அவனுக்கு, பக்திக்குத் தடையாயுள்ள பாபங்கள் விலகும்; முதலில் பகவானிடம் பக்தி உண்டாகிறது; படிப்படியாக அது பரபக்தி, பரஜ்ஞானம், பரம பக்தியாக முதிர்ந்து அவன் மோக்ஷம் பெறுகிறான்.

இதற்குமேல் இந்த அத்யாயத்தின் இறுதி சுலோகமான 'மன்மநாபவ மத் பக்த:' என்னும் சுலோகத்தில் பக்தியின் ஸ்வரூபத்தை விவரிக்கிறான் பகவான்;

**மந்மநா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு ।**
**மாமேவைஷ்யஸி யுக்த்வைவம் ஆத்மாநம் மத்பராயண: ॥ 34 ॥**

என்னிடம் உன் மனத்தை வைத்திரு; என்பால் பக்தியைச் செய்திடு, எனக்கு ஆராதனம் செய், என்னை வணங்கு, என்னையே முக்கிய பயனாகக் கொண்டு, உன் மனத்தை என்னிடம் வைத்திட்டால் நீ என்னையே அடைவாய்.

வேறு விஷயம் கலசாமல் பகவானையே எப்போதும் தைல தாரை போல் இடைவிடாது சிந்திக்க வேண்டும்; இதனால் அவனிடம் அளவற்ற அன்பு உண்டாகும். இந்த அன்பே பக்தி எனப்படும். அந்த அன்பு உள்ளடங்காமல் பகவானுக்கு பூஜை நமஸ்காரங்கள் செய்யும்படி தூண்டுதல் ஏற்படும். பக்தன் பகவானே தான் அடையக்கூடிய மேலான பயன் என்று எண்ணியிருக்க வேண்டும்; இப்படியிருக்குமவன் ஸர்வேச்வரனையே அடைகிறான்.

ப்ரஹ்மம் என்பது கிடையாது, எல்லாம் சூன்யம் என்று சொல்லுகிற மதத்தில், ப்ரஹ்மத்தை நினைப்பது என்பது முடியாது.

அத்வைத மதத்தில் ப்ரஹ்மம் என்பது ஒன்று உண்டு; அது ஒன்றே உண்மைப் பொருள்; மற்ற அறிவுள்ள சேதனன், அறிவேயில்லாத அசேதனம் (ஜடப்பொருள்) எல்லாம் மித்யை, வெறும் தோற்றம். அந்த ப்ரஹ்மத்திற்கும் வடிவமோ, குணங்களோ ஒன்றுமில்லை என்பது அத்வைதக் கொள்கை. இப்படி ரூப குணங்களில்லாத தத்வத்தை யாராலும் நினைக்க இயலாது. ஆதலால் 'மந்மநாபவ' எப்போதும் என்னை நினைத்திரு என்று கண்ணன் கூறும் பக்தி யோகம் அத்வைதிகளின் கருத்துக்கு ஏற்றதல்ல; மேலும் பக்தி யோகத்திற்கு, பக்தி செய்பவன் ஒருவன், பக்தி செய்யப்படுபவன் மற்றொருவன் என இரண்டு தத்வங்கள் (உண்மைப் பொருள்கள்) இருந்தாகவேண்டும்; ப்ரஹ்மம் ஒன்றே உண்மை; வேறு தத்வம் எதுவுமில்லை என்கிற அத்வைத மதக் கொள்கைக்கு பக்தி மார்க்கம் சிறிதும் சேராது.

பக்தி என்பது ஒரு ஜ்ஞான விசேஷம். அறிவின் தன்மை; பகவானின் வடிவம் குணம், உடமை, செயல்கள் (ரூப குண விபூதி சேஷ்டிதங்கள்) இவற்றை உள்ளபடி அறிந்து அவனிடம் அன்பு பெருகி, இவற்றுடன் அவனைச் சிந்திக்கிற சிந்தனமே பக்தி எனப்படும்.

மன்மநாபவ : என்னிடம் உன் மனத்தை வைத்திரு; அதாவது பகவானான என்னை எப்போதும் நினைத்திரு; அவனை நினைப்பது எவ்வாறு? எனில்:

உலகிலுள்ள ப்ரஹ்மா முதல் எறும்பு ஈறாக எல்லா சேதனங்கள் மற்றும் அசேதனங்களைக் காட்டிலும் வேறுபட்டவன், ஸர்வேச்வரன். அவனே புருஷோத்தமன். அவனே எல்லோருக்கும் ஸ்வாமி, (உடையவன், சேஷி). மற்றெல்லாம் அவனுடைய

சொத்து (உடமை—சேஷப்பொருள்). அவனே எல்லாவற்றையும் தரிப்பவன் (தாங்குபவன்) அவனே ஸர்வ நியாமகன் (ஆணையிட்டு நடத்துபவன்).

ஜ்ஞானம், சக்தி, பலம், ஐச்வர்யம், வீர்யம் தேஜஸ், அதாவது அறிவு, ஆற்றல், வலிமை, செல்வம், ஆண்மை, ஒளி, என்னும் மேன்மைக் குணங்கள் ஆறும் உடையவன் அவன்.

க்ருபை, க்ஷமை, ஸௌலப்ய, ஸௌசீல்ய, வாத்ஸல்ய, ஸௌந்தர்ய, ஸௌகுமார்யமாகிய நீர்மைக் குணங்கள் பெற்றவன் இறைவன்; அதாவது, கருணை, பொறுமை, எளிமை, சமத்வம், பக்தனின் குற்றம் குறைகளைக் காணாத தான உள்ளம், அழகு, இளமை போன்ற பல இனிமைக் குணங்கள் படைத்தவன் பகவான். இப்படி ஒப்புயர்வற்ற என்னை எப்போதும் இடைவிடாது மனனம் செய்வதே "மன்மனாபவ" என்பதின் பொருள்.

எப்படி ஒரு குலமகள் கொண்டானை யல்லால் நினையாதிருப்பாளோ, அது போல உண்மையான பகவத் பக்தனுக்கு பகவானைத் தவிர வேறு நினைவு இராது. அந்நினைவும் இனிமை மிகுந்து காணும்.

மத்யாஜிமநா: பகவானிட மிருக்கும் அன்புக்குச் சேர அவனுக்கு ஆராதனம் செய்வதில் உவந்த உள்ளத்தனாயிருக்க வேண்டும்.

மாம் நமஸ்குரு மநா: மனம், மொழி மெய் (திரிகரணங்களால்) அவனுக்கு அன்புடன் வணக்கம் செய்பவனாக வேண்டும்.

மத் பாராயண மநா: பகவானையே ஆதாரமாக எப்போதும் நினைத்திருக்க வேண்டும்; நொடிப்பொழுது அவனை நினையாவிடில் தரிப்பு ஏற்படாத மனமுடையவனாயிருக்க வேண்டும்.

இப்படி பகவானை நினைத்திருந்தாயாகில் நீ அந்த பரம புருஷனையே அடைவாய் என்கிறான் கண்ணன்.

## ஸ்ரீ ஆளவந்தாரின் கீதார்த்த ஸங்க்ரஹம்

**ஸ்வ மஹாத்ம்யம் மநுஷ்யத்வே பரத்வஞ்ச மஹாத்மநாம்**
**விசேஷோ நவமே யோக பக்திருப: ப்ரகீர்த்தித:**

தான் மநுஷ்யனாய் அவதரிக்கும் போதும் தன்னைவிட்டு நழுவாத தன் மேன்மையும், ஞானியின் சிறப்பான பக்தி யோகமும் ஒன்பதாம் அத்யாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே சரணம்!

ஒன்பதாம் அத்யாயம் முற்றிற்று



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீமத் பகவத் கீதை

## பத்தாவது அத்யாயம்

### அவதாரிகை

ஒன்பதாம் அத்யாயத்தில் கர்மயோகம் ஞான யோகம் இவைகளைக் காட்டிலும் பக்தி யோகமே சிறந்தது என்று சொல்லி, அந்த பக்தி யோகத்தை அதன் அங்கங்களுடன் விரிவாகக் கண்ணன் கூறினன்.

இனி இந்த பத்தாம் அத்யாயத்தில் பக்தி உண்டாகி, அது வளர்வதற்கான வழியையும், இந்த உலகில் அறிவுள்ள அறிவில்லாத எல்லாப் பொருள்களையும் தானே படைத்து, தரித்து ஆணையிட்டு நடத்துபவன் என்பதையும், உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் தனக்குச் சரீரம்; அவைகளுக்கு தான் ஒருவனே ஆத்மா என்பதையும், மற்றும் தன் ஜ்ஞான சக்தி கலியாண குணங்களையும் விரிவாக உபதேசிக்கிறான் கண்ணன்.

**ஸ்ரீ பகவான் உவாச :** கண்ணன் கூறியது.

**பூய ஏவ மஹாபாஹோ ச்ருணு மே பரமம் வச:।**
**யத் தேऽஹம் ப்ரீயமாணாய வக்ஷ்யாமி ஹிதகாம்யயா ॥ 1 ॥**

திண்தோள் படைத்த வீர! என் பெருமையெல்லாம் கேட்டுக் களிக்கும் உனக்கு, என்னிடம் பக்தி உண்டாகவும், அது நன்கு செழித்து வளரவும் நீ ஆத்ம நன்மை பெறவும் விரும்பி, நான் உனக்கு உபதேசிக்கிறேன், கேள்.

அர்ஜுன! நான் இது வரையில் எனக்குள்ள பெருமைகளையெல்லாம் உனக்குச் சொன்னேன். அதைக் கேட்ட உனக்கு என்னிடம் அசூயைஉண்டாகவில்லை. அதற்குப் பதிலாக என்னிடம் அன்பே உண்டாயிருக்கிறது. ஆதலால், உன் ஆத்ம நன்மையின் பொருட்டு உனக்கு என்னிடம் பக்தி உண்டாகி அது வளர்வதற்கான வழியைச் சொல்லுகிறேன். அதை நீ கவனமாகக் கேட்பாயாக.

ந மே விது: ஸுரகணு: ப்ரபவம் ந மஹர்ஷய: ।
அஹமாதிர் ஹி தேவாநாம் மஹர்ஷீணுஞ்ச ஸர்வச: ॥ 2 ॥

தேவர்களுக்கும் மஹரிஷிகளுக்கும் அறிவு, ஆற்றல்களை அளிப்பவன் நானே; அவர்களின் ஞான சக்திகள் அளவு பட்டவை. ஆதலால் அவர்களும் என்னை உள்ளபடி அறிய முடியாது.

மனிதர்களால் அறிய முடியாதவைகளை தேவர்களும் ரிஷிகளும் அறியக் கூடியவர்களேஆனுலும் அவர்களது அறிவும் ஆற்றலும் அளவுபட்டிருக்கும். அவை என்னுலேயே அவர்களுக்குக் கொடுக்கப்பட்டவை; அதைக் கொண்டு மட்டும் அவர்கள் என் ஸ்வரூப ரூப குணங்களை உள்ளபடி அறிய இயலாது.

யோ மாமஜம் அநாதிஞ்ச வேத்தி லோகமஹேச்வரம் ।
அஸம்மூட: ஸ மர்த்யேஷு ஸர்வபாபை: ப்ரமுச்யதே ॥ 3 ॥

எவன் ஒருவன் என்னை ஒப்புயர்வு அற்றவனுகவும், அநாதியான வனுகவும், பிறப்பில்லாதவனுகவும், உலகுகளெல்லாம் ஸ்வாமி என்றும் அறிகிருனே, அவன் தன் பாபங்களின்றும் விடுபடு கிருன்.

பகவான் அசேதனங்களைப் போல் மாறுதல் இல்லாதவன், சேதனர்களைப் போல் கர்மத்தினுல் பிறவாதவன், முக்தர்களைப் போல சில காலம் பூலோகத்திலிருந்து மோக்ஷ அடைபவனு மல்லன். இப்படி சேதன அசேதன முக்தர்களிலிருந்து வேறு பட்டவன் (விலக்ஷணன்) அவர்களைவிட மேலானவன், புருஷோத்த மன், நித்யன் அதாவது அழிவில்லாதவன், ஒருவித தோஷமும் தட்டாதவன், கல்யாண குணக் கடல், இப்படி அவனை அறிந்தால் பக்திக்குத் தடையான நம் பாபங்கள் விலகி, நமக்கு பக்தி உண்டாகும்.

புத்திர் ஜ்ஞாநம் அஸம்மோஹ: க்ஷமா ஸத்யம் தமச் சம: ।
ஸுகம் துக்கம் பவோzபாவோ பயஞ்சாபயமேவ ச ॥ 4 ॥

அஹிம்ஸா ஸமதா துஷ்டிஸ் தபோ தாநம் யசோzயச: ।
பவந்தி பாவா பூதாநாம் மத்த ஏவ ப்ருதக்விதா: ॥ 5 ॥

புத்தி மோஹமின்மை, பொறுமை சத்தியம், வெளிப்புலனை யடக்குதல், மனத்தை அடக்குதல், சுகம் துக்கம், பிறப்பு, இறப்பு,

பயம் பயமின்மை, அஹிம்ஸை, மனத்தின்நடுநிலை, திருப்தி, தானம், தபஸ், புகழ்ச்சி இகழ்ச்சி போன்ற பலவிதமான குணங்கள் எல்லா ஜீவன்களுக்கும் என்னிடமிருந்து உண்டாகின்றன.

புத்தி என்றால் நுண்ணறிவு; ஜ்ஞாம்-ஆத்ம பரமாத்ம அறிவு, அசம்மோஹம்-மனத்தெளிவு; க்ஷமை-பொறுமை; சுகம் துக்கம்-இன்ப துன்பங்கள். நாம் விரும்புவது கிடைத்தால் சுகம், இன்பம்; கிடையாவிடில் துன்பம். சத்தியம்-கேட்டதை உள்ளபடி பேசுதல்; பிறர்க்குத் துன்பமில்லாமல் பேசுதலும் சத்தியமே; தமம்-மெய், வாய், கண், மூக்கு, செவி இவ்வைம்புலன்களை அடக்குதல். சமம் மனம், புத்தி, அஹங்காரம் இவைகளின் அமைதி. அஹிம்சை-ஓர் உயிருக்கும் இன்னா செய்யாமை. ஸமதா-விருப்பு வெறுப்புகளில் சமநிலை. துஷ்டி-என்றால் சந்துஷ்டி, திருப்தி, தபஸ்-புலனடக்குதல்; தானம்-தனக்குப் பயன்படும் பொருளை பிறர்க்கு உகந்து அளித்தல்; யச: அயச:-புகழ்ச்சி இகழ்ச்சி.

இவைகளை யெல்லாம் அவரவர் வினைப்பயனுக்குத் தக்கபடி பகவான் அளிக்கிறான்.

மஹர்ஷய: ஸப்த பூர்வே சத்வாரோ மநவஸ்ததா ।
மத்பாவா மாநஸா ஜாதா யேஷாம் லோகே இமா: ப்ரஜா: ॥ 6 ॥

ஏழு மாமுனிவர்களும், நான்கு மனுக்களும் முன்னம் ப்ரஹ்மாவின் மனத்திலிருந்து உண்டானார்கள். இவர்கள் என் ஆணைக்கு உட்பட்டவர்கள்; என் எண்ணத்தைப் பின்பற்றியே நடப்பவர்கள். உலகிலுள்ள எல்லா மனிதர்களும் இவர்கள் வம்சத்தில் (பரம்பரையில்) உண்டானவர்களே.

ப்ருகு, மரீசி, அத்ரி, புலகர், அம்பரீஷர், க்ரது, புலஸ்தியர் என்னும் ஏழு ரிஷிகளும், சுவாரோசிஷர், சுவாயம்பு, ரைவதர், உத்தமர் என்கிற நான்கு மனுக்களும், நான்முக ப்ரஹ்மாவின் உள்ளத்திலிருந்து உண்டானவர்கள். அவர்கள் என் ஸங்கல்பத்தை (நினைவை) யொட்டியே நடப்பவர்கள், இவர்கள் வம்சத்திலேயே எல்லா மனிதர்களும் தோன்றியுள்ளனர்.

ஏதாம் விபூதிம் யோகஞ்ச மம யோ வேத்தி தத்வத: ।
ஸோzவிகம்ப்யேந யோகேந யுஜ்யதே நாத்ர ஸம்சய: ॥ 7 ॥

எவன் என்னுடைய இந்த நியமன (ஆளும்) சக்தியையும் என் கல்யாண குணங்களையும் உள்ளபடி அறிகிறானோ, அவன் த்ருடமான பக்தி யோகத்தைப் பெறுகிறான்.

**அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்த: ஸர்வம் ப்ரவர்ததே ।**
**இதி மத்வா பஜந்தே மாம் புதா பாவஸமந்விதா: ॥ 8 ॥**

எல்லாப் பொருள்களின் உற்பத்திக் காரணம் நான். அவை செயலாற்றும் சக்தியையும் என்னிடமிருந்தே பெறுகின்றன. இதை அறிந்த ஜ்ஞானிகள் என்னிடம் அன்பைச் செய்கிறார்கள்.

இவ்வுலகிலுள்ள பலவிதமான சேதன அசேதனங்களின் உற்பத்திக்கு நானே காரணம். என்றால் கொடுக்கப்பட்ட சக்தியைக் கொண்டே அவை பலவித செயல்களைச் செய்கின்றன. இப்படி எனக்கேயுள்ள தனிச்சிறப்பை ஞானிகள் அறிந்து என்னிடம் அன்பு மிகுந்து பக்தியைச் செய்கிறார்கள்.

இப்படி சில சுலோகங்களில் பகவத் பக்தி உண்டாகும் வழியைச் சொன்னான் பகவான். பக்தி உண்டானவர்கள் பொழுது போக்குவது எவ்விதம் என்பதை அடுத்தபடி சொல்லுகிறான்.

**மச்சித்தா மத்கதப்ராணா: போதயந்த: பரஸ்பரம் ।**
**கதயந்தச்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச ॥ 9 ॥**

என் பக்தர்கள், தங்கள் சித்தத்தை என்னிடமே வைத்திருப்பர். தங்கள் பிராணனையும் என்பால் செலுத்தியிருப்பர். ஒருவருக்கொருவர் பேசும்போதும் என் குணங்களையே கூறி என் கதைகளையே கேட்டு மகிழ்ந்திருப்பர்.

அதாவது தனித்திருக்கையில் என்னையே நினைத்திருப்பர்; என்னை நினையாவிடில் தரிப்பில்லாமல் என்னிடமே அவர்கள் பிராணனை வைத்திருப்பர். மற்றவரிடம் கலந்துரையாடும் போதும் என் குணங்களையே வெளியிட்டு, என் கதைகளையே கேட்டு மகிழ்வுறுவர்.

தாங்கள் அனுபவிக்கும் என் தெய்வத் திருமேனியையும், எனது கல்யாண குணங்களையும், என் விந்தைச் செயல்களையும் பிறர்க்கு ஒரு பயனையும் விரும்பாமல் சொல்லி, ஆனந்தம் அடைவர்; கேட்பவரும் அன்புடன் அவைகளைக் கேட்டு, மகிழ்ந்திருப்பர்.

**தேஷாம் ஸததயுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம் ।**
**ததாமி புத்தியோகம் தம் யேந மாம் உபயாந்தி தே ॥ 10 ॥**

எப்பொழுதும் என்னுடன் கூடியிருப்பதையே பயனுக விரும்பி, என்னிடம் பக்தி செய்பவர்களுக்கு, நானே அதற்குண்டான பரி பக்குவத்தைச் செய்து தருகிறேன்.

பக்தி என்பது பகவானிடம் செய்யும் அன்பு. இது பரபக்தி, பரஜ்ஞானம், பரமபக்தி என்று மூன்றுவித நிலையாக இருக்கும். பரமபக்தி நிலையைப் பெற்ற பின்னரே பகவானை அடைவதான மோக்ஷம் கிட்டும்.

மூன்றும் சுலோகம் முதல் எட்டாம் சுலோகம் வரை பக்தி உண்டாகும் உபாயத்தைச் சொன்ஞன். அதற்கு மேலே அது பர பக்தி பரஜ்ஞானமாக வளர்ந்த ஜ்ஞானியின் நிலையைச் சொன்ஞன். அவர்கள் எப்படித் தன்னை எப்போதும் நினைத்து தரித்திருப்பர் என்பதையும் பிறகு சொன்ஞன். இவர்களின் பக்தியை பரமபக்தி யாக, தானே வளரச் செய்வதாகக் கண்ணன் கூறுகிருன்,

**தேஷாமேவாநுகம்பார்த்தம் அஹம் அஜ்ஞாநஜம் தம: ।**
**நாசயாம்யாத்மபாவஸ்த்த: ஜ்ஞாநதீபேந பாஸ்வதா ॥ 11 ॥**

எனது கருணையினுலேயே நான் அவர்கள் உள்ளத்தில் வீற்றி ருந்து, பிரகாசிக்கிற ஜ்ஞாந ஒளியினுல் அஜ்ஞானமான இருளைப் போக்குகிறேன்.

**அநுகம்பார்த்தம் :** அவர்களின் நன்மைக்காகவே தனது அருளினுல் அவர்கள் இதயத்தில் இருந்தவாறு தன் கல்யாண குணங்களை வெளிப்படுத்துகிருன். இதனுல் அவர்களுக்கு பகவத் ஜ்ஞானம் உண்டாகிறது. அதனுல் அஜ்ஞான இருளினுல் அவர் களுக்குள்ள உலக விஷய விருப்பங்கள் மாய்கின்றன; பகவானிடம் அன்பு (பக்தி) உண்டாகிறது.

**அர்ஜுன உவாச** - அர்ஜுனன் கூறுகிருன்.

**பரம் ப்ரஹ்ம பரந்தாம பவித்ரம் பரமம் பவாந் ।**
**புருஷம் சாச்வதம் திவ்யம் ஆதிதேவம் அஜம் விபும் ॥ 12 ॥**

**ஆஹுஸ் த்வாம் ருஷயஸ் ஸர்வே தேவர்ஷிர் நாரதஸ் ததா ।**
**அஸிதோ தேவலோ வ்யாஸ: ஸ்வயஞ்சைவ ப்ரவீஷி மே ॥ 13 ॥**

க்ருஷ்ணு! உம்மை பரப்ரஹ்மம் என்றும், பரஞ்சோதி என்றும், பரிசுத்தன் என்றும் சுருதிகள் கூறுகின்றன; உலகத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல் இவைகளுக்குக் காரணமாயுள்ள

பரஞ்சோதி நீரே ஆகிறீர். தன்னைப் பற்றினரின் பாபங்களைப் போக்கி, ஸம்ஸார பந்தத்தை அறுத்திடும் பரப்ரஹ்மமும் நீரே, பகவானிடம் பக்தி செய்பவரின் பாபங்கள், "போய பிழையும் புகு தருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்". நாராயணனே பரம் ப்ரஹ்மம், பரஞ்சோதி, பவித்ரம், பரமம் என்று வேதம் கோஷிக் கிறது.

கண்ணா! உன்னை உள்ளபடி அறிந்த ரிஷிகள், உன்னை நித்தியனாகவும், என்றும் இருப்பவன், அழிவில்லாதவனாகவும், பரம புருஷனாகவும். படைத்தல் காத்தல் அழித்தல் இவைகளுக்கு ஸர்வ காரணனாகவும், (நன்மைப்போல் கர்மத்தினால்) பிறப்பில்லாத வனாகவும், எங்கும் நிறைந்தவனாகவும் சொல்லுகிறார்கள். நீயும் அவ்வண்ணமே உன்னைச் சொல்லிக் கொள்ளுகிறாய்.

இவ்வாறு வேதங்களும், ரிஷிகளும், சொல்வதையே நீயும் உன்னைப்பற்றி சொல்வதால் இவையெல்லாம் உண்மை என்றே நான் நம்புகிறேன்.

ஸர்வமேதத் ரிதம் மந்யே யந்மாம் வதஸி கேசவ ।
ந ஹி தே பகவந் வ்யக்திம் விதுர் தேவா ந தாநவா: ॥ 14 ॥

கேசவ! நீ எனக்குச் சொன்னதெல்லாம் முற்றிலும் உண்மை என்றே நான் நம்புகிறேன்; உன் அவதாரங்களெல்லாம் உண்மையே. இதை தேவர்களும் அறிவதில்லை.

க்ருஷ்ண! இல்லாதவைகளை தற்புகழ்ச்சியாக நீ எதுவும் சொல்லவில்லை; உனது மேலான ஞான, சக்தி, பலம், ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ் இவைகளை அறிவில் சிறந்த தேவர்களும் உள்ளபடி அறியமாட்டார்கள்; அப்படி இருக்க அசுரருக்கு எப்படி இவை தெரியப்போகும்.

ஸ்வயமேவாத்மநாத்மாநம் வேத்த த்வம் புருஷோத்தம ।
பூதபாவந பூதேச தேவதேவ ஜகத்பதே ॥ 15 ॥

புருஷோத்தம! பூதங்களாகப் பூத்தோனே! உயிர்கட்கு இறைவா! அமரர் தலைவா! அண்டர் நாயகா! நீர் உம்மை தானாகவே உள்ளபடி உணர்ந்திருப்பவன். ஆதலால் எனக்கு உன்னைப் பற்றி நன்றாகச் சொல்ல வல்லவன்.

வக்துமர் ஹஸ்யசேஷேண திவ்யா ஹ்யாத்மவிபூதய: ।
யாபிர் விபூதிபிர் லோகாந் இமாம்ஸ்த்வம் வ்யாப்ய திஷ்டஸி ॥ 16 ॥

உலகெல்லாம் வியாபித்து (பரந்து) தரித்து நியமிக்கும் உனது திவ்யமான சக்தியை முற்றிலும் அறிவாய் ஆதலால், நீ ஒருவனே அவைகளை எனக்குத் தெளிவுற எடுத்துரைக்க வல்லவன்.

**கதம் வித்யாமஹம் யோகீ த்வாம் ஸதா பரிசிந்தயந் ।**
**கேஷு கேஷு ச பாவேஷு சிந்த்யோ஽ஸி பகவந் மயா ॥ 17 ॥**

**விஸ்தரேணாத்மநோ யோகம் விபூதிஞ்ச ஜநார்தந ।**
**பூய: கதய த்ருப்திர்ஹி ச்ருண்வதோ நாஸ்தி மே஽ம்ருதம் ॥ 18 ॥**

க்ருஷ்ணா! பக்தி யோகம் செய்யும் நான் உன்னை எந்தெந்த பொருள்களில் எவ்வாறு தியானம் செய்ய வேண்டும்? எந்தெந்த கலியாண குணங்கள் நிறைந்தவனாய் உன்னை நான் சிந்திக்க வேண்டும்? இவையெல்லாவற்றையும் எனக்கு நீ விரிவாக உபதேசிக்க வேண்டும்.

க்ருஷ்ணா! உனது எல்லா நற்குணங்களையும், நியமிக்கும் (ஆளும்) சக்தியையும் மறுபடி நீ எனக்கு விரிவாகச் சொல்ல வேண்டும். உனது அம்ருதமான மொழிகளைக் கேட்பதில் எனக்கு போதும் என்கிற த்ருப்தி இல்லை.

உலகிலுள்ள விஷயங்கள் எதுவாயினும் அளவுக்கு அதிகமாகும்போது தெவிட்டும் தன்மை உடையவையே. ஆனால் பகவத் விஷயமோ அப்படிக்கில்லை. நாள் திங்கள் ஆண்டு ஊழி ஊழி தொறும் அப்பொழுதைக்கப்பொழுது என் ஆரா அமுதமே" என்கிறார் நம்மாழ்வார். அர்ச்சையில் பகவானை நாம் எத்தனை தடவை சேவித்தாலும், அவன் குணங்களையும், சரித்திரங்களையும், செயல்களையும் எத்தனை தடவை கேட்டாலும், அவை தெவிட்டாத அம்ருதமாயிருக்கும். கொள்ளமாளா இன்ப வெள்ளமாயிருக்கும். மேலும் மேலும் கேட்பதில் இச்சையைப் பிறப்பிக்கும்.

**ஸ்ரீபகவான் உவாச ।** கண்ணன் கூறியது.

**ஹந்த தே கதயிஷ்யாமி விபூதீராத்மந: சுபா: ।**
**ப்ராதாந்யத: குருச்ரேஷ்ட நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே ॥ 19 ॥**

குருகுலத் தோன்றலே! இவ்வளவு விருப்பமுள்ள உனக்கு எனது திவ்யமான விபூதி (உரிய பொருளில்) முக்கியமான சிலவற்றைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. என் விபூதி (சொத்து) அளவற்றது. முடிவேயில்லாதவை; என்றாலும் அவை முழுமையும் சொல்லப்போகாது.

**அஹமாத்மா குடாகேச ஸர்வபூதாசயஸ்த்தித: ।**
**அஹம் ஆதிச்ச மத்யஞ்ச பூதாநாம் அந்த ஏவ ச ॥ 20 ॥**

*அர்ஜுன ! எல்லா உயிர்களின் உள்ளத்தில் உறையும் ஆத்மா நான். அவ்வுயிர்களின் முதலுக்கும், இருப்புக்கும், முடிவுக்கும் காரணம் நானே.*

ராமன் தசரதன் மகன் என்றால், தசரதன் ராமனின் தகப்பன் என்பது தேறுவது போல, உயிர்களுக்கெல்லாம் அவன் ஆத்மா என்பதினால், எல்லா உயிர்களும் அவனுக்குச் சரீரம் (உடல்) என்பது தன்னடைவே தேறுகிறது. அதே போல, உலகுக்கெல்லாம் காரணன் என்பதினால், அவ்வுலகெல்லாம் காரியப் பொருள் என்பதும் தேறி நிற்கும். அதாவது அவை அனைத்தும் அவனுடைய விபூதி (சொத்து) எனப்படுகிறது.

காரணமும் காரியப் பொருளும் ஒன்றாயிராது. அதுபோல ஸ்வாமியும் சொத்தும் வேறுபட்டதே. இதனால் ஸர்வேச்வரன் வேறு, அவனுடைய உடலாயும் சொத்தாயுமுள்ள அறிவற்ற, அறிவுள்ள பொருள்களும் வேறு பட்டவை. தத்வங்கள் மூன்று என்பது தெளிவாகிறது இந்த சுலோகத்தினால்.

ப்ரஹ்மம் ஒன்றே உண்மைப் பொருள்; மற்றவை அனைத்தும் மித்யை, பொய், வெறும் தோற்றம் என்னும் அத்வைத மதக் கொள்கை க்ருஷ்ணனின் இந்த சுலோகத்தினால் மறுக்கப்படுகிறது.

பகவான் இதை இங்கே சொல்வதற்குக் காரணம் என்ன?

மேலே பல சுலோகங்களில் கண்ணன் தன் விபூதிகளை (சிறப்பை) சொல்லப் போகிறான். அவைகளில் "ஆதித்யானும் அஹம் விஷ்ணு:" என்றும் 'ஆயுதனும் அஹம் வஜ்ரம்" என்றும் பல சேதனப் பொருள்களையும் அசேதனப் பொருள்களையும் ஒக்க எடுத்துச் சொல்லி, "அவைகள் நான்" என்கிறான். அதாவது "அவைகளுக்கெல்லாம் ஆத்மா நான், அவைகள் எனக்குச் சரீரம்" என்பதையே கூறுகிறான். அந்தக் கருத்தை தெளிவுபடுத்துவதற்காகவே, முந்துற முன்னம் இந்த ச்லோகத்தில் 'அஹமாத்மா குடாகேச ஸர்வபூதாசயஸ்தித:" என்கிறான்.

உலகிலுள்ள உயிர்களுக்கெல்லாம் நான் ஆத்மா. அவை எனக்கு உடல். அவற்றின் படைப்பு, இருப்பு, மறைவு, இவைகளுக்கு நானே காரணம்.

எந்தப் பொருள் உண்டாவதற்கும் மூன்றுவித காரணங்களை நாம் பார்க்கலாம். ஒரு குடம் உண்டாக குயவன் நிமித்த காரணம்; மண் உபதான காரணம், தண்டம், சக்கரம் ஸஹகாரி (உதவும் கருவி) காரணம்.

இந்த உலகம் உண்டாக, இந்த மூன்றுவித காரணமுமாய் இருப்பவன் பகவான் ஒருவனே. அவனுடைய சரீரமாகிற மூல ப்ரக்ருதியிலிருந்தே இவை உண்டாவதினால் அவனே உபாதான காரணமாயும், அவன் ஸங்கல்பத்தினால் (நினைவு) மாத்திரத்திலே அவை தோன்றுகிறபடியால் அவனே நிமித்த காரணமாயும் அவனது அறிவாற்றல்களே உதவுவதால் அவனே ஸஹகாரி காரணமாயும் அமைகின்றன. இப்படி உலக ச்ருஷ்டிக்கு மூன்று வித காரணமும் பகவானே என்பது தேறுகிறது.

உலகில் ராமன் என்னும் உடலையும், அவனது ஆத்மாவையும் சேர்த்தே, "ராமன் வந்தான்" என்கிறோம். அதே போல் தனக்கு உடலாயுள்ள சூரியன், ஆயுதம் இவைகளையும் அவைகளில் ஆத்மா வாயிருக்கும் தன்னையும் சேர்த்தே, மேல் சுலோகங்களில் "நான் சூரியன், நான் வஜ்ராயுதம்" என்று கூறுகிறான். இதையே "அஹ மாத்மா குடாகேச" என்கிற இந்த சுலோகத்தில் விளக்கியிருக் கிறான்.

பகவானுக்கும் இவ்வுலகுக்கும் உள்ள இந்த சரீர, ஆத்ம சம்பந்தம் எவ்வாறு உள்ளது?

நம் உடல் அழிவுடையது. உடல் அழிந்தால், அவ்வுடலுக்கும் அதின் ஆத்மாவுக்கும் உள்ள தொடர்பும் அழிந்து விடுகிறது. ஆனால் ஈச்வரனுக்கும் ஜகத்துக்கும் உள்ள உறவு இதுபோன்றது அல்ல. "உந்தன்னோடு உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது" என்கிறபடி. இது நித்யமானது; அதாவது அழிவில்லாதது; என்றும் பிரிவில்லாதது.

மனிதனுக்குள்ள மனிதத்வம், மாடுகளுக்குள்ள மிருகத்வம் என்கிற ஜாதியைப் பற்றிய சம்பந்தத்தையும், அதே போல மலருக்கு உள்ள மணம், ரத்னத்திற்குள்ள ஒளி, வஸ்திரத்திற் குள்ள வெண்மை போன்ற குண சம்பந்தத்தையும், எப்படி அந்தந்த பொருள்களினின்று பிரிக்க முடியாதோ அதே போல பகவா னுக்கும் உயிர்களுக்கும் இடையேயுள்ள சம்பந்தத்தைப் பிரிக்க முடியாது; இதையே சாஸ்திரங்களில் 'அபிரதக் சித்தி விசேஷணம்' என்பர்.

**ஏவமேதத் யதாzzத்த த்வம் ஆத்மாநம் பரமேச்வர !**
**த்ரஷ்டும் இச்சாமி தே ரூபம் ஐச்வரம் புருஷோத்தம ॥ 3 ॥**

*ஸர்வேச்வரனே ! நீ உன்னைப் பற்றி என்ன சொன்னாயோ அவை யெல்லாம் உண்மையே. புருஷ ச்ரேஷ்டனே! உனது ஈச்வர ரூபத்தை, அதாவது உலகை ஆளும் பகவத் ரூபத்தைக் காண நான் விரும்புகிறேன்.*

**மந்யஸே யதி தத் சக்யம் மயா த்ரஷ்டும் இதி ப்ரபோ !**
**யோகேச்வர ததோ மே த்வம் தர்சயாத்மாநம் அவ்யயம் ॥ 4 ॥**

*இறைவா ! உன் ஈச்வர ரூபம் என்னால் பார்க்க இயலும் என்று எண்ணுவாயானால் உனது அழிவற்ற உருவத்தை எனக்குக் காட்டியருள்வாயாக !*

**ஸ்ரீ பகவான் உவாச ।** *கண்ணன் கூறியது.*

**பச்ய மே பார்த்த ரூபாணி சதசோzத ஸஹஸ்ரச: ।**
**நாநாவிதாநி திவ்யாநி நாநாவர்ணாக்ருதீநி ச ॥ 5 ॥**

*பார்த்தா ! என்னுடைய தெய்வத்தன்மை வாய்ந்த அநேக விதங்களாயும், பல நிறங்களும் வடிவங்களும் உடையனவும் நூறு நூறாய், ஆயிரம் ஆயிரமாய் இருக்கும் என் உருவங்களைப் பார்.*

*அர்ஜுனா ! உன்னிடம் எனக்குள்ள அன்பினால் என்னுடைய ஈச்வர ரூபத்தை மட்டும் காண்பிப்பதோடு மற்ற எல்லா வடிவங்களையும் காண்பிக்க விரும்புகிறேன்; உருவத்திலும், நிறத்திலும், தன்மையிலும் வேறுபட்டு எண்ணிக்கையில் அடங்காதவைகளை யெல்லாம் என் ஒரு விச்வரூபத்தில் காண்பாய்.*

**பச்யாதித்யாந் வஸூந் ருத்ராந் அச்விநௌ மருதஸ்ததா !**
**பஹூந்யத்ருஷ்டபூர்வாணி பச்யாச்சர்யாணி பாரத ॥ 6 ॥**

*அர்ஜுனா ! என் ஓர் உருவத்தில் பன்னிரு ஆதித்யர்களையும், எட்டு வசுக்களையும், பதினொரு ருத்ரர்களையும், இரண்டு அச்வினி தேவதைகளையும் நாற்பத்தொன்பது மருத்கணங்களையும் பார். இன்னும் இவ்வுலகில் எவை எவை காணப்படுகின்றனவோ, சாஸ்திரங்களில் என்ன என்ன சொல்லப்பட்டிருக்கின்றனவோ, மற்றும் இதற்கு முன் நீ காணாதவைகள் எல்லாம், என் விச்வ ரூபத்தில் காண்பாய்.*

இஹைகஸ்த்தம் ஜகத் க்ருத்ஸ்நம் பச்யாத்ய ஸசராசரம் ।
மம தேஹே குடாகேச யச்சாந்யத் த்ரஷ்டுமிச்சஸி । 7 ॥

*தூக்கத்தை வென்ற அர்ஜுன! ஜங்கம ஸ்த்தாவரங்கள் கொண்ட முழு உலகையும் எனது இந்த ஓர் உருவின் சிறிது பாகத்தில் அடங்கியிருப்பதை நீ காண்பாய். இன்னும் வேறு எதைக் காண நீ விரும்புகிறாயோ, அவைகளை எல்லாம் என் விச்வ ரூபத்தில் காண்பாய் (இப் போரில் தாங்கள் வெற்றி பெறுவோமா, அல்லது கௌரவர்கள் வெற்றி பெறுவார்களா, என்கிற அர்ஜுனன் சந்தேகத்தையும் இந்த விச்வ ரூபத்தில் தெளியக் காணலாம் என்பது கருத்து).*

ந து மாம் சக்ஷ்யஸே த்ரஷ்டும் அநேநைவ ஸ்வசக்ஷுஷா ।
திவ்யம் ததாமி தே சக்ஷு: பச்ய மே யோகமைச்வரம் ॥ 8 ॥

*ஆனால் அர்ஜுன! உனது இந்த ஊனக்கண்ணால் என்னை நீ காண இயலாது; உனக்கு தெய்வீகத் தன்மையான கண்ணைக் கொடுக்கிறேன்; அதைக் கொண்டு எனது ஆளும் வைபவத்தைப் பார்.*

*பிரக்ருதியினாலான கண்ணைக்கொண்டு ப்ரக்ருதிப் பொருளைத் தான் காணமுடியும்; அதுவும் தூரத்திலிருக்கும் பொருளைக் காண தூரத்ருஷ்டிக் கண்ணாடி வேண்டும். பூதக்கண்ணாடியைக் கொண்டே நுண்ணிய பொருளைப் பார்க்க முடியும். அதே போல அப்ராக்ருதமான பகவத் ரூபத்தைக் காண தெய்வீகமான, ஞானக்கண் வேண்டும்; அதுவும் பகவானுடைய இன்னருளாலேயே கிடைக்கும்.*

ஸஞ்சய உவாச - *ஸஞ்சயன் கூறுகிறான்:*

ஏவம் உக்த்வா ததோ ராஜந் மஹாயோகேச்வரோ ஹரி: ।
தர்சயாமாஸ பார்த்தாய பரமம் ரூபம் ஐச்வரம் ॥ 9 ॥

*திருதராஷ்டிர மகாராஜாவே! மஹேச்வரனான ஹரியானவர் இங்ஙனம் உரைத்த பின்பு, பார்த்தனுக்கு மேலேன தன் ஈச்வர ரூபத்தைக் காட்டியருளினான்.*

*ஸஞ்சயன் உத்தம அதிகாரி, அந்த புத்திகெட்ட திருதராஷ்டிர னுக்கு, கண்ணனுடைய மேன்மை யெல்லாம் மனத்தில்படும்படி நன்றாக உரைக்க வல்லவன்; ஆதலால் பகவான் அவனுக்கும்*

திவ்யசக்ஷுஸ்ஸைச் கொடுத்து தன் விச்வரூபத்தைப் பார்க்கச் செய்தான். "அரசே! என்ன ஆச்சர்யம்! இப்படி கண்ணன் சொன்ன உடனேயே தன் தோழனும் அத்தை மகனுமான அர்ஜுனனுக்குத் தன் விச்வ ரூபத்தைக் காட்டி அருளினான்" என்கிறான் ஸஞ்சயன்.

அநேகவக்த்ர நயநம் அநேகாத்புததர்சநம் ।
அநேகதிவ்யாபரணம் திவ்யாநேகோத்யதாயுதம் ॥ 10 ॥

திவ்யமால்யாம்பரதரம் திவ்யகந்தாநுலேபநம் ।
ஸர்வாச்சர்யமயம் தேவம் அநந்தம் விச்வதோ முகம் ॥ 11 ॥

அந்த விசுவரூபம் இருந்தபடி எங்ஙனே எனில்? அவ்வடிவில் அநேக முகங்கள், கண்கள், பல அதிசய காட்சிகள், தெய்வீகமான பல ஆபரணங்களை அணிந்தும், தெய்வீகமான பல ஆயுதங்களை கைகளில் ஏந்தியுமிருந்தது, அவ்வுருவம்.

மேலும் அவ்வுருவம் திவ்யமான மாலைகளையும் ஆடைகளையும் அணிந்து, திவ்யமான கந்தம் பூசியதும் பெரும் வியப்பூட்டுவதும், பிரகாசித்தது எங்கும் முகமுடையதாகவுமிருந்தது. முக்காலத்தி லும் உள்ளவைகளுக்கெல்லாம் இருப்பிடமாயும், இடம் காலம் இவைகளால் அளவிட முடியாததாயும் தன் ரூபத்திற்குத் தகுந்த ஆபரணங்களையும் மாலைகளையும் அணிந்து ஒளிவிட்டு பிரகாசித் திருந்தது.

திவி ஸூர்யஸஹஸ்ரஸ்ய பவேத் யுகபத் உத்திதா ।
யதி பா: ஸத்ருசீ ஸா ஸ்யாத் பாஸஸ்தஸ்ய மஹாத்மந: ॥ 12 ॥

தத்ரைகஸ்த்தம் ஜகத் க்ருத்ஸ்நம் ப்ரவிபக்தம் அநேகதா ।
அபச்யத் தேவதேவஸ்ய சரீரே பாண்டவஸ் ததா ॥ 13 ॥

தத: ஸ விஸ்மயாவிஷ்டோ ஹ்ருஷ்டரோமா தநஞ்ஜய: ।
ப்ரணம்ய சிரஸா தேவம் க்ருதாஞ்ஜலிரபாஷத ॥ 14 ॥

வானத்தில் ஆயிரம் சூரியர்கள் சேர்ந்து உதித்தால் எவ்வளவு ஒளிமிக்கதாயிருக்குமோ அதற்கு ஒருவாறு ஒப்பிடலாம் அந்த விச்வ ரூபத்தின் தேஜஸ்.

அப்பொழுது அர்ஜுனன் அந்த தேவ தேவனுடைய விச்வ ரூபத்தில் பலவிதமான ஜகத் முழுவதையும் ஒன்று சேர்ந்திருப் பதைக் கண்டான்.

வேற்றுமையில் ஒற்றுமை இயற்கையானது. ப்ரஹ்மா முதல் ஈஎறும்பு வரையில் உள்ள பலவகை உயிர் இனங்களும், மண் உலகு, கீழ்உலகு, மேல் உலகங்களான இன்ப இடங்களும் இன்பப் பொருள்கள் எல்லாம் இறைவனிடம் ஒன்றுகூடி அடங்கியிருந்தன. இதைக் கண்ட அர்ஜுனன் வியப்புடையவனாய் மயிர்ச் செறிந்து பகவானைத் தலையால் வணங்கி கூப்பிய கைகளுடன் பின்வருமாறு கூறினான்.—

அர்ஜுன உவாச : அர்ஜுனன் சொன்னது.

பச்யாமி தேவாம்ஸ்தவ தேவ தேஹே
ஸர்வாம்ஸ்ததா பூதவிசேஷ ஸங்க்காந் ।
ப்ரஹ்மாணம் ஈசம் கமலாஸநஸ்த்தம்
ரிஷீம்ச்ச ஸர்வாந் உரகாம்ச்ச திவ்யாந் ॥ 15 ॥

பகவானே ! உம் உடலில் எல்லா தேவர்களையும் உலக உயிர் இனங்கள் எல்லாவற்றையும், அண்டாதிபதியான ப்ரஹ்மாவையும் அவனால் படைக்கப்பட்ட சிவனையும், தேவரிஷிகளையும், வாசுகி தக்ஷன் போன்ற பாம்புகளையும் நான் பார்க்கிறேன்.

அநேகபாஹூதரவக்ரநேத்ரம்
பச்யாமி த்வாம் ஸர்வதோऽநந்தரூபம் ।
நாந்தம் ந மத்யம் ந புநஸ்தவாதிம்
பச்யாமி விச்வேச்வர விச்வரூப ॥ 16 ॥

விச்வேச்வர ! விச்வரூபா ! உலகை ஆள்கின்ற பரம ! அநேக கைகளும், பல வயிறுகளும் முகங்களும் கண்களும் பல பலவாய் இருக்கும் உன் விச்வரூபம் அளவில்லாததாயிருக்கிறது அவ்வுடலின் முதல் எது ? நடுவெது ? முடிவு எது என்பது எனக்குத் தெரியவில்லை.

கிரீடிநம் கதிநம் சக்ரிணஞ்ச
தேஜோராசிம் ஸர்வதோ தீப்திமந்தம் ।
பச்யாமி த்வா துர்நிரீக்ஷம் ஸமந்தாத்
தீப்தாநலார்கத்யுதிம் அப்ரமேயம் ॥ 17 ॥

தேஜோமயமாய் எங்கும் பிரகாசித்துக் கொண்டு காணக் கண் கூசி கொழுந்து விட்டெரியும் தீபம் போலவும், சூரிய ஒளி போலவும் அளப்பரியவராய் உள்ள உம்மை, கிரீடம், கதை, சக்ராயுதம் உடையவராய் எங்கும் காண்கிறேன் நான்.

கிரீடம், சங்கம், சக்ரம், கதை இவைகளைத் தரித்திருப்பதைக் கொண்டு இவனே பரமபுருஷனான ஸ்ரீமந்நாராயணன் (மஹாவிஷ்ணு) என்பதை அர்ஜுனன் நேருக்கு நேர் கண்டு அறிந்தான்.

த்வம் அக்ஷரம் பரமம் வேதிதவ்யம்
த்வம் அஸ்ய விச்வஸ்ய பரம் நிதாநம் ।
த்வம் அவ்யய: சாச்வததர்மகோப்தா
ஸநாதநஸ்த்வம் புருஷோ மதோ மே ॥ 18 ॥

அழியா பரம்பொருளும் நீரே, அறியத்தகுந்தவர் நீர் ஒருவரே; உலகுக்கெல்லாம் ஒப்பற்ற உறைவிடமும் நீர், ஸ்வரூப, ரூபகுண விபவங்களில் ஒருவித மாறுதல் இல்லாதவர் நீர், ஸநாதன தர்மங்களை காக்கின்ற உம்மை என்றும் உள பரமாத்மா என்பது என்னால் அறியப்பட்டது.

அநாதிமத்யாந்தம் அநந்தவீர்யம்
அநந்தபாஹும் சசிஸூர்யநேத்ரம் ।
பச்யாமி த்வா தீப்தஹுதாசவக்த்ரம்
ஸ்வதேஜஸா விச்வமிதம் தபந்தம் ॥ 19 ॥

ஆதி நடு இறுதி இல்லாதவரும், அளவில்லா ஞானம், சக்தி வீர்ய, பலம், ஐச்வர்யம், தேஜஸ் முதலான குணங்கள் உள்ளவரும், கணக்கில்லாத பல முகங்கள், கண்கள், கைகள், கால்கள் உடையவரும், சந்திர சூரியர்களைக் கண்களாக உடையவரும், வெந்தழல் வாய் படைத்தவரும், உமது தேஜஸ்ஸினால் உலகம் யாவையையும் எரிக்கின்றவர் போல் உள்ள உம்மை நான் காண்கிறேன்.

இப்படி, உலகுக்கெல்லாம் படைத்தல் காத்தல் அழித்தல் இவைகளுக்குக் காரணமாய், எல்லா உயிர்களிலும் ஆத்மாவாக யிருந்து அவைகளை தரித்து நியமித்து நடத்தும் ஜ்ஞான சக்தி முதலிய கல்யாண குணங்கள் நிறைந்தவராய், ஆதி, மத்யம், அந்தம் இல்லாத உம் திவ்ய மங்கள ஸ்வரூபத்தை நீர் உபதேசம் செய்தபடி நான் இப்போது காண்கிறேன்.

கீழ் 16ம் சுலோகத்தில் அவன் உடலின் முதல், நடு, இறுதியைக் காணவில்லை என்பதைச் சொன்னான். இதில் பகவானுடைய ஆத்ம ஸ்வருபத்தின், ஞான சக்தியாதி குணங்களுக்கும் ஆதி நடு இறுதி காணப்படவில்லை என்பதைச் சொல்கிறான். ''வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்'' என்கிறது ச்ருதியும்.

ஜீவனின் ரூப ஸ்வரூபங்கள் (உடலும் உயிரும்) ஒரே இடத்தில் உள்ளவை. ஆனால் ஸர்வேச்வரனுடைய உடலும், ஆத்ம ஸ்வரூபமும் எங்கும் பரந்துள்ளது என்பதையே இந்த இரண்டு சுலோகங்களில் சொல்லப்படுகிறது. இதுவே பகவானுக்குள்ள தனிச் சிறப்பு.

இன்னும் சுத்த ஸத்வம், ப்ரக்ருதி, காலம் என மூன்று தத்வங்கள் உள்ளன. இவைகளில் சுத்த ஸத்வம் பரமபதத்தில் தான் உண்டு. இவ்வுலகில் இல்லை. விரஜாநதியில் ஸ்நானம் செய்து பரமபதம் சென்ற பிறகுதான், ஜீவாத்மா சுத்த ஸத்வ மயமான சரீரத்தையும் குணங்களையும் பெறுகிறான். ப்ரக்ருதி இவ்வுலகில் தான் உண்டு: பரமபதத்தில் ப்ரக்ருதி கிடையாது. காலம் என்பது இங்கும் பரமபதத்திலும் உண்டு. "ஸதா பச்யந்தி ஸூரய" எப்போதும் நித்யசூரிகள் பகவானை ஸேவித்துக் கொண்டிருக்கிறார்கள். எப்போதும் என்பதினால் காலம் அங்கும் உண்டு என்பது தேறுகிறது. ஆனால் அங்கு காலத்திற்கு ஆதிக்கமில்லை. இந்த பூமியில் தான் காலத்திற்கு ஆதிக்கம் உண்டு. காலம் ஸாம்ராஜ்யம் செய்யும் தேசம் இது. பகவானே இங்கு ராமனாக அவதரித்திருந்தாலும் முதல் நாள் ராஜ்யம் பெற்ற அவனுக்கு மறுநாள் ராஜ்யமில்லை; காடேற வேண்டியதாயிற்று. அவனும் காலத்திற்கு உட்பட்டே நடக்க வேண்டும். பிரியக்கூடாத சீதையைப் பிரிய வேண்டியிருந்தது காலத்தின் கூற்று.

அநாதிர் பகவான் கால : என்பது பராசரரின் வாக்யம். காலத்திற்கு ஆதியுமில்லை ; அந்தமுமில்லை ; அந்தக் காலத்தை சரீரமாக உடையவன் பகவான். இதை நேரில் கண்ட அர்ஜுனன் நீர் முக்காலத்திலும் இருப்பவர் என்கிறான்.

த்யாவாப்ர்திவ்யோரிதமந்தரம் ஹி
வ்யாப்தம் த்வயைகேந திசச்ச ஸர்வா: ।
த்ருஷ்ட்வாऽத்புதம் ரூபமுக்ரம் தவேதம்
லோகத்ரயம் ப்ரவ்யதிதம் மஹாத்மந் ॥ 20 ॥

மஹாத்மாவே ! வானத்திற்கும் மண்ணுக்கும் இடையிலுள்ள பெருவெளி உம்மால் நிரம்பப் பற்றிருக்கிறது. மற்ற எல்லாத் திசைகளும் அவ்வாறே உள்ளன. ஆச்சர்யமான உன் இந்த உக்கிர வடிவத்தைக் கண்டு மூவுலகமும் பயந்து நடுங்குகின்றன.

நீக்கமற எங்கும் நிறைந்தவன் இறைவன் என்பதை அர்ஜுனன் இங்கு நேரில் காண்கிறான். பகவானிடம் இனிமையும் உண்டு.

இது அவரவர் மனோ நிலைக்குச்சேர அனுபவிக்கலாயிருக்கும். போரைக் காண ஆகாயத்தில் கூடியுள்ள தேவர்கள் முதலானோர் அவனுடைய பயங்கர ரூபத்தைக்கண்டு நடுங்குகிறார்கள்.

ஏகேன என்பதினால் கை கால் மற்ற அவயவங்கள் பலவாயிருந்தாலும், அந்த உடல் ஒன்றேயாம் என்பதைக் குறிக்கும்.

அமீ ஹி த்வா ஸுரஸங்க்கா விசந்தி
கேசித் பீதா: ப்ராஞ்ஜலயோ க்ருணந்தி ।
ஸ்வஸ்தீத்யுக்த்வா மஹர்ஷிஸித்தஸங்க்கா:
ஸ்துவந்தி த்வாம் ஸ்துதிபி: புஷ்கலாபி: ॥ 21

தேவர்கள் கூட்டம் கூட்டமாய் உம்மிடம் ஆவலுடன் புகுகின்றனர். சிலர் பயந்தவர்களாய் கைகளைக் கூப்பி வணங்கி உம்மை துதி செய்கிறார்கள். சித்தர்களும் ரிஷிகளும் ப்ரீதியினால் உமக்கு மங்களத்தை ஆசாஸிக்கிறார்கள் (பிரார்திக்கிறார்கள்).

பகவானுக்கு தொண்டு செய்வதே ஜீவாத்மாவின் ஸ்வரூபம். அவைகளில் அவனுக்கு மங்களத்தைப் பிரார்த்திப்பதே (பல்லாண்டு பாடுவதே) மேலான தொண்டு. அதையே தேவர்களும், சித்தர்களும், ரிஷிகளும் செய்கிறார்கள், அதில் தேவகணங்கள் பயத்தினால் துதிக்கிறார்கள்; சித்தர்களும், ரிஷிகளுமோவெனில் அன்பினால் அவனுக்கு மங்களத்தை ஆசாஸிக்கிறார்கள். இதுவே சிறந்த பகவத்கைங்கர்யம்.

ருத்ராதித்யா வஸவோ யே ச ஸாத்யா:
விச்வேZச்விநௌ மருதச்சோஷ்மபாச்ச ।
கந்தர்வ யக்ஷாஸுர ஸித்தஸங்கா:
வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதாச்சைவ ஸர்வே ॥ 22 ॥

ரூபம் மஹத் தே பஹுவக்த்ரநேத்ரம்
மஹாபாஹோ பஹுபாஹூருபாதம் ।
பஹூதரம் பஹுதம்ஷ்ட்ராகராளம்
த்ருஷ்ட்வா லோகா: ப்ரவ்யதிதாஸ் ததாZஹம் ॥ 23 ॥

ருத்திரர், ஆதித்யர், வசுக்கள், சாத்தியர், விசுவேதேவர், அசுவினிதேவர், மருத்கணங்கள், ஊஷ்மபர், கந்தர்வர், யக்ஷர், அசுரர், சித்தர், இவர்கள் கூட்டம் கூட்டமாக வியப்புடன் உம்மையே பார்க்கிறார்கள். (ஊஷ்மபர் என்றால் உஷ்ணமாக உண்கிற பித்ருதேவர்கள்)

நெடுந்தோளாய் ! உம்முடைய பலமுகங்கள், கண்கள், பல கைகள், துடைகள், பலபாதங்கள் வயிறுகள், பயங்கரமான பல கோரைப்பற்களை உடைய உமது பேருருவைக் கண்டு உலகில் யாவரும் நடுங்குகிறார்கள்; நானும் அவ்வாறே அச்சமுறுகிறேன்.

நபஸ்ஸ்ப்ருசம் தீப்தம் அநேகவர்ணம்
வ்யாத்தாநநம் தீப்தவிசாலநேத்ரம் ।
த்ருஷ்ட்வா ஹி த்வா ப்ரவ்யதிதாந்தராத்மா
த்ருதிம் ந விந்தாமி சமஞ்ச விஷ்ணோ ॥ 24 ॥

எங்கும் பரந்த விஷ்ணுவே ! வான் அளாவி பல நிறங்களுடன் பிரகாசிக்கின்ற, திறந்த வாய்களையுடைய, ஒளிவீசும் அகன்ற கண்களையுடைய உம்மைக் கண்டு, மிக்க அச்சமுற்றவனான நான் தைரியத்தையும் மன அமைதியையும் இழந்து விட்டேன். என் உடல் பதறுகிறது. கண்களை மூடிக் கொண்டாலும் எனக்குப் பயமாகவேயிருக்கிறது.

தம்ஷ்ட்ராகராளாநி ச தே முகாநி த்ருஷ்ட்வைவ காலாநலஸந்நிபாநி ।
திசோ ந ஜாநே ந லபே ச சர்ம பரஸீத தேவேச ஜகந்நிவாஸ ॥ 25 ॥

தேவர் தலைவனே ! பயங்கரமான கோரைப் பற்களுடன் ஊழி காலத்து அக்னிபோல தீப்பொறி பறக்கின்ற உம் கண்களைக் கண்டு பயந்த எனக்கு திசைகள் தெரியவில்லை, மன அமைதியுமில்லை. உலகின் உறைவிடமானவனே எனக்கு நீர் அருள் புரிய வேண்டும். (முன்போலவே எனக்குத் தெளிவை உண்டாக்குக, இல்லையேல் சில விநாடிகளில் என் உயிரே போய்விடும்).

அமீ ஸர்வே (ஹித்வா) த்ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா:
ஸர்வை: ஸஹைவாவநிபாலஸங்கை: ।
பீஷ்மோ த்ரோண: ஸூதபுத்ரஸ் ததாஸௌ
ஸஹாஸ்மதீயைரபி யோதமுக்யை: ॥ 26 ॥

வக்த்ராணி தே த்வரமாணா விசந்தி
தம்ஷ்ட்ராகராளாநி பயாநகாநி ।
கேசித் விலக்நா தசநாந்தரேஷு
ஸந்த்ருச்யந்தே சூர்ணிதைருத்தமாங்கை: ॥ 27 ॥

எல்லா அரசர் கூட்டங்களும், திருதராஷ்ட்ரன் புத்திரர்கள்; அனைவரும், பீஷ்மர், த்ரோணர், கர்ணன், இன்னும் நம் பக்கத்தி

லுள்ள போர்வீரர்களும் பரபரப்புடன் உன் வாயில் புகுகின்ற னர். சிலர் உன் பயங்கரமான, கோரைப் பற்களின் இடையில் அகப்பட்டு பொடிப்பட்ட தலைகளோடு காணப்படுகின்றனர்.

**யதா நதீநாம் பஹவோऽம்புவேகா: ஸமுத்ரமேவாபிமுகா த்ரவந்தி ।**
**ததா தவாமீ நரலோகவீரா விசந்தி வக்த்ராண்யபிவிஜ்வலந்தி ॥ 28 ॥**

**யதா ப்ரதீப்தஜ்வலநம் பதங்கா:**
**விசந்தி நாசாய ஸம்ருத்தவேகா: ।**
**ததைவ நாசாய விசந்தி லோகா:**
**தவாபி வக்த்ராணி ஸம்ருத்தவேகா: ॥ 29 ॥**

பல நதிகளின் வெள்ளங்கள் எப்படி கடலில் போய் விழுகின்றனவோ, அதே போல் போர் வீரர்களெல்லாம் தழல் வீசும் உன் வாயில் வந்து புகுகிறார்கள். சுடர்விட்டு எரியும் தீயினில் எப்படி விட்டில் பூச்சிகள் தாங்களே போய் விழுந்து மாய்கின்றனவோ, அது போல் உலகிலுள்ள உயிர்களெல்லாம் உம் வாய்க்குள் நுழைகின்றனர்.

கடலில் விழும் நதிகளின் தண்ணீரின் நாமரூபங்கள் மாறுகிறதே ஒழிய, அந்த நீருக்கு நாசமில்லை; எத்தனை நதிகள் கடலில் விழுந்தாலும் கடல் நிரம்புவதில்லை. அதே போல எத்தனை உயிர்கள் அந்த விச்வரூபத்தில் விழுந்தாலும், அவைகள் அழிவதில்லை. நாமரூபங்களே மாறுகின்றன. எத்தனை உயிர்கள் விழுந்தாலும் அந்த விச்வரூபத்தில் சிறிய பாகத்திலேயே அடங்கி விடுகின்றன. நெருப்பு தங்களை பொசுக்கிவிடும் என்பதை அறியாமல் விட்டில் பூச்சிகள் ஆசையுடன் அதில் விழுந்து நாசமடைகின்றன. அது போல் உயிர்களெல்லாம், தங்கள் ஆத்ம நாசத்தை விளைவிக்கும் உலக விஷயங்களை போக்யமாக எண்ணி, அவைகளில் அன்பைச் செய்து அதன் வினைப்பயனாக உன் வாயில் வந்து விழுகின்றனர்.

**லேலிஹ்யஸே க்ரஸமாந: ஸமந்தாத்**
**லோகாந் ஸமக்ராந் வதநைர் ஜ்வலத்பி: ।**
**தேஜோபிராபூர்ய ஜகத் ஸமஸ்தம்**
**பாஸஸ்தவோக்ரா: ப்ரதபந்தி விஷ்ணோ ॥ 30 ॥**

உன் வாய்களினால் உலகம் அனைத்தையும் விழுங்கிக் கொண்டும், இரத்தத்தை நாவினால் நக்கிக் கொண்டும், நீர் காணப்படுகிறீர். உம் கடுமையான கிரணங்கள் உலகம் அனைத்தும் பரவி எரிக்கின்றன.

ஸர்வேச்வரன் உலகைப் படைப்பானேன்? உலகத்தவர் தாங்களே அவன் வாயில் போய் விழுந்து நாசமடைய, அவர்களை பகவான் அழித்தான் என்பது எப்படிக் கூடும்?

அநாதி காலம் தாங்கள் செய்த புண்ய பாப கர்மம் அடியாக மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்து அவதிப்படும் ஜீவாத்மாக்கள், தன்னை அறிந்து தன்னிடம் பக்தி செய்து ஆத்ம ச்ரேயஸ் பெறுவதற்காகவே, தன் க்ருபையினால் பகவான் அவைகளை அடிக்கடி படைக்கிறான். ஆனால் அவர்கள் அவனை அறிவதில்லை; உலக விஷயங்களிலேயே மண்டி அல்லல் படுகிறார்கள். இதைக் கண்ட பகவான் அவர்களை அழிக்கிறான். பூச்சியினால் அரிக்கப்பட்டுக் கெட்டுப்போன பயிரை ஓர் விவசாயி அதை அழித்து மறுபடியும் பயிரிடுவது போல பகவானும் அவர்களை அழித்து மறுபடியும் படைக்கிறான்; பகவான் ஒரு க்ரிஷகன். பக்திஉழவன்.

அவர்களே வந்து அவன் வாயில் விழுந்து நாசமடைந்தாலும், அது அவன் சங்கல்பத்தினாலேயே (நினைவு மாத்திரத்தினாலேயே) நடைபெறுகிறபடியால், பகவானே உலகை அழிக்கிறான் என்பது தேறும்.

**ஆக்யாஹி மே கோ பவாந் உக்ரரூபோ**
**நமோzஸ்து தே தேவவர ப்ரஸீத ।**
**விஜ்ஞாதும் இச்சாமி பவந்தம் ஆத்யம்**
**ந ஹி ப்ரஜாநாமி தவ ப்ரவ்ருத்திம் ॥ 31 ॥**

தேவ தேவச! இவ்வளவு பயங்கர உருவமான நீர் யார்? என்பதை எனக்குக் கூறும். உம்மை வணங்குகிறேன். அருள் புரிக. முதல்வனை அதாவது ஆதிபுருஷனை உம்மை, அறிய விரும்புகிறேன். ஏனெனில் உம்முடைய செயல் எனக்கு விளங்கவில்லை.

பயங்கர உருவுடனுள்ள நீர் யார்? இப்போது என்ன செய்ய விரும்புகிறீர்? என்பதை எனக்கு அருளிச் செய்ய வேண்டுமென அர்ஜுனன் பிரார்த்திக்கிறான்.

அர்ஜுனன் கேட்டுக் கொண்டபடி கண்ணன் தன் விச்வ ரூபத்தைக் காட்டினான்; ஆதலால் அந்த க்ருஷ்ண பரமாத்மாவே இந்த ரூபத்தை எடுத்திருக்கிறான் என்பது அர்ஜுனனுக்குத் தெரியும். இருந்தாலும் இப்படி பயங்கர வடிவத்தை நீர் ஏன்

எடுத்திருக்கிறீர்? இதனால் நீர் செய்ய நினைத்திருப்பது யாது? என்பதை எனக்கு அருள வேண்டும் என்கிறான்.

ஸ்ரீ பகவான் உவாச : கண்ணன் கூறியது.

காலோzஸ்மி லோகக்ஷயக்ருத் ப்ரவ்ருத்த:
லோகாந் ஸமாஹர்த்தும் இஹ ப்ரவருத்த: ।
ரிதேzபி த்வா ந பவிஷ்யந்தி ஸர்வே
யேzவஸ்த்திதா: ப்ரத்யநீகேஷு யோதா: ॥ 32 ॥

உலகங்களை அழிக்கும் வல்லமையுடைய காலமாக நானிருக்கிறேன். இப்போது உலகங்களை அழிக்கத் தலைப்பட்டிருக்கிறேன். நீ போர் செய்யாவிடினும், உன் எதிரில் அணிவகுத்து நிற்கும் போர் வீரர்கள் எல்லோரும் இனி உயிர் வாழமாட்டார்கள்.

"நீ யார்," என்று அர்ஜுனன் கேட்டதற்கு, "அநாதி:கால: பகவான்" என்கிறபடி "நான் வல்லமையுள்ள அநாதியான காலம்" என்கிறான். எல்லோருடைய ஆயுள் காலத்தையும் நான் கணக்கிட்டுக் கொண்டிருக்கிறேன். துரியோதனாதிகளின் ஆயுள் காலம் முடிவடைந்தது.

"நீ என் செய்ய நினைத்திருக்கிறாய்?" என்ற அர்ஜுனன் கேள்விக்கு, அந்த துரியோதனாதிகளையும் மற்ற போர்வீரர்களையும் கொல்லுவதற்காகவே தான் இந்த பயங்கர ரூபத்தை எடுத்திருக்கிறேன்" என்கிறான்.

"பீஷ்மர் த்ரோணர் போன்ற உன் சத்ருக்களை நான் கொல்ல மாட்டேன்" என்று நீ கூறினாலும், உன் சத்ருக்கள் அனைவரும் முடிவடைவது நிச்சயம் என்பதைக் உனக்கு அறிவிப்பதற்காகவே இந்த விச்வரூபம் உனக்கு என்னால் காட்டப்பட்டது.

தஸ்மாத் த்வம் உத்திஷ்ட்ட யசோ லபஸ்வ
ஜித்வா சத்ரூந் புங்க்ஷ்வ ராஜ்யம் ஸம்ருத்தம் ।
மயைவைதே நிஹதா: பூர்வமேவ
நிமித்தமாத்ரம் பவ ஸவ்யஸாசிந் ॥ 33 ॥

ஆகையினால், அர்ஜுன ! நீ எழுந்து போர் செய்வாயாக, புகழைப் பெறுவாய். எதிரிகளை வென்று செல்வம் நிறைந்த அகண்ட ராஜ்யத்தை அனுபவிப்பாய்; இவர்கள் ஏற்கனவே

என்றால் கொல்லப்பட்டிருப்பதை நீ கண்டாயல்லவா! நீ காரண மாத்திரயிருந்து போர் செய்.

அர்ஜுன! நீ என் அத்தையின் மகன். எனக்கு மிகவும் பிரியமானவன். ஆதலால் நீ புகழையும் அரசையும் பெற வேண்டும் என்கிற விருப்பத்தினால், நான் ஏற்கனவே அந்த கெட்ட புத்தியுள்ள துரியோதனாதிகளை கொல்ல நிச்சயித்து விட்டேன். பேருக்கு மாத்திரம் நீ போர் செய். நானே அவர்களை கொல்லப் போகிறேன் அதை நீ நேரில் என் விச்வரூபத்தில் கண்டாயல்லவா?

த்ரோணஞ்ச பீஷ்மஞ்ச ஜயத்ரதஞ்ச
கர்ணம் ததாऽந்யாநபி யோதமுக்யாந் ।
மயா ஹதாம்ஸ்த்வம் ஜஹி மா வ்யதிஷ்ட்டா:
யுத்யஸ்வ ஜேதாஸி ரணே ஸபத்நாந் ॥ 34 ॥

என்றால் ஏற்கனவே கொல்லப்பட்ட த்ரோணரையும் பீஷ்மரையும் ஜயத்ரதனையும் கர்ணனையும் மற்றும் பல போர்வீரர்களையும் நீ கொல்வாய். அவர்களை புதிதாய் நீ கொல்வதாக நினைத்து கலங்காதே. போரில் நீயே வெற்றி பெறுவாய், போர் புரி.

அர்ஜுன! நான் அவர்களை எல்லாம் கொல்ல சங்கல்பித்து விட்டேன். நான் ஸத்ய ஸங்கல்பன். என் நினைவு ஒருபோதும் மாறாது. நான் நினைத்த காரியம் நடந்தே தீரும். நமக்குப் போரில் வெற்றி கிடைக்குமோ கிடைக்காதோ என்கிற சந்தேகம் வேண்டாம்; வெற்றியும், புகழும், அரசும் கட்டாயம் உனக்கு கிடைக்கும், போர் செய்ய எழுந்திரு என்றான் கண்ணன்.

ஸஞ்சய உவாச - ஸஞ்சயன் கூறினான்:

ஏதத் ச்ருத்வா வசநம் கேசவஸ்ய
க்ருதாஞ்ஜலிர்வேபமாந: கிரீடீ ।
நமஸ்க்ருத்வா பூய ஏவாஹ க்ருஷ்ணம்
ஸகத்கதம் பீதபீத: ப்ரணம்ய ॥ 35 ॥

கேசவனுடைய இம்மொழியைக் கேட்டு க்ரீடம் தரித்த அர்ஜுனன் நடுங்கி கைகளைக் கூப்பி, நமஸ்கரித்து வணங்கி மீண்டும் தழுதழுத்த குரலுடன் பேசலானான்.

கிரீடம் தரித்த அரசன் எவருக்கும் வணங்க மாட்டான்; எவர்களைக் கண்டும் அஞ்சமாட்டான்; அப்படியிருக்க அர்ஜுனன்

க்ருஷ்ணனுக்குத் தலைவணங்கி, கைகூப்பி தெண்டனிட்டு நாக்குழற பேசினான் இதனால் பகவான் முன்னிலையில் எவ்வளவு உயர்ந்த வனாயிருந்தாலும், உடல் குறுகி, மனம் உருகி, கைகளைக் கூப்பி தெண்டனிட வேண்டும் என்பது வெளியாகிறது.

அர்ஜுன உவாச-மீண்டும் அர்ஜுனன் சொன்னான்.

ஸ்த்தாநே ஹ்ருஷீகேச தவ ப்ரகீர்த்யா
ஜகத் ப்ரஹ்ருஷ்யத்யநுரஜ்யதே ச ।
ரக்ஷாம்ஸி பீதாநி திசோ த்ரவந்தி
ஸர்வே நமஸ்யந்தி ச ஸித்தஸங்க்கா: ॥ 36 ॥

ஹ்ரிஷீகேசா ! உமது புகழில் உலகம் இன்புறுகிறது ராக்ஷஸர்கள் உம் விச்வ ரூபத்தைக் கண்டு பயந்து நாலாபக்கமும் ஓடுகிறார்கள். சித்தர் எல்லோரும் உம்மை வணங்குகிறார்கள். இவர்கள் இப்படிச் செய்வதெல்லாம் உம் பெருமைக்கு ஏற்றதேயாகும்.

கஸ்மாத் ச தே ந நமேரந் மஹாத்மந்
கரீயஸே ப்ரஹ்மணோऽப்யாதிகர்த்ரே ।
அநந்த தேவேச ஜகந்நிவாஸ
த்வமக்ஷரம் ஸதஸத் தத்பரம் யத் ॥ 37 ॥

த்வம் ஆதிதேவ: புருஷ: புராண: த்வமஸ்ய
விச்வஸ்ய பரம் நிதாநம் ।
வேத்தாஸி வேத்யஞ்ச பரஞ்ச தாம
த்வயா ததம் விச்வம் அனந்தரூப ॥ 38 ॥

மஹாத்மாவே ! அந்தமில்லாதவரே ! தேவேசா ! ஜகந்நிவாசா, முதல் முதலாக நான்முகப்ரஹ்மாவை படைத்தவனன்றோ நீர், இப்படி முதல் தனி வித்தான (மூலகாரணமான) உம்மை எவர்கள் தான் வணங்காமலிருப்பர்; எல்லோரும் நமஸ்கரிப்பர்; ஸத் அஸத் இரண்டிற்கும் மேற்பட்டவர் நீர்; அதாவது (அழிவில்லாத ஜீவாத்மாவுக்கும், காரணமான மூல ப்ரக்ருதிக்கும் காரியமான ஜகத்திற்கும் மேற்பட்ட அழிவில்லாதவர் நீர்.

எண்ணில்லாத வடிவங்களை உடையவரே ! முதற்முதல் கடவுளே ! ஆதிபுருஷனும் நீரே ! புருஷோத்தமன் நீர். உலகுக்கெல்லாம் மேலான இருப்பிடமும் நீரேயாவீர். அறிபவனும் நீர்,

அறியப்படும் பொருளும் நீரே, அருட்பெரும் செல்வமும் நீரே உம்மால் உலகம் யாவையும் பரந்துள்ளது.

வாயுர் யமோக்நிர் வருணச் சசாங்க:
ப்ரஜாபதிஸ்த்வம் ப்ரபிதாமஹச்ச ।
நமோ நமஸ்தேzஸ்து ஸஹஸ்ரக்ருத்வ:
புநஸ்ச பூயோzபி நமோ நமஸ்தே ॥ 39 ॥

வாயு, யமன், அக்கினி, வருணன், சந்திரன், பிரஜாபதி, மூப்பாட்டனார் ஆகிய எல்லோரும் நீரே. உமக்கு பன்முறை நமஸ்காரம். ஆயிரம் தடவையும் இன்னும் மேலும் மேலும் உமக்கு நமஸ்காரங்கள் செய்கிறேன்.

தக்ஷப்ரஜாபதி முதலானோர் சேதனரை படைக்கின்றனர்; அவர்களைப் படைத்தவன் நான்முக ப்ரஹ்மா நமக்கு பிதாமஹன் (தாத்தா) ஆகிறார்; அந்த ப்ரஹ்மனைப் படைத்தவன் பகவான். நமக்கு ப்ரபிதாவாகிறான். வாயு, யமன், அக்னி, வருணன், ப்ரஜாபதி, நான்முகப் ப்ரஹ்மா இவர்களுக்கெல்லாம் அவன் ஆத்மாவாகயிருப்பதினாலே, அவர்களைச் சொல்லும் சொல் எல்லாம் உம்மையே குறிக்கும் என்பது பொருள்.

ஆச்சரியமான உருவத்தையுடைய அந்த பகவானை அன்பினால் துதித்து, பயத்தினால் அவனை வலம் வந்து நான்கு பக்கங்களிலும் நமஸ்கரித்தான் அர்ஜுனன்.

நம: புரஸ்தாத்அத ப்ருஷ்டதஸ்தே
நமோzஸ்து தே ஸர்வத ஏவ ஸர்வ ।
அநந்த வீர்யாமிதவிக்ரமஸ்த்வம்
ஸர்வம் ஸமாப்நோஷி ததோzஸி ஸர்வ: ॥ 40 ॥

எல்லாமானவரே, உமக்கு முன்புறத்திலும் பின்புறத்திலும் நமஸ்காரம் செய்கிறேன், எல்லாப் பக்கங்களிலும் உமக்கு நமஸ்காரம். அளவில்லாத வீர்ய பராக்ரமத்தை உடைய நீர் அனைத்திலும் நன்கு வியாபித்திருக்கிறீர். ஆதலால் நீரே யாவையுமாகிறீர்.

வீர்யம் என்பது வல்லமை. அந்த வீர்யத்தை நடைமுறையில் நடத்தும் பராக்ரமம் உடையவன் பகவான். அறப் பெரிய செயல்களைச் செய்தும், சிறிதும் களைப்பு தட்டாமையே வீர்யம். ஏழு

வயதில் ஏழு நாள் கோவர்த்தனகிரியை தன் விரலினால் தாங்கி நின்று ஆயர்களையும் ஆடு மாடுகளை ரக்ஷித்தும், அவனுக்கு களைப்பு சிறிதுமில்லை. இதுவே வீர்யம் என்கிற சிறந்த குணம்.

ஸகேதி மத்வா ப்ரஸபம் யதுக்தம்
ஹே க்ருஷ்ண ஹே யாதவ ஹே ஸகேதி ।
அஜாநதா மஹிமாநம் தவேதம்
மயா ப்ரமாதாத் ப்ரணயேந வாऽபி ॥ 41 ॥

யச்சாபஹாஸார்த்தம் அஸத்க்ருதோऽஸி
விஹாரசய்யாஸந போஜநேஷு ।
ஏகோऽதவாऽப்யச்யுத தத்ஸமக்ஷம்
தத் க்ஷாமயே த்வாமஹம் அப்ரமேயம் ॥ 42 ॥

உலகமனைத்தும் படைத்து ஆளும் உம் மேன்மையையும் எல்லாவற்றிலும் ஆத்மாவாகயிருந்து அவைகளை தரித்து நியமிக்கும் உம்முடைய வீர்ய, சௌர்ய, பராக்ரமத்தையும், இவை ஒன்றையும் நான் அறியாமல், வெகு காலம் உம்முடன் தோழனாகப் பழகினதினால், அன்பினால் உம்மை நான் 'ஏ கிருஷ்ணா, ஏ யாதவா, ஏ தோழனே' என்று, கூவி உன்னை சாதாரண மனிதன் என்றே எண்ணி, பெரிய தப்பைச் செய்துவிட்டேன். அச்சுதா! இன்னும் உன்னுடன் விளையாடின பொழுதும், உணவருந்துகையிலும், படுத்திருந்த பொழுதும், அமர்ந்திருந்தபொழுதும், தனித்தோ பிறர் முன்போ உம்மை நான் ஏளனம் செய்து அவமதித்திருக்கிறேன்; நான் செய்த அப்பிழைகளையெல்லாம் நினைத்து இப்போது நடுங்குகிறேன். ப்ரஹ்மா முதலானோர் உம்மிடம் படும் பாட்டைக் கண்டால், நான் எம்மாத்திரம்! இப்படி நான் அறியாமல் செய்த பிழைகளை எல்லாம் மன்னித்தருள வேண்டுகிறேன்.

பிதாऽஸி லோகஸ்ய சராசரஸ்ய
த்வமஸ்ய பூஜ்யச்ச குருர்கரீயாந் ।
ந த்வத்ஸமோஸ்த்யப்யதிக: குதோऽந்யோ
லோகத்ரயேऽப்யப்ரதிமப்ரபாவ ॥ 43 ॥

ஒப்புயர்வற்ற அறப்பெரியோனே! இவ்வுலகிலுள்ள எல்லா உயிரினங்களுக்கும் அறிவில்லா அசேதனங்களுக்கும் நீரே தந்தையும் தாயுமாகிறீர். (படைத்தலுக்கு எல்லாவித காரணமும் பகவானே யாதலால் அவனே உலகுக்கெல்லாம் தந்தையும் தாயுமா

கிறான்). போற்றுதற்குரிய குருவும் ஆசார்யனும் நீரே. (ஸ்ரீ வைஷ்ணவ மதத்தில் ப்ரதமாச்சார்யன் லக்ஷ்மிநாதன்), மூவுலகி லும் வேறானவன் உமக்கு ஈடில்லை. அப்படியிருக்க மேலானவன் எவனும் இருக்கமாட்டானன்றோ !

தஸ்மாத் ப்ரணம்ய ப்ராணிதாய காயம்
ப்ரஸாதயே த்வாம் அஹம் ஈசம் ஈட்யம் ।
பிதேவ புத்ரஸ்ய ஸகேவ ஸக்யு:
ப்ரிய: ப்ரியாயார்ஹஸி தேவ ஸோடும் ॥ 44 ॥

ஆதலால், நான் என் உடலில் கீழே விழுந்து உம்மை வணங்கி, போற்றத்தக்க ஈச்வரனாகிய உம் அருளை வேண்டுகிறேன். மகனுக்குத் தந்தை போலும், தோழனுக்குத் தோழன் போலும், உமக்கு ப்ரியமான என்னுடைய பிழைகளை எல்லாம், எனக்குப் ப்ரியமான நீர் பொறுத்தருளக் கடவீர்.

தான் பெற்றெடுத்த மகனின் குற்றத்தை தந்தை பொறுப்பது இயல்பு. அதே போல ஒரு தோழன் செய்த பிழையை ஒருவன் பாராமல் அவனுக்கு நன்மையே செய்வான்.

"பிரியோஹி ஞானி அத்யர்த்தம், அஹம்ஸசமமப் பிரிய:" என்று கண்ணன் கூறியுள்ளது போல, ஒருவருக்கொருவர் பிரிய மானவர்களாயிருப்பதால், தான் செய்த பிழைகளை பொறுத்தருள கடமைப்பட்டவர் என்பதைச் சொல்லி அவனை தெண்டன் சமர்ப் பித்து வேண்டிக் கொள்கிறான் அர்ஜுனன்.

அத்ருஷ்டபூர்வம் ஹ்ருஷிதோऽஸ்மி த்ருஷ்ட்வா
பயேன ச ப்ரவ்யதிதம் மனோ மே ।
ததேவ மே தர்சய தேவ ரூபம்
ப்ரஸீத தேவேச ஜகந்நிவாஸ ॥ 45 ॥

இதற்கு முன் காணாத உமது உருவைக் கண்டு மகிழ்ந்தவனா கிறேன், ஆனால் எனது மனம் அச்சத்தினால் மிகவும் நடுங்குகிறது. மனிதற்குத் தேவர் போல தேவர்க்கும் தேவாவோ ! உலகுக்கெல் லாம் இருப்பிடமானவரே ! இதற்கு முன்னிருந்த உம்முடைய எழில் மிக்க க்ருஷ்ண ரூபத்தையே எனக்குக் காட்டியருள வேண்டும்.

கிரீடிநம் கதிநம் சக்ரஹஸ்தம்
இச்சாமி த்வாம் த்ரஷ்டும் அஹம் ததைவ ।
தேநைவ ரூபேண சதுர்புஜேந
ஸஹஸ்ரபாஹோ பவ விச்வமூர்த்தே ॥ 46 ॥

*ஆயிரம் கைகளையுடைய விச்வ மூர்த்தியே! முன் போலவே கிரீடத்தை தரித்தவராயும், கைகளில் கதை சக்ராயுதம் ஏந்தினவரா யும் உம்மை நான் காண விரும்புகிறேன். நான்கு கைகளுடைய அந்த கிருஷ்ணரூபத்தையே எனக்குக் காட்டி அருள்வீராக.*

ஸ்ரீ பகவான் உவாச—*ஸ்ரீ பகவான் சொன்னது.*

மயா ப்ரஸந்நேந தவார்ஜுநேதம்
ரூபம் பரம் தர்சிதம் ஆத்மயோகாத் ।
தேஜோமயம் விச்வம் அநந்தம் ஆத்யம்
யந்மே த்வதந்யேந நத்ருஷ்டபூர்வம் ॥ 47 ॥

*அர்ஜுன ! அருள் கனிந்த என்னால் யோக வலிமையினால் ஒளி நிறைந்ததும், முடிவில்லாததும், முழுமுதல் காரணமுமான எனது உயர்ந்த விச்வரூபத்தை நான் உனக்குக் காட்டினேன். உன்னைத் தவிர யாரும் இதை இதற்குமுன் கண்டதில்லை.*

ந வேதயஜ்ஞாத்யயனைர் ந தானை:
ந ச க்ரியாபிர் ந தபோபிருக்ரை: ।
ஏவம்ரூபச் சக்ய அஹம் ந்ருலோகே
த்ரஷ்டும் த்வதந்யேந குருப்ரவீர ॥ 48 ॥

*குருகுலப் போர் வீரா! மனித உலகில் என் பக்தனான உன்னைத் தவிர, வேறு யாவராலும், வேதம் ஓதி அறிவதாலும், யக்ஞம் யாகம், தானம், உக்கிரமான தபஸ் இவைகளினாலும், என் இந்த விச்வரூபத்தைக் காண முடியாது. பகவானை அடைவதற்கு அவன் அருளே உபாயமே ஒழிய மற்றவை எதுவும் உபாயமாகாது என்பது தேறுகிறது.*

**மா தே வ்யதா மா ச விமூடபாவோ**
**த்ருஷ்ட்வா ரூபம் கோரம் ஈத்ருங் மமேதம் ।**
**வ்யபேதபீ: ப்ரீதமநா: புநஸ்த்வம்**
**ததேவ மே ரூபமிதம் ப்ரபச்ய ॥ 49 ॥**

*பயங்கரமான இவ்வளவு பெரிய உருவத்தைக் கண்டு உனக்குண்டான பயமும், நடுக்கமும், கலக்கமும், இனி உனக்கு வேண்டாம். இதை நான் மறைத்து நீ வெகுகாலமாகக் கண்டு களித்த எனது கிருஷ்ணரூபத்தையே, உனக்குக் காட்டுகிறேன்; அதை நீ காண்பாயாக.*

**ஸஞ்சய உவாச** - *ஸஞ்சயன் கூறியது :*

**இத்யர்ஜுநம் வாஸுதேவஸ் ததோக்த்வா**
**ஸ்வகம் ரூபம் தர்சயாமாஸ பூய: ।**
**ஆச்வாஸயாமாஸ ச பீதமேநம்**
**பூத்வா புந: ஸௌம்யவபுர் மஹாத்மா ॥ 50 ॥**

*பகவான் அர்ஜுனனைப் பார்த்து இவ்வாறு கூறி, ஸத்ய ஸங்கல்பனுகையினுல் தான் சொன்னபடியே முன்பு இருந்த கிரீடம் சங்கு சக்கரம் நான்கு கைகளுடன் கூடிய தன் கிருஷ்ண உருவத்தை அர்ஜுனனுக்குக் காட்டி, அவன் பயத்தையும் போக்கினுன்.*

*கிருஷ்ணன் அவதரிக்கும்போது, சதுர் புஜங்களுடனேயே அவதரித்திருக்கிறுன். வசுதேவர் கேட்டுக் கொண்டபடி அதை இரண்டு கைகளாக மாற்றிக் கொண்டான் கம்ஸவதம் வரையில். அதற்குப் பிறகு நான்கு கைகளுடனேயே இருந்ததாகத் தெரிய வருகிறது. சிசுபாலன் கண்ணனை நான்கு கைகளுடையவனுகவே கூறியுள்ளான். இங்கே அர்ஜுனனும் "தேனவை ரூபேண சதுர்புஜேன" என்று கூறியிருக்கிறுன்.*

**அர்ஜுன உவாச :** *அர்ஜுனன் கூறியது.*

**த்ருஷ்ட்வேதம் மானுஷம் ரூபம் தவ ஸௌம்யம் ஜநார்தந ।**
**இதா நீமஸ்மி ஸம்வ்ருத்த: ஸசேதா: ப்ரக்ருதிம் கத: ॥ 51**

*கண்ணு ! எல்லையில்லாத மேன்மையான சௌந்தர்ய ஸௌகுமார்ய லாவண்யமுமான உன் மனித ரூபத்தைக் கண்ட*

பிறகு என் பயம் நீங்கிற்று; மனம் சாந்தி அடைந்தது என்றான் அர்ஜுனன்.

பகவான் உவாச—கண்ணன் கூறியது.

ஸுதுர்தர்சமிதம் ரூபம் த்ருஷ்டவாநஸி யந்மம !
தேவா அப்யஸ்ய ரூபஸ்ய நித்யம் தர்சநகாங்க்ஷிண: ॥ 52 ॥

உலகையெல்லாம் தரித்து நியமித்தும், அவைகளுக்கு காரண மாயுமுள்ள காண அரிய என் விச்வரூபத்தை (என் அருளினால்) நீ பார்த்தாய். இந்த ரூபத்தை தரிசிக்க தேவர்களும் எப்போதும் விரும்புகிறார்கள்.

மனிதர்களைக் காட்டிலும் அதிகமான அறிவு, ஆற்றல் பெற்றவர் கள் தேவர்கள், அவர்களும் இந்த ரூபத்தை காணக் கிடைக்காமல் அதைப் பார்க்க வேண்டுமென்று எப்போதும் இச்சித்துக் கொண் டிருக்கிறார்கள்.

நாஹம் வேதைர்ந தபஸா ந தாநேந ந சேஜ்யயா !
சக்ய ஏவம்விதோ த்ரஷ்டும் த்ருஷ்டவாநஸி மாம் யதா ॥ 53 ॥

பக்த்யா த்வநந்யயா சக்ய அஹமேவம்விதோzர்ஜுந !
ஜ்ஞாதும் த்ரஷ்டும் ச தத்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப ॥ 54

அர்ஜுன ! நீ என்னை எவ்வாறு கண்டாயோ அது போல, வேதம் ஓதுவதினாலும், தவத்தினாலும், யாகாதிகளினாலும், தானத் தினாலும், நான் காணக்கூடியவனல்லன். ஆனால் என்னிடம் செய் யும் அனன்ய பக்தியினால் மாத்திரமே, நான் உள்ளபடி அறிவதற் கும் காண்பதற்கும், அடைவதற்கும் தகுதியானவன்.

பகவானைப் பற்றி அறிவதற்கோ, அவனைக் காண்பதற்கோ, அவனை அடைவதற்கோ மற்றவைகளில் பற்று அற்று, அவன் ஒரு வனிடமே செய்யும் பக்தியே (அன்பே) ஸாதனம். வேறு ஒன்றும் ஸாதனமாகாது என்று பக்தியின் மேன்மையை இந்த சுலோகத் தில் கூறுகிறான் கண்ணன்.

பக்தி உள்ளவனுக்கே வேதத்தின் உண்மைப் பொருள் விளங்கும். பகவானிடம் அன்பு இல்லாதவனுக்கு வேதம் தன்

உண்மைப் பொருளை மறைக்கும் இயல்பானதைப் பற்றியே அதற்கு "மறை" என்று பெயர்.

வேதத்தை ஓதி அதன் உண்மைப் பொருளை அறிய வேண்டும். அப்போது பகவானை உள்ளபடி அறியலாம்; இப்படி அறிந்து வெகு காலம் அந்த பகவானை த்யானம் செய்தால் பக்தி உண்டாகும்; வெகு காலம் பகவத் பக்தியைச் செய்து வந்தால், அது பரபக்தி, பரஞானம், பரம பக்தியாக வளர்ந்து பக்குவம் அடைந்து பிறகே அந்த பரம்பொருளைக் காணவோ அடையவோ இயலும். "பக்தியேக கோசர" என்றும் இந்த சுலோகத்தில் கண்ணன் கூறியுள்ளான்.

**மத்கர்மக்ருத் மத்பரமோ மத்பக்த: ஸங்கவர்ஜித: ।**
**நிர்வைர: ஸர்வபூதேஷு யஸ் ஸ மாமேதி பாண்டவ ॥ 55 ॥**

பகவானை அடைவதற்கான உயர்ந்த படியை இந்த அத்யாயம் இறுதி சுலோகமான இதில் கண்ணன் வெகு தெளிவாகக் கூறுகிறான்.

அர்ஜுன! எவன் தான் செய்யும் எல்லாச் செயல்களையும் எனக்கு ஆராதனமாக (என் பிரீதிக்காக) செய்கிறானோ, எவன் என்னை அடைவதே தனக்கு உயர்ந்த பயனாக எண்ணியிருக்கிறானோ, எவன் என் ஒருவனிடமே அன்பைச் (பக்தியை) செய்கிறானோ, யாவனொருவன் மற்ற எல்லாவற்றிலும் பற்றுதல் இல்லாமலும், எல்லா உயிர்களிடத்திலும் பகைமையற்று நன்மையைக் கோருகிறானோ, அவனே என்னை அடைகிறான்.

**மத்கர்மக்ருத்**—சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட அவரவர் வர்ண ஆச்ரமத்திற்குத் தகுந்த கருமங்களை "பகவத் பிரீத்யார்த்தம்" செய்பவன். இப்படிச் செய்பவன் ஒரு பலனையும் இச்சியான். தான் செய்யும் செயல்களுக்கெல்லாம் பரம பிரயோசனம் பகவானின் உகப்பே என்று இருப்பான்.

இப்படி இருந்து, அக்கருமங்களை பகவானிடம் அன்போடு செய்ய வேண்டும். அந்த அன்பு மிகுதியால் பகவானை துதித்தல், பூஜித்தல், வணங்குதல், முதலானவைகளையும் செய்திருப்பான். ஒரு நொடிப்பொழுது பகவானை நினையாவிடினும், உகந்து அவனுக்குத் தொண்டு செய்யாவிடினும் தரித்திருக்கமாட்டான்.

இப்படிப்பட்ட பரமபக்தி தலையெடுத்தவனின் புண்ய பாபமான வினைகள் முற்றிலும் அவனைவிட்டு விலகிவிடும். இவ் வினைகள் ஒழிந்தவாறே அவன் என்னை அடைகிறான். (மோக்ஷம் பெறுகிறான்). இந்த பரமாத்மானுபவம் அவனை விட்டு நீங்குவ தில்லை; அதாவது மோக்ஷம் அடைந்தவனுக்கு மறுபிறவி (புநராவ்ர்த்தி)யில்லை.

## ஸ்ரீ ஆளவந்தாரின் கீதார்த்த ஸங்க்ரஹம்

**ஏகாதசே ஸ்வயாதாத்ம்ய ஸாக்ஷாத்கார அவலோகனம் ।**
**தத்த முக்தம் விதி ப்ராப்தயோ: பக்த்யேக உபாயதா ததா ॥**

பதினோராம் அத்யாயத்தில் தன்னுடைய உண்மையான ஸ்வபாவங்களை நேராகப் பார்ப்பதற்குக் காரணமாகிய திவ்யமான கண் அர்ஜுனனுக்குக் கொடுக்கப்பட்டது. அப்படியே பகவானை அறிவதற்கும் அடைவதற்கும் பக்தி ஒன்றே உபாயம் என்பதும் சொல்லப்பட்டது.

*ஆளவந்தார் திருவடிகளே சரணம் !*
*பதினோராம் அத்யாயம் முற்றிற்று.*



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீமத் பகவத் கீதை

## பன்னிரெண்டாம் அத்யாயம்

### அவதாரிகை

கீழ் அத்தியாயத்தில் அர்ஜுனன் விரும்பியபடி பகவான் தன் விச்வரூபத்தைக் காட்டி அருளினான். அந்த வடிவத்தில் உலக மெல்லாம் அடங்கியிருப்பதையும், அவைகளை பகவான் அடக்கி ஆண்டு அழிக்கும் சக்தியையும் அர்ஜுனன் கண்டான்.

பிறகு அர்ஜுனனின் வேண்டுகோளின்படி தன் பழைய க்ருஷ்ண உருவத்தையே எடுத்துக் கொண்ட கண்ணன், "என்னுடைய விச்வரூபத்தை எவராலும் காண முடியாது; நீ எனது பிரியமான பக்தனாகையினால் அதை நான் உனக்குக் காண்பித்தேன்," என்று சொல்லி, "பக்த்யா த்வநந்யயா சக்ய: அஹமேவம் விதோர்ஜுன! ஜ்ஞாதும் த்ரஷ்டும் ச தத்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப" பக்தி ஒன்றினாலேயே என்னை எவனும் உள்ளபடி அறியவோ காணவோ, என்னை அடையவோ முடியும்" என்று சொல்லி, பதினோராம் அத்யாயத்தை முடித்திருக்கிறான்.

அதைக் கேட்ட அர்ஜுனனுக்கு ஒரு சந்தேகம் உண்டாயிற்று. முதல் ஷட்கத்தில், ஆத்ம சிந்தனம் செய்து, ஆத்ம தரிசனம் பெற்று அவ்வழியாலே ஒருவன் பகவானை அடைலாம் என்று கண்ணன் கூறியிருக்கிறானே; அது சிறந்ததா அல்லது இப்போது அவன் கூறும் பக்தி மார்க்கம் சிறந்ததா என்று கண்ணனை வினவுகிறான்.

**அர்ஜுன உவாச** - அர்ஜுனன் கேட்டான்.

**ஏவம் ஸததயுக்தா யே பக்தாஸ்த்வாம் பர்யுபாஸதே |**
**யே சாப்யக்ஷரம் அவ்யக்தம் தேஷாம் கே யோகவித்தமா: ‖ 1 ‖**

க்ருஷ்ண ! உம்மை அடைய விரும்புகிறவர்களில், உம்மிடம் பக்தி செய்பவர்கள் மேன்பட்டவர்களா அல்லது (நீர் முதல் ஷட்கத்தில் சொன்ன) புலன்களை விஷயங்களில் செல்லாமல் அடக்கி, ஜீவாத்ம சிந்தனம் செய்து, ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெற்று பிறகு உம்மை அடையவர்கள் சிறந்தவர்களா ? இவ்விரு உபாயங்களில் எது சிறந்தது ? என்று அர்ஜுனன் வினவினான்.

ஸ்ரீ பகவான் உவாச – பகவான் கூறியது.

மய்யாவேச்ய மனோ யே மாம் நித்ய யுக்தா உபாஸதே |
ச்ரத்தயா பரயோபேதா: தே மே யுக்ததமா மதா: || 2 ||

*அர்ஜுனா! எவர்கள் என்னிடம் அளவில்லா அன்பைச் செய்து தங்கள் மனத்தை என்னிடமே வைத்து, என்னை அடைய வேண்டும் என்று ஊக்கத்துடன் என்னை உபாசிக்கிறார்களோ, அதாவது பக்தி செய்கிறார்களோ, அவர்களே சிறந்தவர் என்பது எனது கருத்து, என்றான் கண்ணன்.*

யே த்வக்ஷரம் அநிர்தேச்யம் அவ்யக்தம் பர்யுபாஸதே |
ஸர்வத்ரகம் அசிந்த்யஞ்ச கூடஸ்த்தம் அசலம் த்ருவம் || 3 ||

ஸந்நியம்யேந்த்ரியக்ராமம் ஸர்வத்ர ஸமபுத்தய: |
தே ப்ராப்நுவந்தி மாமேவ ஸர்வபூதஹிதே ரதா: || 4 ||

க்லேசோzதிகதரஸ்தேஷாம் அவ்யக்தாஸக்த சேதஸாம் |
அவ்யக்தா ஹி கதிர் துக்கம் தேஹவத்பிரவாப்யதே || 5 ||

*எவர்கள் காணத்தகாததாயும், சிந்திக்க முடியாததாயும், எல்லா உடல்களிலும் ஒரே மாதிரி உள்ளதாயும், மாறுதல் இல்லாததாயும், நித்யமாயும் இருக்கிற ஜீவாத்மாவை, புலன்களை விஷயங்களினின்றும் அடக்கி, எல்லா ஆத்மாக்களிலும் சமபுத்தி பண்ணி எல்லா உயிர்களின் நன்மையே விரும்பினவர்களாய் உபாஸிக்கிறார்களோ (அதாவது ஆத்ம சிந்தனை செய்கிறார்களோ) அவர்கள் என்னையே (எனக்கு ஸமானமான பரிசுத்த ஜீவனையே) அடைகிறார்கள்.*

*கண்களால் காண முடியாததும், மனத்தினால் சிந்திக்க அரிதாயுமுள்ள ஜீவாத்ம சிந்தனம் கஷ்டம், சரீரத்தையே ஆத்மாவாக அபிமானித்திருக்கும் அவர்களுக்கு அறிய முடியாத ஆத்ம சிந்தனம் எளிதில் கைகூடுவதல்ல.*

*ஸர்வேச்வரனே அறப்பெரியோன் எல்லா கல்யாண குணங்களுடையவன், நம்மை படைத்துக் காப்பதில் மிக்க அறிவு ஆற்றல் படைத்தவன் என்பது இயல்பாகவே எல்லோருக்கும் தெரியும். அவனை சௌந்தர்ய லாவண்ய தேஜஸ்ஸான ஓர் உருவம் படைத்தவன். அவனைக் கண்டு, பற்றி அவனிடம் பக்தியோகம் செய்து அவனை அடைவது சுலபம் என்பதை முதல் சுலோகத்தில் கூறினான் கண்ணன்.*

இந்த மூன்று சுலோகங்களில் ஆத்ம சிந்தனம் செய்வது மிகவும் கஷ்டமானது என்பதை விளக்குகிறான். ஜீவன் கண்ணுக்குத் தோன்றாதவன். அணு ஸ்வரூபன். ஓர் உருவமிருந்து மனத்தினால் சிந்திக்கவும் கோசரமல்லன். அநேக காலம் உப்பில் ஊறின ஊறு காய் போல், இந்த உடலே ஆத்மா என்ற எண்ணத்தில் நாம் ஊறி, நம் சரீரத்தையே போர பொலிய போஷித்து ரக்ஷித்து வருகிறோம். இந்த உடலைக் காட்டிலும் வேறொரு ஜீவன் உண்டு; அவன் நித்யன், அழிவில்லாதவன், உடலைப்போல் மாறுதலற்றவன், ஜ்ஞான ஸ்வரூபன் என்பதை அறிந்து அவனை மனத்தினால் சிந்தனை செய்வது என்பது மிகவும் அரிது; இன்னும் பக்தி செய்து பகவானை விரைவிலேயே கைக்கூடும். ஆத்ம சிந்தனம் செய்து, பகவானை அடைவது என்பது வெகு காலதாமதமாகும்.

ஆதலால் சுலபமாகச் சென்று விரைவில் பயன் பெறக்கூடிய பக்தியோகமே மேன்பட்டது என்பது என் கருத்து என்கிறான் கண்ணன்,

இங்கே அக்ஷரம் என்கிற பதம் ஜீவாத்மாவையே சொல்லுகிறது. மேலே பதினைந்தாம் அத்யாயத்தில் பத்தஜீவனை க்ஷரம் என்றதினாலும் பரிசுத்த ஜீவனை அக்ஷரம் என்கிற பதத்தினாலும் ''த்வாவிமௌ புருஷோ லோகே க்ஷர அக்ஷர ஏவச'' என்பதினால் சொல்லியிருக்கிறான்; ஆதலால் இங்கும் அக்ஷரம் என்பதினால் பரிசுத்த ஜீவனை அடைகிறான் என்றே பொருள் கொள்ள வேண்டும்.

**யே து ஸர்வாணி கர்மாணி மயி ஸந்ந்யஸ்ய மத்பரா: ।**
**அநந்யேநைவ யோகேந மாம் த்யாயந்த உபாஸதே ॥ 6 ॥**

**தேஷாமஹம் ஸமுத்தர்த்தா ம்ருத்யுஸம்ஸாரஸாகராத் ।**
**பவாமி நசிராத் பார்த்த மய்யாவேசிதசேதஸாம் ॥ 7 ॥**

எவர் எல்லா கர்மங்களையும் எனக்கு அர்ப்பணம் செய்து, வேறு பயனை விரும்பாமல், என்னை அடைவதே பரம பிரயோசனமாக என்னை த்யானம் செய்து உபாஸிக்கிறார்களோ, அதாவது பக்திசெய்கிறார்களோ, என்னிடத்திலேயே மனத்தை வைத்துள்ள அவர்களை ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலிருந்து நான் கரையேற்றுகிறேன்.

தாங்கள் செய்யும் லௌகிக செயல்களையும் சந்தியாவந்தனம் பகவதாராதனம், யஜ்ஞம், யாகம் முதலான வைதிக கருமங்களை

யும் பகவானுக்கு அர்ப்பணம் (ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து) என்று செய்ய வேண்டும். வேறு விஷயம் கலசாமல் என் ஒருவனிடமே மனத்தை வைத்து, என்னை அடைவதே பயனாக எண்ணி, என்னிடம் பக்தி செய்பவனுக்குள்ள, மோக்ஷத்திற்குத் தடையான புண்ய பாபங்களைப் போக்கி, யமனுக்குச் சமானமான அதாவது ஆத்ம நாசத்தை விளைவிக்கும் ஸம்ஸாரமான பெருங்கடலை நானே தாண்டுவிக்கிறேன், என்கிறான் கண்ணன்.

இதனால் அவன் செய்யும் பக்தியும் மோக்ஷத்திற்கு உபாயம் அன்று; பகவானே அதை அடைவிக்கிறான்; சித்த தர்மமான அவனே மோக்ஷோபாயம் என்பது கண்ணனாலேயே கூறப் பட்டுள்ளது.

**மய்யேவ மந ஆதத்ஸ்வ மயி புத்திம் நிவேசய।**
**நிவஸிஷ்யஸி மய்யேவ அத ஊர்த்த்வம் ந ஸம்சய: ॥ 8 ॥**

ஆதலால் அர்ஜுனா! நீ என்னிடத்திலேயே உன் மனத்தை வைத்திரு; உன் புத்தியையும் என்னிடமே செலுத்து. நீ என்னிடமே வசிப்பாய் என்பதில் சந்தேகமேயில்லை. (அதாவது நீ என்னை அடைவாய். மறுபிறவி இல்லாத மோக்ஷம் அடைவாய் என்பது பொருள்).

பகவானிடம் அன்பைச் செய்வது சுலபமாயும் இனிமையாகவு மிருக்கும். சீக்கிரத்தில் உயர்ந்த பலனான பகவானை அடைவிக்கும். ஆதலால் அர்ஜுனா! நீ உன் மனத்தை என்னிடம் செலுத்தி, உன் புத்தியைக் கொண்டு என்னை அடைவதே மேலான பலன் என்பதை நிச்சயித்திருந்தாயாகில், நீ என்னிடமே வஸித்திருப்பாய். அதாவது மறுபிறவியில்லா மோக்ஷம் அடைவாய்.

**அத சித்தம் ஸமாதாதும் ந சக்நோஷி மயி ஸ்த்திரம்।**
**அப்யாஸயோகேந ததோ மாம் இச்சாZZப்தும் தநஞ்ஜய ॥ 9 ॥**

அர்ஜுனா! அப்படி உன் மனத்தை நிலையாக என்னிடம் வைக்க உனக்கு சக்தியில்லையானால், என்னை தியானம் செய்ய பழகிக் கொண்டு அதனால் என்னையே அடைய விரும்புவாய்.

**அப்யாஸ யோகேந** - அப்யாஸம் என்றால் பழக்கம்; யோகம் - என்றால் தியானம் எனப்பொருள். அர்ஜுனா! உன் மனத்தை நிலையாக என்னிடம் வைத்து பக்தி செய்ய நீ சக்தியற்றவனாக இருப்

பாயாகில், என் ஸ்வரூப ரூபகுணங்களை அடிக்கடி தியானம் செய்ய பழகிக் கொள். இப்படி செய்து வந்தால், நாளடைவில் உன் மனம் என்னிடம் நிலைத்திருக்கும் நீ என்னை அடைவாய் என்கிறான் கண்ணன்.

தியானம் என்றால் மற்றொன்றையும் நினையாமல் ஒன்றையே எண்ணியிருப்பது. ஸம்ஸாரி சேதனரால் இது செய்வது அரிது. நின்றவா நில்லா நெஞ்சுடையவர்களாகையினால் உலக விஷயங்களிலேயே ஒன்றில் நிலைத்திராது இவர்களுடைய மனம்; அப்படியிருக்க, அவ்விஷயங்களை அறவே துறந்து பகவானையே நினைத்து எப்போதும் நிலைத்திருப்பது என்பது முடியாத செயல்.

ஆதலால், ஸம்ஸாரத்தில் ஆழ்ந்து கிடக்கும் சேதனன், உலக விஷயங்கள் மிகத் தாழ்ந்தவை, நிலைத்திராதவை, சுகம் போல் தோன்றினாலும் துக்கத்தையே கொடுக்கக்கூடியவை, நம் ஆத்ம நாசத்தையே செய்யும் என்று அடிக்கடி நினைக்க வேண்டும். ஈச்வரனோ எனில் அறப்பெரியோன், அழிவே இல்லாதவன், நமக்கு நன்மையையே எப்போதும் செய்பவன். நம்மைப் படைத்து, காத்து, ரக்ஷிப்பவன். அதற்கேற்ப அறிவு ஆற்றல் படைத்தவன் என்று இப்படி அடிக்கடி நினைத்திருக்க வேண்டும். இது இன்பகரமாயுமிருக்கும்.

இவ்வாறு ஆராய்ந்து பார்த்தால், நம் மனது தானே விஷயங்களை விட்டு பகவானைப் பற்றப் பாங்காயிருக்கும். தினமும் சிறிது காலமாவது பகவானையும் அவன் கல்யாண குணங்களையும் தியானம் செய்ய நாம் பழக்கி வந்தால், நாளடைவில் நம் மனம் பகவானையே நிலையாகப் பற்றி அவனிடம் அன்பை (பக்தியை)ச் செய்யும் இயல்புடையதாகும். பின்பு பிறவியில்லா மோக்ஷம் அடையலாம்.

**அப்யாஸேऽப்யஸமர்த்தோऽஸி மத்கர்மபரமோ பவ ।**
**மதர்த்தமபி கர்மாணி குர்வந் ஸித்திம் அவாப்ஸ்யஸி ॥ 10 ॥**

மேலே சொன்னபடி என்னை தியானிப்பதில் பழக்கம் செய்து கொள்ளவும் உனக்கு வல்லமை இல்லையாகில் எனக்கு உகந்து பணி செய்வதில் ஈடுபட்டிருப்பாய். (இப்படி நான் உகக்கும் தொண்டுகளைச் செய்து வந்தாயாகில், என்னை தியானம் செய்வதில் பழகி, என்னிடம் நிலையாக அன்பைச் செய்து நீ என்னையே அடைவாய்).

பகவான் உகக்கும் தொண்டுகளாவன - கோயில் கட்டுதல், பூந்தோட்டம் அமைத்தல், திருவிளக்கு ஏற்றுதல், திருவிலகு சேர்ப்பது, தண்ணீர் தெளித்தல், புஷ்பமாலை கட்டுதல், வலம் வருதல் (ப்ரதக்ஷிணம்) ஸ்தோத்திரம் பண்ணுதல், நமஸ்கரித்தல் முதலிய வைகளை அன்புடன் செய்து வந்தால், அவனை தியானம் செய்யத் தடையான நம் பாபங்கள் விலகும். பிறகு அவனை தியானம் செய்யப் பழகிக் கொண்டு, அவனிடம் பக்தியைச் செய்து அவனையே அடையலாம்.

மேலே சொன்ன தொண்டுகளை பணத்தினாலோ, உடலினாலோ தான் செய்ய வேண்டுமென்பதில்லை. மனத்தினாலும் வாக்காலும் செய்யலாம். எப்படிச் செய்தாலும் பகவான் திருவுள்ளம் உகந்து நமக்கு, ஆத்ம நன்மையைச் செய்கிறான்.

அதைததப்யசக்தோZஸி கர்த்தும் மத்யோகமாச்ரித:।
ஸர்வ கர்ம பலத்யாகம் தத: குரு யதாத்மவாந் ॥ 11 ॥

கீழ் சொல்லியபடி நான் உகக்கும் தொண்டுகளை செய்யவும் சக்தியற்றவனாகில், விஷயங்களிலிருந்து உன் மனத்தை அடக்கி, நீ செய்யும் எல்லா கர்ம பலன்களையும் எனக்கு அர்ப்பணம் செய்.

உன் மனம் புத்தி இவைகளை நிலையாக என்னிடம் வைத்து செய்யும் அனன்யப்]பக்தியினால் நீ என்னை அடைவாய் என்றான் முதன் முதலில்.

அப்படி அனன்ய பக்தி செய்ய இயலாதவன் என்னை தியானம் செய்ய சிறிது சிறிதாகப் பழகிக் கொண்டால், தன்னடைவே தன்னிடம் நிலையான பக்தி உண்டாகும் என்றான்.

அப்படி தியானம் அப்யாஸம் செய்யவும் சக்தியற்றவன், எனக்குப் பிரியமான கைங்கர்யங்களை, (தான் உகக்கும் பணியை) செய்து வந்தால் நாளடைவில் த்யானம் செய்யப் பழக்கம் உண்டாகி பிறகு பக்தி செய்து என்னைப் பெறலாம் என்றான்.

இதையும் செய்ய இயலாதவன், தான் செய்யும் எல்லாச் செயல்களின் பலன்களையும் எனக்கு அர்ப்பணம் செய்து, ஜீவாத்ம சிந்தனம் செய்யப் பழகிக் கொள்ளட்டும் என்கிறான் இந்த பதினொன்றாம் சுலோகத்தில்.

முதல் ஷட்கத்தில் சொல்லியபடி நாம் செய்யும் எல்லாச் செயல்களையும், லௌகிகமோ, சந்தி, ஜபம் போன்ற வைதிகமோ

எதுவானாலும் அவைகளின் பலனில் இச்சையில்லாமல் செய்ய வேண்டும். நான் செய்கிறேன், இந்தச் செயல் என்னுடையது, இதன் பயன் எனக்கு என்று எண்ணலாகாது. பகவானே கர்த்தா, அவனால் கொடுக்கப்பட்ட ஜ்ஞான சக்தியைக் கொண்டு செய்யப் பட்டன. அவனே ஒரு சூத்ரதாரியாக நம்முள் இருந்து நடத்தி வைக்கிறான். இவைகளின் பலன்களிலும் எனக்குத் தொடர்பு இல்லை என்று எல்லா கர்ம பலன்களையும் பகவானுக்கே அர்ப்பணம் செய்துவிட வேண்டும்.

இப்படிச் செய்து வந்தால் ராஜஸ, தாமஸ குணம் அடங்கி, ஸத்வகுணம் மேலிட்டு, நாம் பரிசுத்த ஆத்மாவை சிந்தனம் செய்யத் தகுதியுள்ளவராகிறோம் ஜீவாத்ம சிந்தனம் செய்து வந்தால், ஜீவாத்ம அவலோகனம் ஸாக்ஷாத்காரம் (தரிசனம்) ஏற்படும். அப்போது ஜீவாத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி, அறிவதுடன், ஜீவன் பகவானுக்குத் தொண்டு செய்வதே ஜீவனின் ஸ்வரூபம், என்று ஈச்வரனுக்கும் ஜீவனுக்குமுள்ள ஸ்வாமி தாஸ சம்பந் தத்தை அறிந்து, பகவானுக்கு அன்புடன் தொண்டு செய்யத் தலைப்படுபவன்; பிறகு பரமாத்ம தியானம் செய்து, பகவத் பக்தி உண்டாகி, அது பரபக்தி பரஜ்ஞானம், பரமபக்தியாக முதிர்ந்து மோக்ஷம் பெறுகிறான்.

ச்ரேயோ ஹி ஜ்ஞாநம் அப்யாஸாத் ஜ்ஞாநாத் த்யானம் விசிஷ்யதே ।
த்யாநாத் கர்மபலத்யாக: த்யாகாத் சாந்திரநந்தரம் ॥ 12 ॥

பகவத் த்யானத்தின் அப்யாஸத்தைவிட ஆத்ம தரிசனம் சிறந் தது; ஆத்ம தரிசனத்தைக் காட்டிலும் ஆத்ம சிந்தனம் சிறந்தது, ஆத்ம சிந்தனையைவிட கர்மபலத்யாகம் மேன்பட்டது. கர்மபலத் தத்தினால் மனச்சாந்தி உண்டாகிறது.

ஸர்வ கர்ம பலத்தியாகமே ஆத்ம சிந்தனத்திற்கு உபாயம். ஆத்ம சிந்தனமே ஆத்ம தரிசனத்திற்கு உபாயம். ஆத்ம தரிசனமே பகவத் த்யான அப்யாசத்திற்கு உபாயம். இப்படியிருக்க இதில் கிருஷ்ணன் உபாயத்தை மேன்பட்டதாகவும், அதனால் உண்டாகும் பலனைத் தாழ்ந்ததாகவும் சொல்வதின் கருத்தென்ன ?

பித்தரோகிக்குப் பால் கசக்குமாப்போல பகவத் த்யானம் செய்யத் தகுதியற்றவனுக்கு அதைச் செய்வது கடினமாயிருக்கும். அதில் அவனுக்கு ருசியிராது, இப்படிப்பட்டவனுக்கு பகவத் த்யா னத்தை விட ஆத்ம தரிசனமே மேலானது

இதே போல, ஜீவாத்ம தரிசனம் பெற சக்தியற்றவனுக்கு ஜீவாத்ம த்யானமே சிறந்தது. ஜீவாத்ம சிந்தனம் செய்யத் தகுதியற்றவனுக்கு ஸர்வகர்ம பலத்யாகமே மேன்பட்டது, இப்படி பலத்யாகத்தோடு கர்மாவை செய்பவனுக்கு எதிலும் ஆசையற்றவனுகையால் மனச்சாந்தி உண்டாகும் என்பதே இந்த சுலோகத்தின் பொருள்.

**அத்வேஷ்டா ஸர்வபூதாநாம் மைத்ர: கருண ஏவ ச ।**
**நிர்மமோ நிரஹங்கார: ஸமதுக்கஸுக: க்ஷமீ ॥ 13 ॥**

**ஸந்துஷ்ட: ஸததம் யோகீ யதாத்மா த்ருடநிச்சய: ।**
**மய்யர்ப்பிதமநோபுத்திர் யோ மத்பக்தஸ் ஸ மே ப்ரிய: ॥ 14 ॥**

இதிலிருந்து சில சுலோகங்களில் பகவானுக்கு பிரியமானவன் எவன் என்பதைக் கூறுகிறுன்

எல்லா உயிர்களிடத்தும் த்வேஷம் (வெறுப்பு) இல்லாமல், அவைகளிடம் நட்பும் கருணையுமுள்ளவனுக இருப்பவன், அஹங்கார மமகாரமற்று சுக துக்கங்களை ஸமமாகக் கருதுபவன், பொறுமை உடையவன், சந்தோஷமாக இருப்பவன், ஸர்வேச்வரனே மேற்பட்டவன் என்கிற நிச்சயபுத்தி உள்ளவன் இவ்வாறு இருந்து தன் புத்தி இவைகளை நிலையாக என்னிடமே வைத்து எவன் என்னிடம் பக்தியைச் செய்கிறுனே, அவனே எனக்குப் பிரியன்.

**அத்வேஷ்டா ஸர்வ பூதானும் :** தன்னை ஒருவன் சொல்லத்தகாத வார்த்தையைச் சொன்னுலும், தனக்குக் கெடுதலை செய்தாலும், அவனிடமும் இப்படியே எல்லோரிடமும், த்வேஷமோ வெறுப்போ கூடாது.

**மைத்ர :கருண ஸர்வபூதானும்-** எல்லா ஜீவன்களும் பகவத் விபூதி; அவனுடைய சொத்து என்பதைத் தெரிந்து அவைகளிடம் நண்பனுகவும், கருணையுள்ளவனுகவும் இருக்க வேண்டும்.

**நிர்மமோ நிர்அஹங்கார :** "யானும் நீ; என் உடைமையும் நீயே" என்கிறபடி தானும், தன்னுடமையும், பகவானுக்கு உரியவை என்பதை அறிந்து, அஹங்கார மமகாரமற்று இருத்தல் வேண்டும்.

**ஸம துக்கே சுகம் சாமீ-** சுகம் வந்தாலும் துக்கம் வந்தாலும் எல்லாம் நம் வினைப்பயனுக்குச் சேர வந்து போகின்றன என்பதை அறிந்து, இரண்டையும் சமமாகக் கொண்டு பொறுமை உள்ளவனுக இருத்தல் வேண்டும்.

ஸந்துஷ்ட ! கிடைத்ததைக் கொண்டு திருப்தியுள்ளவனாக யிருக்க வேண்டும் பகவத் பக்தன்.

யதாத்மா-த்ருட நிச்சய : விஷயங்களிலிருந்து மனத்தை அடக்கினவனாய் வேதத்தில் சொல்லப்பட்ட வாசுதேவன் ஒருவனே பரதத்வம் என்கிற நிச்சய புத்தியுடையவனாய்,

மய்யர்ப்பித மனோ புத்தி ! என்னிடம் தன் மனத்தையும் புத்தியையும் நிலையாக வைத்துள்ள,

யோமத்பக்த: ஸமே ப்ரிய: இப்படிப்பட்ட என்பக்தன் எனக்குப் பிரியமானவன்.

யஸ்மாந்நோத்விஜதே லோகோ லோகாந்நோத்விஜதே ச ய: ।
ஹர்ஷாமர்ஷபயோத்வேகைர் முக்தோ ய: ஸ ச மே ப்ரிய: ॥ 15 ॥

எவனிடமிருந்து உலகம் பயப்படுகிறதில்லையோ, உலகினால் எவனுக்கு ஒருவித பயமுமில்லையோ, எவன் களிப்பு, சினம், அச்சம், கலக்கம் இவைகளிலிருந்து விடுபட்டவனோ, அவன் எனக்குப் பிரியனாகிறான்.

இந்த கர்மயோகி உலகிலுள்ள எந்த உயிர்களுக்கும் ஒரு கெடுதலும் செய்யான்; ஆதலால் இவனிடமிருந்து உலகுக்குப் பயமில்லை. அதேபோல உலகிலுள்ள எதிலும் இவனுக்கு விருப்பமோ, வெறுப்போ யில்லாததினால், எல்லா உயிர்களிலிருந்தும், இவனுக்கு பயமேதும் இராது. இவன் உலகத்தில் ஒட்டற்று வசிப்பவனாகையினால் சந்தோஷமோ துக்கமோ, மற்றும் கோபம், பயம், கலக்கம் முதலியவை இவனுக்கு உண்டாகக் காரணமேயில்லை.

அநபேக்ஷ: சுசிர் தக்ஷ உதாஸீநோ கதவ்யத: ।
ஸர்வாரம்ப பரித்யாகீ யோ மத்பக்தஸ் ஸ மே ப்ரிய: ॥ 16 ॥

ஆத்மாவைத் தவிர மற்ற எதையும் விரும்பாதவனாய், பரிசுத்தனாய், வல்லமை உள்ளவனாய், மற்றவைகளில் உதாஸீனனாய், சுக துக்கங்கள் அற்றவனாய், மற்ற காமிய கர்மங்களைத் துறந்தவனாய், என்னிடம் பக்தி செய்கிறவன் எனக்கு இனியன்.

இந்த கர்மயோகி ஆத்மாவைக் காண்பதிலேயே விருப்பமுடையவனாயிருப்பான். மற்றவை எதையும் இச்சியான். சாஸ்திரம் சொல்லியபடியே செய்வான்; மற்றவைகளில் உதாஸீனனாய்

இருப்பான். தனக்குரிய கர்மாநுஷ்டானத்தைச் செய்வதினுல் உண்டாகும் சுகதுக்கம், குளிர்ச்சி வெப்பம் போன்றவைகளைப் பொருட்படுத்த மாட்டான். இப்படிப்பட்ட என் பக்தன் எனக்கு இனியனுவான்.

**யோ ந ஹ்ருஷ்யதி ந த்வேஷ்டி ந சோசதி ந காங்க்ஷதி ।**
**சுபாசுபபரித்யாகீ பக்திமாந் ய: ஸ மே ப்ரிய: ॥ 17 ॥**

இவன் பிரியமானது கிடைத்தால் மகிழ்ச்சியும், தான் விரும்பாதது வந்தால் வெறுப்பும் அடைவதில்லை. நன்மை தீமைகளைத் துறந்த என் பக்தன் எனக்கு ப்ரியமானவன்.

**ஸமச் சத்ரௌ ச மித்ரே ச ததா மாநாவமாநயோ: ।**
**சீதோஷ்ணஸுகதுக்கேஷு ஸம: ஸங்கவிவர்ஜித: ॥ 18 ॥**

**துல்யநிந்தாஸ் துதிர் மௌநீ ஸந்துஷ்டோ யேநகேநசித் ।**
**அநிகேத: ஸ்த்திரமதி: பக்திமாந் மே ப்ரியோ நர: ॥ 19 ॥**

பகையையும் நட்பையும் அதேபோல தனக்கு நேரும் அவமானத்தையும் ஒன்று போல் கருதுபவன்; குளிர் வெப்பம், இன்ப துன்பங்களில் களிப்பும் கவர்வும் அற்று இருப்பவன். இகழ்ச்சி புகழ்ச்சி இரண்டையும் ஒன்ருகக் கருதுபவன். அதிகமாகப் பேசாதவன். கிடைத்ததைக் கொண்டு திருப்தி அடைபவன். வீடு முதலிய தான் இருக்கும் இடங்களில் அபிமானமில்லாதவன். உறுதியான உள்ளமுடையவன்; இப்படிப்பட்ட என் பக்தன் எனக்குப் பிரியன்.

**யே து தர்ம்யாம்ருதமிதம் யதோக்தம் பர்யுபாஸதே**
**ச்ரத்ததாநா: மத்பரமா: பக்தாஸ்தேzதீவ மே ப்ரியா: ॥ 20 ॥**

யார் தர்மத்தை விட்டு விலகாத அம்ருதம் போன்ற இந்த பக்தி யோகத்திலுல், கீழே கூறியபடி என்னை அடைவதே சிறந்த பயனைக் கொண்டு, சிரத்தையுடன் என்னையே உபாசிக்கிருர்களோ (என்னிடம் பக்தி செய்கிருர்களோ) அந்த பக்தர்கள் எனக்கு மிகவும் பிரியமானவர்.

பகவானிடம் பக்தி (அன்பு) செய்வதே சிறந்த பலன். இது இன்பகரமாய் அம்ருதம் போல போக்யமாயிருக்கும். பக்தியை ஊக்கத்துடன் செய்து பகவானை அடைந்த பின்பும் அந்த பக்தானுபவம் ஆனந்தமாயும் போக்யமாயுமிருக்கும் இப்படிப்பட்ட பகவத் பக்தியைச் செய்கிறவன் எனக்கு மிகவும் பிரியமானவன். அவனை

நான் மிகவும் உவக்கிறேன் என்று சொல்லி, இந்த அத்யாயத்தை முடித்துக் கொள்கிருன் கண்ணன்.

ஆக, இப்பன்னிரெண்டாம் அத்தியாயத்தில் கண்ணன், முதல் ஷட்கத்தில் சொல்லப்பட்ட கர்மயோகத்தையும், பதினோராம் அத்யாயத்தில் சொல்லப்பட்ட பக்தி யோகத்தையும் ஒரு விதமாக இணைத்து, தொகுத்துச் சொல்லி, இந்த இரண்டாம் ஷட்கத்தை பூர்த்தி செய்திருக்கிருன்.

முதல் பத்து சுலோகங்களில், கர்மயோகம், ஜ்ஞான யோகம் இவைகளைக் காட்டிலும், பக்தி யோகமே சிறந்தது; முமுக்ஷு அடையக்கூடிய மேலான மோக்ஷ பலத்தை, சுலபமாகவும், விரைவிலும் கொடுக்கக்கூடியது இந்த பக்தி யோகம் என்று கூறினன்.

இப்படிப்பட்ட பக்தி யோகத்தைச் செய்ய சக்தியற்றவர், பகவத் தியானத்தில் அப்பஸம் (பழக்கம்) செய்யட்டும் என்றும், இதையும் செய்ய முடியாதவன் பகவத் கைங்கர்யத்தில் (தொண்டுகளில்) ஈடுபட்டிருக்கட்டும் என்றும் இதையும் செய்ய முடியாதவன் இரண்டு மூன்றும் அத்யாயத்தில் சொல்லப்பட்ட கர்ம யோகத்தைச் செய்து, படிப்படியாக ஆத்ம சிந்தனம், ஆத்ம தரிசனம் பெற்று, பிறகு பகவத் தியானம் செய்யப்பழகி, பகவத் பக்தி செய்து, நல்வீடு பெறுவார்கள் என்பதையும் சொல்லி, முடிவில் தன் பக்தர்களின் ஸ்வரூப, ஸ்வபாவங்களையும் கூறி, அவர்கள் தனக்கு மிகவும் பிரியமானவர்கள் என்று சொல்லி முடித்தான்.

இனி மூன்றும் ஷட்கத்தில் கீழ் ஒன்று இரண்டு ஷட்கத்தில் சொன்னவைகளையே சர்ச்சை செய்து விமரிசிக்கிருன்.

## ஸ்ரீ ஆளவந்தார் அருளிய கீதார்த்தஸங்க்ரஹம்

**பக்தே: ச்ரைஷ்ட்யம் உபாயோக்தி :**
**அசக்த்ஸ்ய ஆத்மநிஷ்டிதா |**
**தத் ப்ரகாராஸ்த்வதிப்ரீதி :**
**பக்தே த்வாதச உச்யதே ||**

பத்தியின் மேன்மையும், அதின் உபாயத்தையும் நிரூபித்தும் அதில் சக்தியற்வர்களுக்கு ஆத்ம நிஷ்டையை உடையவனுக இருக்கையும், அதற்கு வேண்டியவைகளையும், பக்தனிடம் பகவானுக்குள்ள அதிகமான ப்ரீதியையும் இந்தப் பன்னிரண்டாம் அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே சரணம்.

பன்னிரண்டாம் அத்யாயம் (இரண்டாம் ஷட்கம்) முற்றிற்று.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# ஸ்ரீமத் பகவத் கீதை

(மூன்றும் ஷட்கம்)
(13 முதல் 18 அத்யாயங்கள்)

நியாய வேதாந்த வித்வாந்
ஸ்ரீ உ. வே. காரப்பங்காடு வேங்கடாசாரியஸ்வாமியின்
(உபந்யாஸத் தொகுப்பு)

தொகுப்பாசிரியர் :
ஸி. ஆர். ஸ்ரீனிவாஸய்யங்கார்
42, மேல உத்தர வீதி, ஸ்ரீரங்கம்
திருச்சி - 6.

செந்தமிழ் வேதியர் :
ஸ்ரீ உ. வே. குமாரவாடி சே. ராமாநுஜாசாரியார்
பரிசோதித்து பதிப்பித்தது

அறநெறி பதிப்பகம் :
29/8 அபிரகாம் முதலி தெரு, மயிலாப்பூர்
சென்னை - 4

## ॥ त्रयोदशोऽध्यायः ॥

अर्जुन उवाच –

प्रकृतिं पुरुषं चैव क्षेत्रं क्षेत्रज्ञमेव च ।
एतद्वेदितुमिच्छामि ज्ञानं ज्ञेयं च केशव ॥ १ ॥

श्रीभगवानुवाच –

इदं शरीरं कौन्तेय क्षेत्रमित्यभिधीयते ।
एतद्यो वेत्ति तं प्राहुः क्षेत्रज्ञ इति तद्विदः ॥ २ ॥

क्षेत्रज्ञं चापि मां विद्धि सर्वक्षेत्रेषु भारत ।
क्षेत्रक्षेत्रज्ञयोर्ज्ञानं यत्तज्ज्ञानं मतं मम ॥ ३ ॥

तत्क्षेत्रं यच्च यादृक्च यद्विकारि यतश्च यत् ।
स च यो यत्प्रभावश्च तत्समासेन मे शृणु ॥ ४ ॥

ऋषिभिर्बहुधा गीतं छन्दोभिर्विविधैः पृथक् ।
ब्रह्मसूत्रपदैश्चैव हेतुमद्भिः सुनिश्चितैः । ५ ॥

महाभूतान्यहङ्कारो बुद्धिरव्यक्तमेव च ।
इन्द्रियाणि दशैकं च पञ्च चेन्द्रियगोचराः ॥ ६ ॥

इच्छा द्वेषः सुखं दुःखं संघातश्चेतना धृतिः ।
एतत्क्षेत्रं समासेन सविकारमुदाहृतम् ॥ ७ ॥

अमानित्वमदम्भित्वमहिंसा क्षान्तिरार्जवम् ।
आचार्योपासनं शौचं स्थैर्यमात्मविनिग्रहः ॥ ८ ॥

इन्द्रियार्थेषु वैराग्यमनहङ्कार एव च ।
जन्ममृत्युजराव्याधिदुःखदोषानुदर्शनम् ॥ ९ ॥

असक्तिरनभिष्वङ्गः पुत्रदारगृहादिषु ।
नित्यं च समचित्तत्वमिष्टानिष्टोपपत्तिषु ॥ १० ॥

मयि चानन्ययोगेन भक्तिरव्यभिचारिणी ।
विविक्तदेशसेवित्वमरतिर्जनसंसदि ॥ ११ ॥

अध्यात्मज्ञाननित्यत्वं तत्त्वज्ञानार्थदर्शनम् ।
एतज्ज्ञानमिति प्रोक्तमज्ञानं यदतोऽन्यथा ॥ १२ ॥

ज्ञेयं यत्तत्प्रवक्ष्यामि यज्ज्ञात्वामृतमश्नुते ।
अनादिमत्परं ब्रह्म न सत्तन्नासदुच्यते ॥ १३ ॥

सर्वतःपाणिपादं तत्सर्वतोऽक्षिशिरोमुखम् ।
सर्वतःश्रुतिमल्लोके सर्वमावृत्य तिष्ठति ॥ १४ ॥

सर्वेन्द्रियगुणाभासं सर्वेन्द्रियविवर्जितम् ।
असक्तं सर्वभृच्चैव निर्गुणं गुणभोक्तृ च ॥ १५ ॥

बहिरन्तश्च भूतानामचरं चरमेव च ।
सूक्ष्मत्वात्तदविज्ञेयं दूरस्थं चान्तिके च तत् ॥ १६ ॥

अविभक्तं च भूतेषु विभक्तमिव च स्थितम् ।
भूतभर्तृ च तज्ज्ञेयं ग्रसिष्णु प्रभविष्णु च ॥ १७ ॥

ज्योतिषामपि तज्ज्योतिस्तमसः परमुच्यते ।
ज्ञानं ज्ञेयं ज्ञानगम्यं हृदि सर्वस्य विष्ठितम् ॥ १८ ॥

इति क्षेत्रं तथा ज्ञानं ज्ञेयं चोक्तं समासतः ।
मद्भक्त एतद्विज्ञाय मद्भावायोपपद्यते ॥ १९ ॥

प्रकृतिं पुरुषं चैव विद्ध्यनादी उभावपि ।
विकारांश्च गुणांश्चैव विद्धि प्रकृतिसंभवान् ॥ २० ॥

कार्यकरणकर्तृत्वे हेतुः प्रकृतिरुच्यते ।
पुरुषः सुखदुःखानां भोक्तृत्वे हेतुरुच्यते ॥ २१ ॥

पुरुषः प्रकृतिस्थो हि भुङ्क्ते प्रकृतिजान्गुणान् ।
कारणं गुणसङ्गोऽस्य सदसद्योनिजन्मसु ॥ २२ ॥

उपद्रष्टानुमन्ता च भर्ता भोक्ता महेश्वरः ।
परमात्मेति चाप्युक्तो देहेऽस्मिन्पुरुषः परः ॥ २३ ॥

य एवं वेत्ति पुरुषं प्रकृतिं च गुणैः सह ।
सर्वथा वर्तमानोऽपि न स भूयोऽभिजायते ॥ २४ ॥

ध्यानेनात्मनि पश्यन्ति केचिदात्मानमात्मना ।
अन्ये सांख्येन योगेन कर्मयोगेन चापरे ॥ २५ ॥

अन्ये त्वेवमजानन्तः श्रुत्वान्येभ्य उपासते ।
तेऽपि चातितरन्त्येव मृत्युं श्रुतिपरायणाः ॥ २६ ॥

यावत्संजायते किंचित्सत्त्वं स्थावरजङ्गमम् ।
क्षेत्रक्षेत्रज्ञसंयोगात्तद्विद्धि भरतर्षभ ॥ २७ ॥

समं सर्वेषु भूतेषु तिष्ठन्तं परमेश्वरम् ।
विनश्यत्स्वविनश्यन्तं यः पश्यति स पश्यति ॥ २८ ॥

समं पश्यन्हि सर्वत्र समवस्थितमीश्वरम् ।
न हिनस्त्यात्मनात्मानं ततो याति परां गतिम् ॥ २९ ॥

प्रकृत्यैव च कर्माणि क्रियमाणानि सर्वशः ।
यः पश्यति तथात्मानमकर्तारं स पश्यति ॥ ३० ॥

यदा भूतपृथग्भावमेकस्थमनुपश्यति ।
तत एव च विस्तारं ब्रह्म संपद्यते तदा ॥ ३१ ॥

अनादित्वान्निर्गुणत्वात्परमात्मायमव्ययः ।
शरीरस्थोऽपि कौन्तेय न करोति न लिप्यते ॥ ३२ ॥

यथा सर्वगतं सौक्ष्म्यादाकाशं नोपलिप्यते ।
सर्वत्रावस्थितो देहे तथात्मा नोपलिप्यते ॥ ३३ ॥

यथा प्रकाशयत्येकः कृत्स्नं लोकमिमं रविः ।
क्षेत्रं क्षेत्री तथा कृत्स्नं प्रकाशयति भारत ॥ ३४ ॥

क्षेत्रक्षेत्रज्ञयोरेवमन्तरं ज्ञानचक्षुषा ।
भूतप्रकृतिमोक्षं च ये विदुर्यान्ति ते परम् ॥ ३५ ॥

---

## ॥ चतुर्दशोऽध्यायः ॥

श्रीभगवानुवाच –

परं भूयः प्रवक्ष्यामि ज्ञानानां ज्ञानमुत्तमम् ।
यज्ज्ञात्वा मुनयः सर्वे परां सिद्धिमितो गताः ॥ १ ॥

इदं ज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागताः ।
सर्गेऽपि नोपजायन्ते प्रलये न व्यथन्ति च ॥ २ ॥

मम योनिर्महद्ब्रह्म तस्मिन्गर्भं दधाम्यहम् ।
संभवः सर्वभूतानां ततो भवति भारत ॥ ३ ॥

सर्वयोनिषु कौन्तेय मूर्तयः संभवन्ति याः ।
तासां ब्रह्म महद्योनिरहं बीजप्रदः पिता ॥ ४ ॥

सत्त्वं रजस्तम इति गुणाः प्रकृतिसंभवाः ।
निबध्नन्ति महाबाहो देहे देहिनमव्ययम् ॥ ५ ॥

तत्र सत्त्वं निर्मलत्वात्प्रकाशकमनामयम् ।
सुखसङ्गेन बध्नाति ज्ञानसङ्गेन चानघ ॥ ६ ॥

रजो रागात्मकं विद्धि तृष्णासङ्गसमुद्भवम् ।
तन्निबध्नाति कौन्तेय कर्मसङ्गेन देहिनम् ॥ ७ ॥

तमस्त्वज्ञानजं विद्धि मोहनं सर्वदेहिनाम् ।
प्रमादालस्यनिद्राभिस्तन्निबध्नाति भारत ॥ ८ ॥

सत्त्वं सुखे संजयति रजः कर्मणि भारत ।
ज्ञानमावृत्य तु तमः प्रमादे संजयत्युत ॥ ९ ॥

रजस्तमश्चाभिभूय सत्त्वं भवति भारत ।
रजः सत्त्वं तमश्चैव तमः सत्त्वं रजस्तथा ॥ १० ॥

सर्वद्वारेषु देहेऽस्मिन्प्रकाश उपजायते ।
ज्ञानं यदा तदा विद्याद्विवृद्धं सत्त्वमित्युत ॥ ११ ॥

लोभः प्रवृत्तिरारम्भः कर्मणामशमः स्पृहा ।
रजस्येतानि जायन्ते विवृद्धे भरतर्षभ ॥ १२ ॥

अप्रकाशोऽप्रवृत्तिश्च प्रमादो मोह एव च ।
तमस्येतानि जायन्ते विवृद्धे कुरुनन्दन ॥ १३ ॥

यदा सत्त्वे प्रवृद्धे तु प्रलयं याति देहभृत् ।
तदोत्तमविदां लोकानमलान्प्रतिपद्यते ॥ १४ ॥

रजसि प्रलयं गत्वा कर्मसङ्गिषु जायते ।
तथा प्रलीनस्तमसि मूढयोनिषु जायते ॥ १५ ॥

कर्मणः सुकृतस्याहुः सात्त्विकं निर्मलं फलम् ।
रजसस्तु फलं दुःखमज्ञानं तमसः फलम् ॥ १६ ॥

सत्त्वात्संजायते ज्ञानं रजसो लोभ एव च ।
प्रमादमोहौ तमसो भवतोऽज्ञानमेव च ॥ १७ ॥

ऊर्ध्वं गच्छन्ति सत्त्वस्था मध्ये तिष्ठन्ति राजसाः ।
जघन्यगुणवृत्तस्था अधो गच्छन्ति तामसाः ॥ १८ ॥

नान्यं गुणेभ्यः कर्तारं यदा द्रष्टानुपश्यति ।
गुणेभ्यश्च परं वेत्ति मद्भावं सोऽधिगच्छति ॥ १९ ॥

गुणानेतानतीत्य त्रीन्देही देहसमुद्भवान् ।
जन्ममृत्युजरादुःखैर्विमुक्तोऽमृतमश्नुते ॥ २० ॥

अर्जुन उवाच—

कैर्लिङ्गैस्त्रीन्गुणानेतानतीतो भवति प्रभो ।
किमाचारः कथं चैतांस्त्रीन्गुणानतिवर्तते ॥ २१ ॥

**க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞயோரேவம் அந்தரம் ஜ்ஞான சக்ஷுஷா ।**
**பூத ப்ரக்ருதி மோக்ஷஞ்ச யே விதுர் யாந்திதே பரம் ॥ 34 ॥**

இவ்வாறு ஜீவாத்மா சரீரத்தை விட வேறுபட்டது என்பதை உள்ளபடி அறிந்து, அமாநித்துவம், முதலான குணங்களைப் பெற்ற வர்கள் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபட்டு, பரிசுத்த ஜீவனையை அடைகிறார்கள். மோக்ஷமடைகிறார்கள்.

சூரியன் ஆகாஸத்திலிருக்கிறான். உலக முழுவதும் தன் கிரணங்களால் பிரகாசிக்கிறான். அது போல ஜீவன் அதி நுண்ணிய தாய் அணுவாய் உடலின் இருதயத்திலிருக்கிறான். தன்னுடைய ஜ்ஞான (அறிவு) ஒளியினால் பத்த தசையில் தன் உடல் முழுவதும், மாத்திரம் பிரகாஸித்துக் கொண்டிருக்கிறான். ஆனால் முக்த தசையில், அமர உடல் பெற்று அவனுடைய ஞான ஒளி எங்கும் பிரகாசிக்கக் கூடியதாயிருக்கும்.

## ஸ்ரீ ஆளவந்தார் அருளிய கீதார்த்த ஸங்க்ரஹம்

**தேஹ ஸ்வரூபம் ஆத்மப் ராப்தி ஹேது: ஆத்ம விசோதனம்**
**பந்த ஹேது: விவேகச்ச த்ரயோதச உதீர்யதே**

உடலின் ஸ்வரூபமும் ஆத்மதரிசனம் பெற உபாயமான அமானித்வம் முதலான குணங்களும், பத்த தசை முக்த தசை இரண்டிலும் ஜீவாத்மாவின் தன்மையும், ஸம்ஸார பந்தத்திற்கு காரணமும், அதிலிருந்து விடுபட்டு பரிசுத்த ஆத்மாவை அடையும் வழியையும் இந்த பதின்மூன்றாவது அத்பாயத்தில் சொல்லப் பட்டது.

ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே சரணம் !

பதிமூன்றாம் அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீ மதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீமத் பகவத் கீதை

## பதிநான்காம் அத்தியாயம்

### அவதாரிகை

உடல், உயிர் (ஜீவன்) இவைகளின் தன்மையும், ஆத்ம தரிசனம் பெறுவதற்கான அமானித்வம் முதலான குணங்கள் ஸம்ஸார பந்த காரணம்; அதிலிருந்து ஜீவன் விடுபட்டு பரிசுத்த ஆத்மாவை அடையும் உபாயம் ஆகியவற்றை பதிமூன்றும் அத்யாயத்தில் கண்ணன் விவரித்தான்.

இனி பதிநான்காம் அத்யாயத்தில், உடலுக்கு உண்டான ஸத்வ ரஜஸ் தமஸ் குணங்களடியாகச் செய்யப்படும், கருமாக்களின் பலனை அனுபவிக்க, ஜீவன் பல பிறவிகள் எடுக்கிறுன் என்பதையும், இப்படி ஜந்ம பரம்பரை ஏற்படுவதைத் தவிர்த்து, மோக்ஷம் பெறும் உபாயத்தையும் கூறுகிறுன்.

மோக்ஷம் பெறுவதற்குத் தடையான முதல் விரோதி நம் உடல், அதைப் பற்றிய அறிவு நமக்கு வேண்டும். வியாதியை அறிந்தால் தான், தக்க மருந்து கொடுக்க முடியும். சரீரமே ஒரு வியாதி, பகவானை அடையவிடாமல் நம்மை இது தடுக்கின்றது. இதை அறிய வேண்டி, உடலைப் பற்றி, விரிவாக கீழ் அத்யாயத்தில் சொல்லப்பட்டது. அதைப் போக்கும் வழியை இந்த அத்யாயத்தில் கண்ணன் கூறுகிறுன்.

**பகவான் உவாச:** கண்ணன் கூறியது.

**பரம் பூய: ப்ரவக்ஷ்யாமி ஜ்ஞானுநாம் ஜ்ஞானம் உத்தமம் |**
**யத் ஜ்ஞாத்வா முநய: ஸர்வே பராம் ஸித்திம் இதோ கதா: ॥ 1**

இது வரையில் சொன்ன, ஜ்ஞானத்தை விட மேலான அறிவை நான் உனக்கு சொல்லப்போகிறேன். இந்த சிறந்த ஞானத்தைக் கொண்டு ரிஷிகள் எல்லோரும் உயர்ந்த கதியை அடைகின்றனர் (உத்தமம் உயர்ந்தது;—பரம்—மேலானது).

இதம் ஜ்ஞானம் உபாச்ரித்ய மம ஸாதர்ம்யம் ஆகதா: |
ஸர்கேऽபி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யதந்திச ॥ 2

இந்த ஜ்ஞானத்தினால் எனக்கு சமமான நிலையைப் பெறுகிறார்கள். இவர்கள் சிருஷ்டியில் பிறவியும், ப்ரளயத்தில் அழிவும் அடைவதில்லை.

இந்த ஜ்ஞானத்தைப் பெற்றால் பக்திக்குத் தடையான பாபம் போகும்; என்னை பக்தியுடன் த்யானம் செய்து, மோக்ஷம் பெறலாம். பரமபதத்தை அடைந்த முக்த ஜீவன் பகவானை என்னுடன் பலவகையிலும் ஸாம்யம் பெறுகிறான் என்கிறான்.

மம ஸாதர்ம்யம் ஆகதா : என்பதினால் பகவானுடன் ஸாம்யம் பெறுகிறார்கள் என்பதே பொருளன்றி, பகவானாகவே ஆகிவிடுகிறான் என்பது பொருளல்ல ; இரண்டு பொருள்களுக்கிடையேதான் ஸாம்யம் (அது இதற்கு சமம்) என்று சொல்ல முடியும். ஆதலால் முக்தி தசையிலும் ஜீவன் தனிப்பட்ட தத்வமே என்பது தேறுகிறது. இங்கு ஆகதா: என்று பன்மையில் கூறியிருப்பதனால், மோக்ஷ தசையிலும் ஜீவாத்மாக்கள் பல, ஒன்றல்ல என்பது விளங்குகிறது.

மம யோநிர் மஹத் ப்ரஹ்ம தஸ்மிந் கர்ப்பம் ததாம்யஹம் |
ஸம்பவ: ஸர்வபூதானாம் ததோ பவதி பாரத ॥ 3

உலக உற்பத்திக்குக் காரணமான பெரிய ப்ரஹ்மம் எனப்படும் ப்ரக்ருதி என்னுடையது. உயிர்களை (ஜீவனை) அதில் நான் சேர்க்கிறேன். அதனால் எல்லாப் பிராணிகளும் உண்டாகின்றன.

ஏழாம் அத்தியாயத்தில், சொன்ன அபரா ப்ரக்ருதியான ஜீவ சமூகத்தையும் மூல ப்ரக்ருதியிலிருந்து படைத்து, அவைகளை ஒன்று சேர்த்து உலகைப் படைப்பவன் தானே என்பதை கண்ணன் இங்கு கூறுகிறான்.

ப்ரஹ்மம் என்கிற பதம், பகவானையும் குறிக்கும், நான்முக ப்ரஹ்மாவையும் சொல்லும், சில இடங்களில் ஜீவனையும் அசித்தையும் கூடச் சொல்லும். இங்கே அசித்தான ப்ரக்ருதியைச் சொல்லுகிறது.

ஸர்வ யோநிஷு கௌந்தேய மூர்த்தய: ஸம்பவந்தி யா: |
தாஸாம் ப்ரஹ்ம மஹத் யோநிர் அஹம் பீஜப்ரத: பிதா ॥ 4

அர்ஜுன! தேவ மனித திர்யக் ஸ்தாவர இனங்கள் அனைத்தும் உண்டாக இந்தப் பெரிய ப்ரக்ருதியே காரணம். நான் அவைகளில் ஜீவனை (விதையை) சேர்ப்பிக்கிறேன். அவ்வகையில் தகப்பனு கிறேன்.

ஸத்வம் ரஜஸ்தம இதி குணா: ப்ரக்ருதி ஸம்பவா : |
நிபத்நந்தி மஹாபாஹோ தேஹே தேஹிநம் அவ்யயம் || 5

அர்ஜுன! ப்ரக்ருதியிலிருந்து உண்டாகிற ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்கள் நித்யனான ஜீவனை சரீரத்தில் இணைத்து வைக்கின்றன.

உலகம் யாவையும் ப்ரக்ருதியினுலானவை. அதில் ஜீவனைச் சேர்ப்பிக்கும் தந்தை பகவான். உடலில் சேர்ப்பிக்கப்பட்ட, அந்த ஆத்மாவை, உடலுக்குண்டான முக்குணங்கள் கட்டுப் படுத்தி வளர்க்கின்றன.

இனி அக் குணங்களின் தன்மையையும், அவை ஜீவனைக் கட்டுப் படுத்தும் விதத்தையும் விவரிக்கிறான்.

தத்ர ஸத்வம் நிர்மலத்வாத் ப்ரகாசம் அநாமயம் |
ஸுக ஸங்கேந பத்நாதி ஜ்ஞான ஸங்கேந சாநக || 6

ரஜோ ராகாத்மகம் வித்தி த்ருஷ்ணாஸங்க ஸமுத்பவம் |
தந்நிபத்நாதி கௌந்தேய கர்ம ஸங்கேந தேஹினம் || 7

தமஸ் த்வ ஜ்ஞானஜம் வித்தி மோஹனம் ஸர்வ தேஹினாம் |
ப்ரமாதம் ஆலஸ்யம் நித்ராபி: தந்நிபத்நாதி பாரத || 8

குற்ற மற்ற அர்ஜுன! அவைகளில் ஸத்வகுணம் தோஷமற்று ஒளி பொருந்தியிருக்கும். நோயற்ற வாழ்வுக்கு இது காரணம். அறிவு, ஆரோக்யம் இவற்றில் ஜீவாத்மாவை இது ஈடு படுத்து கிறது.

ரஜோ குணம் ஆசை, முயற்சி இவைகளை உண்டு பண்ணு கிறது; இது அவனை கர்மங்களிலும் விஷயப் பற்றுகளிலும் மூட்டுகிறது.

தமோகுணம் அறிவின்மையையும் மயக்கத்தையும் உண்டாக் குகிறது. இது அசட்டை, சோம்பல், உறக்கம், மறதி இவைகளில் அவனைக் கட்டுப் படுத்துகிறது.

இந்த உலகில் இருக்கும் வரையில் இம்மூன்று குணங்களும் கலசியே யிருக்கும். முக்தி தசையில் கலப்பற்ற ஸத்வம் இருக்கும். ஒரு கயிற்றைப் பார்த்து இது ஒரு பொருள் என்று அறிவது ஸத்வ

குணத்திஞல் தான். அதைப் பாம்பு என்று ப்ரமிக்கிறோம். இது தமோ குணத்தின் காரியம். உண்மை அறிவைப் பெற நாம் ஸத்வ குணத்தை அதிகப்படுத்திக் கொள்ள வேண்டும். தூய உணவே ஸத்வ குணத்தை உண்டாக்கும்; நோய்களேயும் போக்கும். ரிஷிகள் ஆஹாரத்திஞலேயே ஸத்வ குணம் பெற்று, நல்ல ஜ்ஞானத்தையும் உடல் நலத்தையும் பெற்று இருந்தார்கள்.

ஜ்ஞானத்திஞல் கட்டுப்படுத்துகிறது என்ருல் என்ன? ஜ்ஞானம் பெறுவதிலேயே நோக்காக இருத்தல்; இதுவும் கூடாது; ஞானம் பெறுவது முக்கியமே. அதற்கேற்ப செயலும் இருக்க வேண்டும்.

ஒன்றை அனுபவித்தால் அதில் வாஸனே, ருசி உண்டாகிறது. இது தான் விதை, பிறவி எடுத்ததும் இந்த விதை முளேக்கிறது. இதுதான் ராகம் (ஆசை). அதஞல் விஷயங்களில் சேர்க்கை ஸங்கம்; சேர்க்கையிஞல் திருஷ்ணே (காமம்) உண்டாகிறது. ஸ்திரீ புருஷர்களின் சேர்க்கை, ராகம், காமம் எனப்படும். விஷயங்களில் ஆசை த்ருஷ்ணே; புத்திரர், வீடு, தனம் இவைகளின் தொடர்பு ஸங்கம்.

இந்த ராகம், ஸங்கம், த்ருஷ்ணே இவைகளிஞல் நம்மிடம் பல செயல்கள் உண்டாகின்றன. இவையே கர்மா என்பது இந்த கர்ம பலன்களே அனுபவிக்க, பல பிறவிகள் எடுக்க நேருகிறது.

இக்குணங்களின் தன்மைகளே அறிந்து பகவானே அடைய விரும்பும் முமுக்ஷுவுக்கு ஸத்வ குணத்திஞல், உண்டாகும் ஜ்ஞானம் வேண்டும்; ஆஞல் அதுவே பயன் என்று இருத்தல் கூடாது; அதற்கேற்ப ரஜோ குணத்திஞல் உண்டாகும் செயல்களும் வேண்டும்; ஆஞல் செய்கையே முக்ய பிரயோசனமாக கருதுதல் கூடாது; அது விணேப்பயனில் கொண்டுபோய்ப் சேர்ப்பிக்கும். பகவானின் உகப்புக்காகவே அவனின் எந்தச்செயலும் இருக்க வேண்டும்; தமோ குணத்திஞலான தூக்கமும் ஓய்வும் தேவையே; ஆஞல் எப்பொழுதும் உறக்கத்திலும் சோம்பியும் பொழுது போக்குதலும் கூடாது.

ஸத்வம் ஸுகே ஸஞ்ஜயதி ரஜ: கர்மணி பாரத ।
ஜ்ஞானம் ஆவ்ருத்யது தம: ப்ரமாதே ஸஞ்ஜயத்யுத ॥ 9

அர்ஜுனா! ஸத்வ குணம் இன்பத்திலும், ரஜோ குணம் அதைப் பெறுகிற முயற்சியிலும் பற்றுதலே உண்டாக்கும் தமோ குணம் உண்மை அறிவைப் போக்கி அஜாக்ரதை, சோம்பல், தூக்கம் இவைகளில் சேர்ப்பிக்கும்.

**ரஜஸ் தமஸ்சாபி பூய ஸத்வம் பவதி பாரத |**
**ரஜஸ் ஸத்வம் தமச்சைவ தமஸ் ஸத்வம் ரஜஸ்ததா || 10**

*ஒவ்வொரு குணமும் மற்ற இரண்டையும் அடக்கி, தான் மேலோங்க முயல்கிறது என்கிறான்.*

*ரஜஸ்ஸையும் தமஸ்ஸையும் அடக்கி ஸத்வ குணம் மேலோங்க முயலும். ரஜஸ், ஸத்வத்தை அடக்க தமஸ் எழுச்சியுறும்; தமஸ், ஸத்வம் இரண்டையும் அடக்கி ரஜஸ் தலைதூக்கும்.*

*இவையெல்லாம் ஒருவன் உட்கொள்ளும் உணவைப் பற்றியே யிருக்கும்; ஸத்வ குணம் மிகக் கூடிய உணவையே நாம் அருந்த வேண்டும்; பகவானுக்கு அர்ப்பணம் செய்யா உணவைக் கண்ட கண்ட இடங்களில் புசித்தல் கூடாது. பூண்டு, வெங்காயம் போன்றவை அறவே கூடாது. புளி காரம் அதிகம் கூடாது. நெய் சர்க்கரை இவை ஸத்வ குணத்தை அதிகப்படுத்தும்.*

**ஸர்வத்வாரேஷு தேஹேऽஸ்மித் ப்ரகாஸ உபஜாயதே |**
**ஜ்ஞானம் யதா ததா வித்யாத் விவ்ருத்தம் ஸத்வம் இத்யுத || 11**

*உடலில் உள்ள எல்லாப் புலன்களிலும் அறிவு ஒளிர்வதாயின், ஸத்வ குணம் மேலிட்டிருப்பதை அறியலாம். (அதாவது கண் முதலான புலன்களினால் பொருள்கள் பற்றிய உண்மை அறிவு ஏற்பட்டால், ஸத்வ குணம் மேலிட்டிருப்பதை உணரலாம்.*

**லோப: ப்ரவ்ருத்திராரம்ப: கர்மணும் அசம: ஸ்ப்ருஹா |**
**ரஜஸ் யேதாநி ஜாயந்தே விவ்ருத்தே பரதர்ஷப || 12**

*அர்ஜுன! பேராசை, மிகுந்த முயற்சி, அமைதியின்மை, விஷயப் பற்றுதல் இவை யெல்லாம் ரஜோ குணம் மேலிட்டிருக்கும் போது உண்டாகின்றன. (லோபம் - பொருளின் ஆசையினால் அதை பிறருக்குக் கொடாமை; அசம்—புலன்களுக்கு ஓயாமல் வேலை கொடுத்தல்.)*

**அப்ரகாசோऽ ப்ரவர்த்திஸ்ச ப்ரமாதோ மோஹ ஏவச |**
**தமஸ்யேதாநி ஜாயந்தே விவ்ருத்தே குரு நந்தன || 13**

*அர்ஜுன! விவேகமின்மை, முயற்சியின்மை, அஜாக்ரதை, மோஹம் இவைகள் தமோ குணம் மேலிட்டிருந்தால் ஏற்படும் விளைவுகள்.*

**யதா ஸத்வே ப்ரவ்ருத்தே து ப்ரளயம் யாதி, தேஹப்ருத் |**
**ததோத்மவிதாம் லோகாந் அமலாந் ப்ரதிபத்யதே || 14**

சரீரம் பெற்றிருக்கும் இவன் ஸத்வ குணம் மேலோங்கியிருக்கும்போது மரணமடைந்தால் ஜ்ஞானவான்களான மஹான்கள் குலத்தில் பிறக்கிறான். (ஆதலால் மற்ற காலங்களில் எப்படியிருந்தாலும், மரணத்தருவாயில் ஸத்வ குணம் மேலோங்கியிருக்கச் செய்ய வேண்டும். பகவந் நாமாக்களைச் சொல்லுதல், அவனையே நினைத்திருத்தல், ஸத் சரித்திரத்தைக் கேட்டல் இப்படியிருக்க வேண்டும். மரண காலத்தில் உடல் பூமியிலிருக்க வேண்டும்; படுக்கையில் இருத்தல் கூடாது; இப்படியிருந்தால் ஸத்வ குணம் மேலிட்டு நற்கதியைப் பெறுவான்).

ரஜஸி ப்ரளயம் கத்வா கர்ம ஸங்கிஷு ஜாயதே |
ததா ப்ரலீநஸ் தமஸி மூடயோநிஷு ஜாயதே ‖ 15

மரணம் அடையும்போது ரஜோ குணம் மேலிட்டிருப்பவன், பயனை விரும்பி செயலில் முனையும் குலத்தில் பிறக்கிறான்; தமோ குணம் மேலிட்டிருக்கும் போது இறப்பவன் மூடர்களுடைய இனத்தில் பிறக்கிறான்.

கர்மண: ஸுக்ருதஸ்யாஹு: ஸாத்விகம் நிர்மலம் பலம் |
ரஜஸஸ்து பலம் துக்கம் அஜ்ஞானம் தமஸ: பலம் ‖ 16

ஒருவன் இறக்கும்போது ஸத்வ குணம் மேலிட்டிருந்தால், பலன்களில் இச்சையில்லாமல் கர்மாக்களைச் செய்யும் மஹான்கள் குலத்தில் பிறந்து, கர்ம யோகம் செய்து படிப்படியாக ஆத்ம நன்மையைப் பெறுகிறான்.

ரஜோ குணம் மேலிட்டிருக்கையில் இறப்பவன் பலனுக்காக வினைகளைப் புரிந்து அதன் பலன்களை அனுபவிக்க மேன் மேலும் பிறவிகள் எடுத்து துன்பத்திலேயே உழல்கிறான்.

தமோ குணம் மேலிட்டிருக்கையில் இறப்பவன் தாழ்ந்த மூடர்கள் குலத்தில் பிறந்து, சரியான அறிவு இல்லாமல் ஆத்ம விநாசத்தையே அடைகிறான்.

ஸத்வாத்ஸஞ்ஜாயதே ஜ்ஞானம் ரஜஸோ லோப யேவ ச |
ப்ரமாத மோஹௌ தமஸோ பவதோऽஜ்ஞானமேவ ச ‖ 17

ஸத்வ குணத்தினால் நல் அறிவு; ரஜஸ்ஸினால்; பேராசை; தமஸ்ஸினால் அஜாக்ரதை, மோஹம், அறிவின்மை இவை உண்டாகின்றன.

நல்லறிவு பெற்று பகவத் பக்தி செய்து ஆத்ம நன்மையை அடைய ஸத்வகுணம் வேண்டும். ஸத்வ குணம் தூய்மையான ஆஹாரத்தைப் புசிப்பதனுல் உண்டாகும். சுத்த ஆஹாரம் பகவ தாராதனம் போன்ற நற்செயலில் உபயோகப்பட்ட ஆஹாரமே யாகும். ஆகலால் பலனில் இச்சையில்லாமல் நல்ல கர்மாக்களைச் செய்ய வேண்டும்.

ஊர்த்வம் கச்சந்தி ஸத்வஸ்தா மத்யே திஷ்டந்தி ராஜஸா। |
ஜகந்த்யகுணவ்ருத்திஸ்த்தா அதோ கச்சந்தி தாமஸா: ‖ 18

ஸத்வ குணமுள்ளவர் மேலே ஏறுகிருர்கள். படிப்படியாய் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபட மோக்ஷம் அடைவர். ரஜோ குணம் உள்ளவர் சுவர்கம் முதலான பலன்களைக் கருதி கர்மாக்களை செய்து, பல பிறவிகள் எடுத்து இன்ப துன்பங்களில் உழல்கிருர்கள் தமோ குணமுள்ளவர் அறிவில்லாத கீழ்க்குலத்தில் பிறந்து, கெட்ட செயல்களில் சிக்கி கீழ் நோக்கி, மிருகம், பசு, பறவை, மரம், செடி களாகப் பிறந்து துன்பத்தில் அழுந்துகிருர்கள்.

நாந்யம் குணேப்ய: கர்த்தாரம் யதா த்ரஷ்டாநு பச்யதி |
குணேப்யஸ்ச பரம் வேத்தி மத் பாவம் ஸோ அதிகச்சதி ‖ 19

இப்படி எல்லாச் செயல்களுக்கும் இம் மூன்று குணங்களே காரணம் என்பதை அறிந்து, இவன் உடலைக் காட்டிலும், வேறு பட்ட தத்வம் என்பதை உள்ளபடி தெரிந்து கொண்டவன் என் ஸாம்யத்தை அடைகிருன்.

அறிவுள்ள ஒருவன், எல்லாச் செயல்களுக்கும் ஸத்வ, ரஜஸ் தமோ குணங்களே காரணம்; இவன் காரணமில்லை என்பதை அறிந்தால், அவன் என் ஸாம்யத்தைப் பெறுகிருன். அதாவது மோக்ஷமடைகிருன்.

குணுந் ஏதாந் அதீத்ய த்ரீந் தேஹீ தேஹ ஸமுத்பவாந் |
ஜந்ம ம்ருத்யு ஜராது:கைர் விமுக்தோZம்ர்தமஸ்நுதே ‖ 20

சரீர சம்பந்தம் பெற்ற இவன், உடலுக்குண்டான இம் மூன்று குணங்களையும் கடந்து, பிறப்பு, இறப்பு, பிணி, மூப்புகள் அற்று துன்பங்களிலிருந்து விடுபட்டவனுய், நித்யனுன ஆத்மானுபவத் தைப் பெறுகிருன். இதுவே தன் ஸாம்யத்தை அடைகிருன் என்று மூன் சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

அர்ஜுன உவாச : அர்ஜுனன் கூறியது.

கைர்லிங்கை: த்ரீந் குணுந் ஏதாந் அதீதோ பவதி ப்ரபோ |
கிமாசார: கதஞ்சைதாம் ஸ்திரீந்குணுந் அதிவர்த்ததே ‖ 21 ‖

ப்ரபோ க்ருஷ்ணா ! இந்த முக்குணங்களைக் கடந்தவனின் அடையாளம் யாது ? அவன் ஸ்வரூப ஸ்வபாவங்கள் எத்தகையது ? இக்குணங்களை அவன் கடப்பது எப்படி? என்பது அர்ஜுனன் கேள்வி.

ஸ்ரீ பகவான் உவாச—கண்ணனின் பதில்.

ப்ரகாசஞ்ச ப்ரவர்த்திஞ்ச மோஹமேவச பாண்டவ |
ந த்வேஷ்டி ஸம்ப்ரவர்த்தாநி ந விவ்ருத்தாநி காங்க்ஷதி ॥ 22 ॥

பாண்டவ ! ஸத்வத்தின் பயன் அறிவு; ரஜஸ்ஸின் காரியம் செயல், தமஸ்ஸின் விளைவு விபரீத ஜ்ஞானம், மயக்கம். இவைகள் வந்த போது அதை வெறுப்பதுமில்லை, அதில் களிப்பதுமில்லை. தான் விரும்புவது கிடைக்காவிடில் அதற்கு வருந்துவதுமில்லை.

இவன் தன் ஆத்மானுபவத்திலேயே ஊன்றியிருப்பான்.

உதாஸீனத்வம் ஆஸீநோ குணைர் யோ ந விசால்யதே |
குணா வர்தந்த இத்யேவ யோ௨வதிஷ்ட்டதி நேங்கதே ॥ 23

அவைகளின் அவன் உதாஸீனனாயிருப்பான்; உடலின் குணங்கள் தம் செயல்களைச் செய்து போருகின்றன; தான் ஒன்றும் செய்யவில்லை என்று நினைத்திருப்பான்.

ஸமதுக்க ஸுக: ஸ்வஸ்த்த: ஸமலோஷ்டாச்ம காஞ்சந: |
துல்ய ப்ரிய அப்ரியோ தீரஸ் துல்ய நிந்தாத் மஸ்துதி: ॥ 24
மாந பமாநயோ ஸ்துல்ய; துல்யோ மித்ராரிபக்ஷயோ: |
ஸர்வாரம்ப பரித்யாகி குணாதீதஸ் ஸஉச்யதே ॥ 25

ஆத்ம சிந்தனத்திலேயே நிலை பெற்று, மற்ற இன்ப துன்பங்கள், இஷ்டம். அநிஷ்டம், இகழ்ச்சி, புகழ்ச்சி இவைகளை சமமாகக் கருதுபவன் சரீர ஆத்ம விவேகத்துடன், மண் கல், பொன் இவைகளைச் சமமாக நினைத்திருப்பான்.

இன்னும் இவன் மான அவமானத்தை நிகராகக் கொள்பவன். நண்பனிடமும் பகைவனிடமும் ஒரே பாங்காக இருப்பான்; தன் நலத்திற்கென்று ஒரு செயலையும் இவன் செய்யமாட்டான். இப்படி உள்ளவனே ஸத்வ ரஜஸ் தமஸ்ஸான முக்குணங்களையும் தாண்டியவனாகிறான்.

மாஞ்ச யோ௨வ்யபிசாரேண பக்தியோகேன ஸேவதே |
ஸகுணாந் ஸமதீத்யைதாந் ப்ரஹ்மபூயாய கல்பதே ॥ 26

வேறொரு இடத்திலும் செலுத்தாத பக்தியுடன் என்னை ஒருவனையே எவன் உபாஸிக்கிறானோ, அவன் முக் குணங்களைக் கடந்த ப்ரஹ்மத்திற்கு ஸமான மான பரிசுத்த ஜீவனை அடைகிறான்.

**ப்ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்ட்டா அஹம் அம்ருதஸ் யாவ்ய யஸ்ய ச |**
**சாஸ்வதஸ்ய ச தர்மஸ்ய ஸுகஸ்ய ஐகாந்தி கஸ்ய ச ॥ 27**

நானே அழியாத பரிசுத்த ஜீவாத்ம அனுபவத்தையும், நிலையான அறத்தின் விளைவான ஐச்வர்த்தையும் பிரஹ்மானுபவமான மோக்ஷத்தையும் கொடுப்பவன். ஆதலால், என் ஒருவனிடமே அநந்யபக்தியை, முக் குணங்களைக் கடந்தவன் செய்கிறான்.

நானே புருஷோத்தமன், எல்லாப் பயன்களையும் வழங்குபவன் வேண்டிற்றெல்லாம் தருபவன், "பலம் அதஉப பத்தே:" என்கிற சூத்திரத்தின் பொருளைச் சொல்லி, இந்த அத்யாயத்தைப் பூர்த்தி செய்து கொள்கிறான் கண்ணன்.

## ஸ்ரீ ஆளவந்தார் அருளிய கீதா ஸங்க்ரஹம்

**குணபந்த விதா தேஷாம் கர்த்ருத்வம் தந்நிவர்த்தநம் |**
**கதித்ரய ஸ்வமூலத்வம் சதுர்தச உதீர்யதே ॥**

ஸத்வ ரஜஸ் தமோ குணங்கள் ஸம்ஸாரத்தை உண்டாக்கும் விதமும், கர்த்ருத்வம் அக் குணங்களுக்கே உள்ளது; ஜீவனுக்கில்லை என்பதும் அக்குணங்களைக் கடக்கும் வழியும், மூன்று வித பலன்களைப் பெறுவதற்கு தானே உபாயம் என்பதும் இந்த பதினான்காம் அத்யாயத்தில் சொல்லப்பட்டது.

ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே சரணம்!

பதினான்காம் அத்யாயம் முற்றிற்று



ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# ஸ்ரீமத் பகவத் கீதை

## பதினைந்தாம் அத்தியாயம்

ஸ்ரீ கிருஷ்ண பகவான் முதல் பன்னிரண்டு அத்தியாயங்களில் சொன்னவைகளையே, மறுபடியும் விவரித்து பதின்மூன்றும் அத்தியாயம் முதல் சொல்லி வருகிறான்.

பதின்மூன்றும் அத்தியாயத்தில் சரீரம் ஆத்மா இவைகளின் ஸ்வரூப ஸ்வபாவங்களைக் கூறினான்.

பதினான்காம் அத்தியாயத்தில் சரீரத்திற்கு உண்டான ஸத்வ ரஜஸ் தமோ குணங்களினாலேயே எல்லாச் செயல்களும் நடைபெறுகின்றன; அக்குணங்களே ஜீவனை அவன் சரீரத்தில் கட்டிவைக்கின்றன என்று கூறி, அவைகளைக் கடப்பது எவ்விதம்? அப்படி அதைத் தாண்டினவன் ஸ்வரூப ஸ்வபாவங்கள் என்ன என்பதையும் சொல்லி, ஸர்வ பலன்களையும் கொடுக்கும் புருஷோத்தமனை தன்னிடமே அவன் பக்தி செய்து பரிசுத்த ஆத்மாவை அடைவான் என்றான்.

இனி பதினைந்தாம் அத்தியாயத்தில் க்ஷரம், அக்ஷரம் எனச் சொல்லப்படும் அசித், பத்த ஜீவன், முக்தாத்மா இவைகளைக் காட்டிலும் தானே உயர்ந்தவன்; அவைகளுக்கெல்லாம் தானே ஆத்மாவாய் அவைகள் தனக்குச் சரீரமாயுள்ளவை; தானே எல்லா விதத்திலும் உயர்ந்தவனாகையால் புருஷோத்தமன் என்று கூறி "புருஷோத்தம வித்ய"வை இங்கு உபதேசிக்கிறான்.

ஸ்ரீ பகவான் உவாச - கண்ணன் கூறியது:—

ஊர்த்வ மூலம் அதச்சாகம் அஸ்வத்தம் ப்ராஹுர் அவ்யயம்
சந்தாம்ஸி யஸ்ய பர்ணாநி யஸ்தம் வேத ஸ வேதவித் — 1

ஸம்ஸாரத்தை மேலே வேர்கள், கீழே கிளைகள் உள்ள ஓர் அரச மரம் போன்றது என்பர்; வேதங்கள் அதன் இலைகள் இதை அறிபவனே வேதத்தை அறிந்தவனாகிறான்.

*நைமித்திக ச்ருஷ்டியில் இவ்வுலகமெல்லாம் மேலே சத்ய லோகத்திலிருக்கும் நான்முக ப்ரஹ்மாவினால் படைக்கப்படுகிறது. ஜகத்திற்கு இந்த ப்ரஹ்மாவே காரணமாயிருப்பதினால், வேர் மேலே உள்ளது என்கிறான். பூமியில் ஸம்ஸாரம் படர்கிறதாகையினால், கீழே கிளைகளும் இலைகளும் ச்ருதியில் சொல்லப்பட்ட காம்ய கர்மாக்களே இந்த மரத்தின் கிளைகள்; அதனால் பிறவியும் ஸம்ஸார பந்தமும் வளர்கிறது; இதை அறிந்தவனே வேதவித்து; வேதத்தை அறிந்தவன்.*

**அதச் சோர்த்வஞ்ச ப்ரஸ்ருதாஸ் தஸ்ய சாகா :**
**குணப்ரவ்ருத்தா விஷயப்ரவாளா ।**
**அதச்ச மூலாத் யநுஸந்ததாநி**
**கர்மாநு பந்தீநி மனுஷ்யலோகே 2**

*அந்த மரத்தின் கிளைக்ள் ஸத்வ ரஜஸ் தமோ குணங்களால் செழிப்புற்று, அந்த குணங்களால் உண்டாகும் விஷயங்களால் தளிர்விட்டு, கீழும் மேலும் படர்கின்றன.*

*வினைப்பயனால் ராகத்வேஷமான வேர்கள் கீழே பூமியில் படர்கின்றன.*

*தேவ மனித பசு பறவைகளான மரத்தின் கிளைகள் அவரவர் கர்மானுகுணமாக சில மேல் நோக்கியும் பிரிந்து போகின்றன. குணங்களால் உண்டாகும் விஷயானுபவம் அக்கிளைகளில் உண்டாகும் தளிர்கள்.*

*ப்ரஹ்ம லோகத்தில் ஆணிவேர் உடையதாகவும், தேவ மனித லோகங்களில் சல்லிவேர் உடையதாகவும் இந்த மரம் இருக்கிறது. அவைகள் செய்யும் கர்மங்களினால் வேர் ஊன்றி ஸம்ஸாரத்தில் கட்டுப்படுத்தப்படுகிறது.*

**நரூபமஸ்யேஹ ததோபலப்யதே**
**நாந்தோ நச ஆதிர் நச ஸம்ப்ரதிஷ்டா**
**அச்வத்தமேநம் ஸுவிரூட மூலம்**
**அஸங்கசஸ்த்ரேண த்ருடேந சித்வா 3**
**தத ։ பதம் தத் பரிமார்கிதவ்யம்**
**யஸ்மிங்கதா ந நிவர்தந்திபூய :**
**தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே**
**யத ։ ப்ரவருத்தி: ப்ரஸ்ருதா புராணி 4**

இந்த ஸம்ஸாரமான மரத்தின் வடிவம் அதன் முடிவு, காரணம் அதன் ஆதாரம் பற்றி இவ்வுலகிலுள்ளவர் அறிகிறதில்லை. ஒன்றாகவும் பலவாகவும் முளைத்திருக்கும் வேர்களுடைய இம் மரத்தை உறுதியான விஷயப் பற்றுகள் இல்லாமை என்கிற கத்தியினால் வெட்டித் தள்ளவேண்டும்.

விஷயப் பற்று அற்றதினால் கிடைக்கக் கூடிய மறுபிறவியில்லா மோக்ஷத்தை நாடவேண்டும்; இவற்றுக்கு ஆதி காரணனான பரம புருஷனையே சரணம் பற்ற வேண்டும். எந்த பகவானால் இந்த விஷயப்பற்று உண்டாகிறதோ, அவனையே பற்றிக்கொண்டு, விஷயப்பற்றைப் போக்கிக் கொள்ளவேண்டும்.

சம்சாரமான மரத்திற்கு நான்முக ப்ரஹ்மா நைமித்திக காரணம். ஆகையால் சத்ய லோகத்தில் வேர் ஊன்றியிருக்கிறது எனச் சொல்லப்பட்டது; அங்கிருந்து கிழ்நோக்கி வந்து தேவ மனித உலகில், தேவ மனித பசு பக்ஷிகளாய், பல கிளைகளைக் கொண்டு, விஷயங்களாகவும், புண்ய பாப கர்மங்களாகவும் விழுதுகள் விட்டு பூமியில் ஊன்றி வேர் பற்றி, மறுபடியும் மேலே வளர்கிறது. இப்படி மேலும் கீழுமாகப் பல கிளைகள் உண்டாகின்றன.

இப்படிப்பட்ட மரத்தின் வடிவத்தையோ அது உண்டாகும் காரணத்தையோ, அதன் ஆதாரத்தையோ, அது எப்படி அழிவை அடைகிறது என்பதையோ இவ்வுலகில் உள்ளவர்கள் அறிவதில்லை. நான் மனிதன், இன்னாரின் புதல்வன், இவை என் சொத்து, நான் இவைகளை அனுபவிக்கிறேன் என்று அறிகிறார்களே ஒழிய, இந்த சரீரம் ப்ரக்ருதியினால உண்டானது, ஸத்வ ரஜஸ் தமஸ்ஸான முக்குணங்களினால் ஜீவன் இதில் கட்டுப்படுத்தப் பட்டிருக்கிறான். இதற்குக் காரணம் ஆத்மாவல்லாத சரீரத்தில், ஆத்ம புத்தியும், அஜ்ஞானமும்தான் என்பதை அவன் அறிகிறதில்லை. இத்தகைய அஜ்ஞானமும் விபரீதஜ்ஞானமுமே ஸம்ஸாரத்திற்கு ஆதாரம்.

இப்படி பல வேர்களினால் கட்டுண்டிருக்கும் ஸம்ஸாரமான மரத்தை, விஷயங்களில் ஆசையின்மையாகிற வைராக்கியம் என்கிற கத்தியினால் வெட்டித் தள்ளவேண்டும். "அற்றது பற்று எனில் உற்றது வீடு" என்கிறார் நம்மாழ்வார்.

வெகு காலமாயுள்ள விஷயத்தின் ஆசை எப்படி விலகும்?

எந்த பகவானுலே, இந்த விஷயப்பற்று நமக்கு உண்டாக்கப்பட்டிருக்கிறதோ அந்த பரம புருஷனையே சரணம் பற்றினுல், இந்த விஷயப்பற்று தானே விலகிவிடும். இதை தைவீஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா மாமேவ யேப்ரபத்யந்தே மாயா மேதாம் தரந்திதே" என்று கண்ணன் 7 அத். 14ம் சுலோகத்தில் கூறியுள்ளான்.

நிர்மாந மோஹா : ஜிதஸங்க தோஷா :
அத்யாத்ம நித்யா : விநிவ்ருத்த காமா :
த்வந்த்வைர் விமுக்தா : ஸுகது:க்க ஸமஜ்ஞை :
கச்சந்தியமூடா : பதம் அவ்யயம் தத்—5

அஹங்கார மமகாரமும் அஜ்ஞானமும் நீங்கினவரே விஷயப்பற்று அற்றவர்; அவர்களே, பரமாத்மஜ்ஞான நிஷ்டர்; ஆசையை வென்றவர், இன்ப துன்பங்களைக் கடந்தவர், தெளிவான ஜ்ஞானமுள்ளவர்; இப்படிப்பட்டவர்கள் பரிசுத்த ஜீவாத்ம தர்சனம் பெறுகிறார்கள்.

மேலே கூறியபடி என்னைச் சரணம் பற்றியவர், உடலே ஆத்மா என்கிற அஜ்ஞானம் நீங்கி, விஷயங்களில் ஆசையற்று ஆத்மஜ்ஞானம் பெற்று, அந்த ஜ்ஞானத்திலேயே நிலைத்திருப்பர். மற்ற எதிலும் அவர்களுக்கு ஆசைபிறாது, விஷயம் அருகிலிருந்தாலும் அதை அனுபவிக்க வேண்டுமென்ற இச்சையோ, அதில் தொடர்போ ஏற்படாது; இப்படியிருப்பதே புலனடக்கமாகும். அவர்கள் சுகம், துக்கம் இரண்டையும் சமமாகக் கருதி இருப்பர். என்னைச் சரணம் பற்றினவருக்கு, இந்த ஸ்வபாவமெல்லாம் தன்னடைவே உண்டாகும்; இவை ஆத்ம தரிசனத்தில் கொண்டு போய்ச் சேர்ப்பிக்கும்.

நதத் பாஸயதே ஸூர்யோ ந சசாங்கோ நபாவக :
யத் கத்வா ந நிவர்த்தந்தே தத்தாம பரமம் மம—6

அந்த ஜ்யோதியான ஜீவனை, சூர்யனோ சந்திரனோ, அக்னியோ எதுவும் பிரகாசப் படுத்தாது. எதை அடைந்தால் திரும்பி வருவதில்லையோ, அந்த ஜ்யோதியான பரிசுத்த ஆத்மா என் அதீனம்.

சூரிய ஒளியோ, தீபத்தின் ஒளியோ புற இருளைப் போக்குமே ஒழிய, ஒரு வஸ்துவை உள்ளபடி அறிவது என்பது ஜீவாத்மாவின் ஞான ஒளியினுல்தான். ஒரு குருடன் தன் கையினுல் தடவி, ஒரு தூணைத் தூண் என்று தன் ஞான ஒளியினுல் அறிகிறுன்.

இப்படி ஞான ஸ்வரூபமாகவும், ஞானத்தை குணமாகவும் உடையவன் ஜீவன்.

பகவானைச்சரணம் பற்றுகிறவன் ப்ரக்ருதியினாலான முக்குணங்களைக் கடந்து ஜ்ஞான யோகம் செய்து, பரிசுத்த ஜீவனை அடைகிறான் அந்த ஜீவாத்ம அனுபவந்திலிருந்து திரும்புவதில்லை; இப்படிப்பட்ட கைவல்யனும் எனக்கு சேஷன், என் அதீனம், அதாவது என் ஆணைக்குட்பட்டவன்.

**மமை வாம்சோ ஜீவலோகே ஜீவபூத : ஸநாதன :**
**மந: ஷஷ்ட்டாநி இந்த்ரியாணி ப்ரக்ருதிஸ்த்தாநி கர்ஷதி—7**

எல்லா ஜீவன்களிலும் என் அம்சம் இருக்கிறது, பத்த ஜீவன் ப்ரக்ருதியினாலான, மனத்துடன் சேர்ந்து, ஆறு புலன்களாலும் இழுக்கபபடுகிறான்.

என்னால் கொடுக்கப்பட்ட ஜ்ஞானத்தை உடைய ஜீவாத்மாக்கள், அநாதியான வினைத்தொடரால் மனத்துடன் சேர்ந்து ஐம்புலன்களால் ஈர்க்கப்பெற்று ஞானத்தை இழந்து, ஸம்ஸாரத்தில் உழல்கிறான்.

**சரீரம் யத் அவாப்நோதி யச்சாபி உத்க்ராமத் ஈச்வர :**
**க்ருஹீத்வைதாநி ஸம்யாதி வாயுர் கந்தாநிவாசயாத்—8**

'சரீரத்தின் எஜமானன் ஜீவன், ஒரு சரீரத்தை அடைந்து, சில காலம் அதில் வசித்து, பிறகு அதை விட்டு வெளிச் செல்லுகிறான்.

ஒரு மலர்த்தோட்டத்தில் வீசும் காற்று, மலர்களின் மணத்தை, தன்னுடன் இழுத்துச் செல்வது போல, ஜீவன் சில காலம் தானிருக்கும் உடலை விட்டு ஏகும் போது, தன்னுடன் அந்த உடலின் நுண்ணிய புலன்களை வாசஸனையோடு (பழக்க வழக்கங்களை) எடுத்துச் செல்கிறான். மறுபிறவியில் அந்த நுண்புலனின் வாஸனையுடனே பிறக்கிறான் ; குழந்தை பிறந்த உடனே தேனை அதன் நாக்கில் தடவினால், ருசியுடன் நக்குகிறது; விளக்கெண்ணையைத் தடவினால் அழுகிறது. இது பூர்வஜன்ம வாசனைக்கு எடுத்துக் காட்டு)

**ச்ரோத்ரம் சக்ஷு: ஸ்பர்சநஞ்ச ரஸனம் க்ராணம் ஏவச**
**அதிஷ்டாய மனச்சாயம் விஷயாந் உபஸேவதே —9**

**உத்க்ராமந்தம் ஸ்த்திதம் வாபி புஞ்ஜாநம் வா குணாந்விதம்**
**விமூடோ நாநுபச்யந்தி பச்யந்தி ஜ்ஞான சக்ஷுஷா — 10**

இந்த ஜீவன், மனம், கண், காது, மூக்கு, நா, தோல், முதலிய இந்திரியங்களை ஏவி. அவைகளின் மூலம் விஷயங்களில் தொடர்பு கொண்டு, அவைகளை அனுபவிக்கிறான்.

இச் சரீரம் ஸத்வ ரஜஸ் தமோ குணங்களை உடையது; இவைகளினால் உண்டாகும் விஷயங்களை அனுபவிக்கிறவன் ஜீவன். இப்படி சில காலம் அனுபவித்திருந்து, அந்த உடலை விட்டு வெளியேறுகிறான். இதை மூடர்கள் அறிகிறதில்லை. ஜ்ஞானிகளே அறிவர்.

யதந்தோ யோகினச்சைநம் பச்யத்த்யஆத்மந்யஅவஸ்திதம்.
யதந்தோZப்ய க்ருதாத்மானோ நைனம் பச்யந்த்ய சேதஸ: —11

பரிசுத்த மனத்தின் முயற்சியினால் யோகிகள் சரீரத்தில் உறையும் ஜீவனை அறிகிறார்கள். அப்படி அல்லாதார், தங்கள் முயற்சியினால் ஜீவனை அறிய முடிகிறதில்லை.

யத் ஆதித்ய கதம் தேஜோ ஜகத்பாஸயதேZகிலம்
யச் சந்த்ரமஸி யச் சாக்னௌ தத் தேஜோ வித்தி மாமகம் — 12

காம் ஆவிஸ்ய ச பூதானி தாரயாம் அஹம் ஓஜஸா
புஷ்ணாமீசௌஷதீ : ஸர்வா ; ஸோமோ பூத்வா ரஸாத்மக : — 13

உலகில் ஒளிரும் சூரியன் சந்திரன் அக்னி இவைகளின் ஒளியெல்லாம் என்னிடமிருந்தே உண்டானவை; ஒளிரும் சக்தி இவைகளுக்கு என்னால் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதை அறிவாய்.

நான் பூமியிலிருந்து எல்லா ஜீவ ராசிகளையும் தாங்குகிறேன்; சந்திரனிடம் அம்ருதமயமான ரஸமாக யிருந்து, எல்லாச் செடி கொடிகளையும் வளரச் செய்கிறேன்.

அஹம் வைச்வானரோ பூத்வா பிராணினும் தேஹம் ஆச்ரித :
பிராண அபான ஸமாயுக்த : பசாம் யந்நம் சதுர்விதம் —14

எல்லா ஜீவராசிகளின் வயிற்றில் நான் ஜாடராக்னியாகயிருந்து, பிராண, அபான வாயுக்களுடன் கூடி, ஜீவன்கள் உட்கொள்ளும் நான்கு வித உணவை ஜீர்ணிக்கச் செய்கிறேன். (கடிப்பது, குடிப்பது, நக்குவது, உறிஞ்சுவது, என்ற நான்கு வித உணவு)

இவைகளை ஜீரணிக்கும் அக்னி நானே. பிராணவாயு உட்புகும் காற்று- அபானவாயு,- வெளியேறும் காற்று ; மேல் நோக்கி வரும்

பிராணவாயுவும், கீழ் நோக்கிச் செல்லும் அபான வாயுவும், ஓரிடத்தில் சேர்ந்து ஜாடராக்னியாகி அன்னத்தைப் பக்குவம் செய்கிறது; ஜீரணிக்கிறது.

**ஸர்வஸ்யச அஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ**
**மத்த: ஸ்ம்ருதிர் ஜ்ஞானம் அபோஹநஞ்ச**
**வேதைஸ்ச ஸர்வை: அஹமேவ வேத்ய:**
**வேதாந்த க்ருத் வேத விதேவ சாஹம் —15**

எல்லோருடைய உள்ளத்தில் இருப்பவன் நான். ஒவ்வொரு ஜீவனின் நினைவு, மறதி, அறிவு ஆகியவை என் அதீனம். வேதங்களால் அறியப்படுபவனும் நானே. வேதங்களை நன்றாக அறிந்தவனும் நானே! அவைகளில் சொல்லப்படும் பலன்களைக் கொடுப்பவனும் நான்தான்; (புலன்களினாலும், போகம், சாஸ்திரம் இவைகளைக் கொண்டும், ஏற்படும் ஞானமே அறிவு: முன் நடந்தவைகளைப் பற்றிய அறிவு நினைவு; அறிவு இருந்தும் அது மனத்தில் தோன்றாமை மறதி).

இதற்கு மேல் மூன்று சுலோகங்களினால் புருஷோத்தம வித்யை – புருஷோத்தமனான பகவானின் மேன்மையைச் சொல்லுகிறான்.

**த்வாவிமௌ புருஷௌ லோகே க்ஷராக்ஷர ஏவச —**
**க்ஷரஸர்வாணி பூதாநி கூடஸ்தோ அக்ஷர உச்யதே — 16**

**உத்தம புருஷஸ் த்வந்ய: பரமாத் மேத்யு தாஹ்ருத:**
**யோ லோகத்ரயம் ஆவிச்ய பிபர்த்யவ்யய ஈச்வர — 17**

**யஸ்மாத் க்ஷரமதீதோZஹம் அக்ஷராதபிசஉத்தம:**
**அதோஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம:— 18**

லோகத்தில் க்ஷரன் என்றும் அக்ஷரன் என்றும் இருவகை புருஷர்கள் (ஜீவாத்மாக்கள்) இருக்கிறார்கள். ஸம்ஸார பந்தத்திலிருப்பவன் க்ஷரன் என்றும், ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபட்ட முக்தன் அக்ஷரன் என்றும் சொல்லப்படுகிறான்.

இவ்விரு ஜீவாத்மாக்களைக் காட்டிலும் வேறுபட்டவனாய் உயர்ந்தவனாயுள்ள புருஷன் புருஷோத்தமன் எனப்படுபவன். இவன் மாறுதல் இல்லாதவன், நித்யன்; அசித்து மற்றும் பத்தன், முக்தன் நித்யன் என மூவகை ஆத்மாக்களிலும் நுழைந்து அவைகளை நியமித்து (ஏவி), தரித்துப் போருகிறவன்.

பக்த முக்த நித்யர்களைக் காட்டிலும் நான் மேன்பட்டவனாகையினால், வேதங்களும், ஸ்மிருதிகளும் என்னை புருஷோத்தமன் என்று கொண்டாடுகின்றன என்கிறான் கண்ணன்.

பகவான் நாராயணன் ஒருவனுக்கே புருஷோத்தமன் என்கிற திருநாமம் உண்டு. புருஷோத்தமனை கண்ணனே இந்த மூன்று சுலோகத்தில் புருஷோத்தமன் என்கிற திருநாமத்திற்குப் பொருள் கூறியிருக்கிறான்.

புருஷேப்யோ உத்தம ; புருஷாணும் உத்தம; புருஷேஷு உத்தம : என்று மூன்று வகையில் பொருள் கூறலாம்.

ப்ரஹ்மா முதல் எறும்பு வரையில் உள்ள உயிர்கள் க்ஷரம் எனப்படும். ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபட்டு மோக்ஷம் அடைந்த முக்தர்கள் அக்ஷரம் எனப்படுவர். இவ்விருவகை ஆத்மாக்களைக் காட்டிலும் வேறுபட்டவனாய் விளங்குகிறான் பகவான்; இவைகளில் பிரவேசித்து, இவைகளை தரித்து, நியமித்து போருகிறவன் பகவான்; ஆதலால் புருஷோத்தமன் எனப்படுகிறான்.

புருஷ: — என்றால் அறிவுடையவன்; அறிவில்லாத அசித்தைக் காட்டிலும் வேறுபட்டவன என்பதும் இதனால் தேறுகிறது.

உத்புருஷ : சரீரம் பெற்றிருக்கும் பத்த ஜீவனைக் காட்டிலும் மேற்பட்டவன்.

உத்தரபுருஷ : சிறிது காலம் ஸம்ஸாரத்திலிருந்து பகவானின் அருளினாலே ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபட்டு மோக்ஷமடைந்த முக்தாத்மாவைக் காட்டிலும் மேப்பட்டவன்.

உத்தம புருஷ : ஒரு நாளும் ஸம்ஸார ஸம்பந்தமேயில்லாத நித்ய சூரிகளைக் காட்டிலும் உயர்ந்தவன்.

புருஷோத்தம : அறிவில்லாத அசித்து, அறிவுள்ள பத்த ஜீவன், முக்தாதமா, நித்யசூரிகள் இவர்கள் எல்லோரைக் காட்டிலும் வேறுபட்டு சிறப்புடையவனாய் விளங்கிக் கொண்டிருக்கும் பகவான் ஆதலால் புருஷோத்தமன்.

புரு—கரோதீதி – என்பது புருஷோத்தம பதத்திற்கு தாது (Root word) வேண்டிற்றெல்லாம் கொடுப்பவன் பகவான் என்பது இதிலிருந்து கிடைக்கும் பொருள் "ஸகல பல ப்ரதாதா" ஸர்வேச்வரன். வேண்டிற்றெல்லாம் தரும் கற்பகம் "சதுர்நாம் புருஷார்த்தாணும், தாதா புருஷோத்தம ; ஹரி : தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம் என்கிற நான்கு புருஷார்த்தங்களைத தருபவன்; ஆதலால் புருஷோத்தமன் எனப்படுகிறான். பகவான் யார் யார் எதை

விரும்பி அவனைப் பற்றுகிறார்களோ, அதை யெல்லாம் வெகுவாக வழங்குபவன்.

இதை ஸ்ரீ ராமாவதாரத்தில் நன்கு காணலாம். ரிஷிகளுக்கு தர்மத்தையும், விபீஷணனுக்கு அர்த்தத்தையும், (ராஜ்யத்தையும்), சுக்ரீவனுக்கு காமத்தையும், ஜடாயு, சரபங்கர், சபரி, வாலி இவர்களுக்கு மோக்ஷத்தையும், அருளியிருக்கிறான். தமஸ: பரமோ தாதா என்று அவனை மண்டோதரி கொண்டாடிப் பேசியிருக்கிறாள். இந்த நான்கு புருஷார்த்தங்களைத் தவிர, கைவல்யம் (தன் ஆத்மாவையே தான் அனுபவித்திருப்பது) என்ற ஒருபலன் இருக்கிறது; தன்னைத் தானே பார்த்திருப்பதான அந்தப் பலனை எனக்குத் தந்தாய்" என்கிறாள் மண்டோதரி.

இப்படி பகவானை புருஷோத்தமன் என்று தெரிந்து கொள்பவர் பெறும் பேற்றை மேலே சொல்லுகிறான்.

**யோ மாமேவமஸம்மூடோ ஜாநாதி புருஷோத்தமம்**
**ஸ ஸர்வவித் பஜதி மாம் ஸர்வபாவேந பாரத — 19**

அர்ஜுன! புருஷோத்தமனான என்னை எவன் இவ்வாறு தெளிய அறிகிறானோ அவன் என்னிடம் எல்லாப்படியாலும் பக்தி செய்தவனாகிறான்.

மேலே கூறியபடி மற்ற எல்லோரைக் காட்டிலும் வேறுபட்டவனாய், மேன்பட்டவனாய், அவரவர் வேண்டிய பலனைக் கொடுக்கும் சிறப்புடையவனாய், எவன் என்னை அறிகிறானோ அவன் என்னை எல்லாப்படியாலும் ஆராதித்தவனாகிறான். சிறந்த ஜ்ஞானிக்கு என்னிடம் அன்பு, மிகுந்திருக்கும். எனக்கும் அவனிடம் அன்பு உண்டு. அவனுக்கு மறுபிறவியில்லை மோக்ஷம் அடைகிறான்.

**இதி குஹ்யதமம் சாஸ்த்ரம் இதம் உக்தம் மயா அநக**
**ஏதத் புத்வா புத்திமாத் ஸ்யாத் க்ருதக்ருத்யச்ச பாரத — 20**

இவ்விதம் நானே புருஷோத்தமன் என்கிற மிக ரஹஸ்யமான உயர்ந்த இந்த சாஸ்திரத்தை, குற்றமற்ற உனக்கு நான் உரைத்தேன்; இதை அறிந்தவன் என்னை அடைய விரும்பி, அதற்கேற்ப அறிவைப் பெற்று, அதற்குண்டானவைகளை யெல்லாம் செய்தவனாவான்.

பகவத்கீதை முழுதுமே சாஸ்திரம் என்பதனால், இது மிகவும் சிறப்புடைய சாஸ்த்ரம் எனப்படுகிறது ஏனெனில் இது வேதாந்த

சாரம். பகவானை புருஷோத்தமன் என்று அறிபவனே ஜ்ஞானியா கிறான். இந்த புருஷோத்தம ஞானமே, அவனை அடைய ஆசையைத் தூண்டி, அதற்காகச் செய்ய வேண்டியவைகளை அறிந்து செய்தவ னாகிறான்.

குஹ்யதமம் – மிக ரஹஸ்யமானது என்பதினால் மறைக்கத் தகுந் தது. தகுதியில்லாதவருக்குச் சொல்லக்கூடாது. அநக பாரத என்ப தினால் நீ தோஷமற்றவன், குலப்பிறப்பினாலும் மேன்பட்டவன்; இதைக் கேட்கத்தகுதியுள்ளவன் என்பது சொல்லப்படுகிறது.

மயா — என்னால் — என்பதினால் தத்வத்தை உள்ளபடி சொல்ல ஜ்ஞான சக்திகள் பெற்ற என்னால். உனக்கு — இதை அறியத் தகுந்தவனாயும், என் நன்பனாயுமுள்ள உனக்கு. புத்திமான் :— "தத் ஜ்ஞானம், தத : அன்யத் உக்தம், அஜ்ஞானம்" பரமாத்மாவைப பற்றிய அறிவே ஜ்ஞானம், மற்றவையெல்லாம் அஜ்ஞானம், (அறி வின்மையே) என்று சொல்லப்பட்டது. இதில் சொல்லப்பட்ட புருஷோத்தம வித்யையை, அறிவதே ஜ்ஞானமாகும். மற்றவை யெல்லாம் செருப்புக் குத்த கற்றது போல அற்ப ஜ்ஞானம் என்பர் பெரியோர்; இந்த புருஷோத்தமன் என்கிற திருநாமத்தின் பொருளை உள்ளபடி அறிந்தால், அது மோக்ஷத்தில் இச்சையை உண்டாக்கி அதற்கான செயலைச் செய்து பகவானையே அடைகிறான்.

## ஸ்ரீ ஆளவந்தார் அருளிச் செய்த கீதார்த்த ஸங்க்ரஹம்

அசிந்மிச்ராத் விசுத்தச்ச சேதநாத் புருஷோத்தம
வ்யாபநாத் பரணாத் ஸ்வாம்யாத் அந்ய பஞ்சசோதித :

எங்கும் வ்யாபித்து தரித்து, நியமித்து ஸ்வாமியாக இருத்தலால் பரமாத்மா, மற்றும் பத்தன், முக்தன் ஆகிய ஜீவாத்மாக்களைக் காட் டிலும் சிறந்தவன், அவனே புருஷோத்தமன் என்பது இந்த பதினைந்தாம் அத்யாயத்தில் சொல்லப்பட்டது.

ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே சரணம் !
பதினைந்தாம் அத்யாயம் முற்றிற்று.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

# ஸ்ரீமத் பகவத் கீதை

## பதினாரும் அத்யாயம்

ஸ்ரீ பகவான் உவாச — *கண்ணன் கூறியது.*

அபயம் ஸத்வஸம்சுத்திர் ஞானயோக வ்யவஸ்திதி : |
தானம் தமஸ்ச யஜ்ஞஸ்ச ஸ்வாத்யாயஸ்தப ஆர்ஜவம் || 1

அஹிம்ஸா ஸத்யமக்ரோதஸ் த்யாக: சாந்திரபைசுனம் |
தயா பூதேஷ்வ லோலுப்த்வம் மார்தவம் ஹ்ரீரசாபலம் || 2

தேஜ: க்ஷமா த்ருதி: சௌசமத்ரோஹோ நாதிமானிதா |
பவந்தி ஸம்பதம் தைவீமபிஜாதஸ்ய பாரத || 3

*அஞ்சாமை, மனத்தூய்மை, ஜ்ஞானத்திலும் யோகத்திலும் நிலைத்திருத்தல், ஈகை, ஸத் பாத்திரத்தில் புண்ய காலத்தில் தானம் செய்தல், புலனடக்குதல், யாகம், வேதம் ஓதுதல், தபஸ், நேர்மை:- பிறருக்குத் தீங்கிழையாமை, உண்மையே பேசுதல், கோபத்தை அடக்குதல், துறவு, அமைதி, கோள் சொல்லாமை, எல்லா உயிர்களிடத்தும் இரக்கம், பிறர் பொருளை விரும்பாமை, இனிமையாகப் பேசுதல், நாணம், மனம் சலியாமை;— தைரியம், பொறுமை, மனவுறுதி, தூய்மை, வஞ்சகமில்லாமை, செருக்கின்மை, இவைகள் எல்லாம் தெய்வ சம்பத்துடன், பிறந்தவனுக்கு இயல்பாக உள்ள குணங்கள்.*

தம்போ தர்போ அதிமானஸ்ச க்ரோத : பாருஷ்ய மேவச |
அஜ்ஞானம் சாபிஜாதஸ்ய பார்த்த ஸம்பத மாஸுரீம் || 4

*பார்த்தா! பெருமைக்காக, தர்மத்தைச் செய்தல், இறுமாப்பும், தற்புகழ்ச்சியும், கோபமும், கடுமை ஸ்வபாவமும், அஜ்ஞானமும் அசுரசம்பத்தை உடையவனாய்ப் பிறந்தவனுக்கு இயல்பாக உண்டு.*

தைவீ ஸம்பத் விமோக்ஷாய நிபந்தாய ஆஸுரீ மதா |
மா சுச : ஸம்பதம் தைவீம் அபிஜாதோஸி பாண்டவ || 5

*தெய்வீக சம்பத்து மோக்ஷம் தரும். அசுர சம்பத்து ஸம்ஸார பந்தத்தையே கொடுக்கும் என்று கருதப்படுகிறது; இதைக்*

கேட்ட அர்ஜுனன், தான் தெய்வீக சம்பத்து படைத்தவனு, அசுர சம்பத்துடையவனு என்று கலங்க, 'அர்ஜுன ! கலங்காதே. நீ தெய்வீக சம்பத்து வாய்ந்தே பிறந்திருக்கிறாய்" என்கிறான் கண்ணன்.

**த்வௌ பூதஸர்கௌ லோகேऽஸ்மின் தைவ ஆஸுர ஏவச ।**
**தைவோ விஸ்தரச: ப்ரோக்த ஆஸுரம் பார்த்த மே ச்ருணு ॥ 6**

அர்ஜுன! தெய்வீகம் என்றும் ஆசுரம் என்றும் இருவகை உயிர்ப் பிறப்புகள் இவ்வுலகில் இருக்கின்றன. தெய்வீக சம்பத்துடையவனுடைய குணங்கள் விரிவாகச் சொல்லப்பட்டது. இனி அசுர இயல்பைச் சொல்லுகிறேன் கேள்

**ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச ஜநா ந விதுராஸுரா: ।**
**நசௌசம் நாபி சாசாரோ ந ஸத்யம் தேஷு வித்யதே ॥ 7**

அசுர ஸ்வபாவமுடையவர் செய்யத்தக்க நற் செயல்களையும், தகாத தீயச் செயல்களையும் அறியார். அவர்களிடம் தூய்மையும் நல்லொழுக்கமும், உண்மையும் இராது.

**அஸத்யம் அப்ரதிஷ்டம் தே ஜகதாஹுரநீச்வரம் ।**
**அபரஸ்பர ஸம்பூதம் கிமந்யத் காமஹைதுகம் ॥ 8**

அசுர ஸ்வபாவமுள்ளவர், இவ்வுலகம் ஸத்யம் அன்று, அது பகவானை ஆதாரமாக உடையது அல்ல, தெய்வமேயில்லை என்றும், ஸ்திரீ புருஷர் சேர்க்கையினுலேயே, காமத்தையே காரணமாக உடையவை என்றும் கூறுவர்.

**ஏதாம் த்ருஷ்டிமவஷ்டப்ய நஷ்டாத்மனோऽல்ப புத்தய: ।**
**ப்ரபவந்த்யுக்ர கர்மாண: க்ஷயாய ஜகதோऽஹிதா: ॥ 9**

அற்ப புத்தி யுடையவரான இவர்கள் ஆத்ம நஷ்டமடைந்தவர்களாய், கொடுஞ்செயலைப் புரிந்து உலகத்திற்கு எதிரிகளாயிருந்து, ஜகத்தின் அழிவுக்கென்றே தோன்றியுள்ளனர்.

இவர்கள் அதர்மத்தையே அதிகமாகச் செய்து, தங்களை நாசம் செய்துகொண்டு உலக விநாசத்தையும் உண்டாக்குகின்றனர்.

**காமமாச்ரித்ய துஷ்பூரம் தம்பமானமதான்விதா: ।**
**மோஹாத்க்ருஹீத்வாऽஸத்க்ராஹான் ப்ரவர்த்தந்தே**
**சுசிவ்ரதா: ॥ 10**

பூர்த்தி பண்ண முடியாத பேராசையைப் பெற்று, மதிமயங்கி, கெட்ட எண்ணங்களையே உடையவராய் தீய செயலில் ஈடுபட்டு கொடுமையில் அழிகின்றனர், இந்த அசுர தன்மையுடையவர்.

சிந்தாமபரிமேயாஞ்ச ப்ரளயாந்தாமுபாச்ரிதா: |
காமோபபோகபரமா : ஏதாவதிதி நிச்சிதா : ॥ 11

ஆசாபாச சதைர்பத்தா : காமக்ரோத பராயணா : |
ஈஹந்தே காமபோகார்த்த மன்யாயேனார்த்த ஸஞ்சயான் ॥ 12

*இறக்கும் வரையில் அளவு கடந்த கவலையை உடையவராய், காமநுகர்ச்சியே அனைத்திலும் மேலானதாகக் கருதி, அதற்கு மேற்பட்டது ஒன்றுமில்லை என்று தீர்மானித்திருப்பர்.*

*பயனில் ஆசை என்னும் கயிற்றினால் கட்டுண்டு காமக்ரோதத்திற்கு, வசப்பட்டு, அவைகளை அனுபவிக்க வழியல்லா வழியில் பணம் தேட முயலுகின்றனர்.*

இதமத்ய மயா லப்தமிமம் ப்ராப்ஸ்யே மனோரதம் |
இதமஸ்தீதமபி மே பவிஷ்யதி புனர்தனம்— ॥ 13

அஸௌ மயா ஹத : சத்ருர்ஹனிஷ்யே சாபரானபி |
ஈச்வரோஹ மஹம் போகீ ஸித்தோZஹம் பலவான் ஸுகீ ॥ 14

ஆட்யோZபிஜன வானஸ்மி கோZன் யோZஸ்தி ஸத்ருசோ மயா |
யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்ய இத்யஜ்ஞான விமோஹிதா : ॥ 15

*இன்று இது என்னால் அடையப்பட்டது; இன்னும் இந்த விருப்பங்களை நான் பெறுவேன்; இப்போது எனக்கு இவ்வளவு பணமிருக்கிறது; மேலும் பல செல்வம் எனக்கு வந்து சேரும். என்னுடைய அப்பகைவன் கொல்லப்பட்டான்; மற்ற என் பகைவர்களையெல்லாம் நான் கொன்றுவிடுவேன்; எல்லோரையும் ஆளுபவன் நான்; நானே சித்தி பெற்றவன், வலிமையுடையவன் இன்பத்தை அனுபவிப்பவனும் நானே.*

*நான் செல்வம் படைத்தவன்; உயர் குலத்தவன்; எனக்கு நிகர் வேறு எவருமில்லை; நான் யாகம் செய்வேன், தானம் கொடுப்பேன், மகிழ்ச்சியுறுவேன் என்று அறியாமையில் மயங்கி கிடப்பர் அசுர தன்மையர்.*

அனேக சித்த விப்ராந்தா மோஹஜால ஸமாவ்ருதா: |
ப்ரஸக்தா: காமபோகேஷு பதந்தி நரகே அசுசௌ ॥ 16

ஆத்ம ஸம்பாவிதா: ஸ்தப்தா தனமான மதான்விதா: |
யஜந்தே நாம யஜ்ஞைஸ்தே தம்பேன அவிதி பூர்வகம் ॥ 17

அஹங்காரம் பலம் தர்பம் காமம் க்ரோதஞ்ச ஸம்ச்ரிதா: |
மாம் ஆத்மா பரதேஹேஷு ப்ரத்விஷந்தோப்யஸூயகா: ॥ 18

அசுர ஸ்வபாவமுள்ளவர், இன்னும் பல எண்ணங்களால் குழப்பமடைந்து, மோகவலையில் சிக்குண்டு, காம போகங்களில் பற்றுடையவர்களாய் பாழ்நரகில் விழுந்து கெட்டுப் போகின்றனர்.

தற்புகழ்ச்சியுடையவர், வணக்கமேயில்லாதவர், செல்வம் வித்யை, குலம் இவைகளினால் செருக்குப்பெற்றவர், தார்மிகர் என்று தங்களைச் சொல்லிக் கொண்டு, சாஸ்திர முறையைக் கைவிட்டு வீணாகும் யாகம் செய்பவர்.

அஹங்காரம், வலிமை, இறுமாப்பு, காமம் க்ரோதம் இவை களையுடையவர்கள் தங்கள் உடலிலும் மற்றவர் உடலிலும் உள்ள ஸர்வேச்வரனான என்னை வெறுத்து அவமதிக்கின்றனர்.

கடவுளில்லை, அதிர்ஷ்டம் என்பதில்லை; எல்லாம் தன் திறமை யினால் செய்வதாகவும் தான் எதையும் செய்ய வல்லவன் என்றும் சொல்லிக்கொண்டு, இன்பவேட்கையில் ஈடுபட்டிருப்பர் ஒரு நாள் மரணம் வந்து பாழான நரகத்தை அடைவர்.

தானஹம் த்விஷத: க்ரூரான் ஸம்ஸாரேஷு நராதமான் |
க்ஷிபாம் யஜஸ்ரமசுபான் ஆஸுரீஷ்வேவ யோனிஷு ॥ 19

இப்படி என்னை வெறுத்து கொடிய இயல்புள்ள மனிதப் பதரான பாவிகளை அவர்கள் தன்மைக்கு ஏற்ப அசுரத் தன்மை யுடைய ஜாதியிலேயே அவர்களைத் தள்ளுகிறேன். மேலும் மேலும் கொடிய பாபத்தை செய்து, அதன் விளைவான கடு நரகத்தை அவர் கள் அடையச் செய்கிறேன்.

ஆஸுரீம் யோனிமாபன்னா மூடாஜன்மனி ஜன்மனி |
மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம் ॥ 20

அர்ஜுன! மூடர்கள் பல பிறவிகளில் அசுர யோனியை அடைந்து என்னை அறியாமல் முன்னிலும் இழிந்த நிலையையே எய்துகிறார்கள். வாசுதேவனான ஈச்வரன் ஒருவன் இருக்கிறான என்பதை அறியாமல் தாழ்ந்த நிலையில் படிகிறார்கள்

த்ரிவிதம் நரகஸ்யேதம் த்வாரம் நாசனமாத்மன: |
காம, க்ரோதஸ்ததா லோபஸ் தஸ்மாத் ஏதத் த்ரயம் த்யஜேத் ॥ 21

ஆத்மாவுக்கு நாசத்தை விளைவிக்கக்கூடிய காமம், கோபம், லோபம் என நகரத்துக்கு மூன்று வழிகள் உள்ளன. இம் மூன் றையும் விட்டுவிட வேண்டும்

இப்படி அசுர ஸ்வபாவமுள்ளவர்கள் நரகத்தில் விழுவதற்கு காமம், கோபம், லோபம் இம்மூன்றுமே காரணமாகிறது. இவை

ஆத்ம நாசத்தை விளைவிக்கும்; அதை அறிந்து நீ அவைகளை விட்டு விடவேண்டும்.

ஏதைர்விமுக்த: கௌந்தேய தமோத்வாரைஸ் த்ரிபிர்நர: |
ஆசரத்யாத்மன: ச்ரேயஸ்ததோ யாதி பராம்கதிம் || 22

குந்தியின் புத்திரனே! அஜ்ஞானம், விபரீத ஜ்ஞானம் இவைகளுக்குக் காரணமான காம க்ரோத லோபமான மூன்று குணங்களிலிருந்தும் விடப்பட்ட மனிதன், தன் ஆத்மாவுக்கு நன்மையையே செய்தவனாகிறான். அவன் உயர்ந்த கதியை அடைகிறான். அதாவது புருஷோத்தமனான என்னையே அடைகிறான்.

ய: சாஸ்த்ர விதிமுத்ஸ்ருஜ்ய வர்த்ததே காமகாரத: |
ந ஸ ஸித்திம் அவாப்னோதி ந ஸுகம் ந பராம்கதிம் || 23

காமத்திற்கு வசப்பட்டு சாஸ்திரத்தின் ஆணையை மீறிதன் இஷ்டப்படி நடப்பவன் இங்கும் சுகம் பெறுகிறானில்லை; அங்கும் நன்மையுறுகிறானில்லை; அதாவது இம்மை மறுமை இரண்டிலும் நன்மையில்லை.

தஸ்மாத் சாஸ்த்ரம் ப்ரமாணம் தே
கார்யா கார்ய வ்யவஸ்திதௌ |
ஞாத்வா சாஸ்த்ர விதானோக்தம்
கர்ம கர்த்தும் இஹார்ஹஸி || 24

எது செய்யத்தக்கது, எது செய்யத்தகாதது என்பதற்கு சாஸ்த்ரமே ப்ரமாணம். ஆதலால் சாஸத்ரம் கூறியுள்ள நெறியை அறிந்து உன் வர்ணாச்ரம தர்மங்களை, இந்த உலகில் செய்வதற்கு, நீ உரியவனாகிறாய்.

தர்ம சாஸ்த்ரம், புருஷஸூக்தம், இதிஹாஸ புராணங்கள், என்னிடம் பக்தி செய்து என்னை அடைய உபாயங்களைக் கூறுகின்றன. அவை அவரவர் செய்ய வேண்டிய கர்மாவை தெளிவாகச் சொல்லுகின்றன. தெளியத் தெரிந்து அவைகளை நீ செய்பத் தகுதியுள்ளவனாயிருக்கிறாய்.

## ஸ்ரீ ஆளவந்தார் அருளிச் செய்த கீதார்த்த ஸங்க்ரஹம்

தேவாசுர விபாகோக்தி பூர்விகா சாஸ்த்ர வச்யதா
தத்த்வா நுஷ்டான விஜ்ஞான ஸ்த்தேம்நே ஷோடச உச்யதே

பிராணிகளின் ச்ருஷ்டியில் தேவாம்சம் அசுராம்ஸம் என்று இரு பிரிவுகளைச்சொல்லி, தத்வத்தையும், செய்ய வேண்டிய செயலையும் அறிய சாஸ்த்ரம் பிரமாணம் என்கிற விஷயமும் இந்த பதினாறும் அத்யாயத்தில் சொலலப்பட்டது.

ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே சரணம்!
பதினாறும் அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீமத் பகவத் கீதை

## பதினேழாம் அத்யாயம்

*தெய்வப் பிறவி, அசுரப் பிறவி என இருவகைகளைக்கூறி, சாஸ்திரத்தை மீறி நடப்பதே அசுரப்பிறவிக்குக் காரணம். ஆதலால், சாஸ்த்ரத்துக்கு உட்பட்டே நடக்க வேண்டும் என்பதைக் கீழே சொன்னான்.*

*சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டுள்ள செயல்களும் ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களுக்குச் சேர மூன்று விதங்களாயிருக்கும் என்பதையும், அவைகளின் தன்மையையும் இந்த அத்தியாயத்தில் கூறுகிறான்.*

**அர்ஜுன உவாச :** *அர்ஜுனன் சொன்னான்.*

**யே சாஸ்த்ரவிதிம் உத்ஸ்ருஜ்ய யஜந்தே ச்ரத்தயாऽந்விதா : |**
**தேஷாம் நிஷ்ட்டா து கா க்ருஷ்ண ஸத்வம் ஆஹோ ரஜஸ்தம : || 1**

*க்ருஷ்ணா! யார் சாஸ்திர விதியை மீறி, ஆனால் ச்ரத்தையுடன் யாகாதிகளைச் செய்கிறார்களோ, அவர்களுடைய நிலை எத்தகையது; ஸத்துவமா, ராஜஸமா? அல்லது தமஸமா?*

*ஒருவன் முன்னேற வேண்டுமென்கிற ச்ரத்தையுடனேயே சாஸ்திரம் விதிக்காத ஒரு செயலையோ யாகத்தையோ, யஜ்ஞத்தையோ செய்கிறான் இப்படிப்பட்டவனின் கதி என்ன? இவன் ஸத்வகுணமடியாக மேலேறுகிறானா? அல்லது ரஜஸ் தமஸ்ஸினால் கீழே அழுந்துகிறானா? சாஸ்திரம் விதித்துள்ளபடி செய்யவேண்டியது இன்றியமையாததா! என்பதே அர்ஜுனனின் கேள்விக் கருத்து.*

**ஸ்ரீ பகவான் உவாச :** *கண்ணன் கூறியது.*

**த்ரிவிதா பவதி ச்ரத்தா தேஹிநாம் ஸா ஸ்வபாவஜா |**
**ஸாத்விகீ ராஜஸீ சைவ தாமஸீ சேதி தாம் ச்ருணு || 2**

*சரீர சம்பந்தம் பெற்றவர்களுக்கு, உடன் பிறந்த முன் வினையின் ருசியினால், அவர்கள் செய்யும் செயல்களிலுள்ள ச்ரத்தை*

யானது (ஊக்கமானது) ஸாத்விக ராஜஸ தாமஸமென மூன்று விதமாக இருக்கும். அதனைச் சொல்லுகிறேன் கேள்:

**ஸத்வானுரூபா ஸர்வஸ்ய ச்ரத்தா பவதி பாரத |**
**ச்ரத்தாமயோZயம் புருஷோ யோ யச்ச்ரத்த: ஸ ஏவஸ: ‖ 3**

*பாரத! ஒவ்வொருவனுடைய மனப்பாங்குக்கு ஏற்ப ஊக்கம் உண்டாகிறது ஜீவன் ஊக்கத்தில் மாறுதல் உடையவன்; எவ்வித ஊக்கம் யுடையவனோ அவன் அந்த ஸ்வபாவத்தை அடைகிறான்.*

*ச்ரத்தை என்பது நம்பிக்கையுடன் செய்ப விரைதல். மனிதனுக்குள்ள ஊக்கத்தை யொட்டி அவன் செயலில் வெற்றி பெறுகிறான். ச்ரத்தை மனத்தின் நிலை; ஒருவன் எந்த விஷயத்தை அனுபவிக்க விரும்புகிறானோ, அதைப் பெற ஊக்கம் உடையவனாகிறான்.*

**யஜந்தே ஸாத்விகா தேவாந் யக்ஷரக்ஷாம்ஸி ராஜஸா: |**
**ப்ரேதாந் பூதகணும் ச்சாந்யே யஜந்தே தாமஸா ஜநா : ‖ 4**

*ஸத்வகுணம் மேலிட்டவர் தேவதைகளை ஆராதிக்கிறார்கள். ரஜோ குணம் மேலிட்டவர் யக்ஷர், ராக்ஷஸர்களையும், மற்றும் தாமஸ குணமுள்ளவர் பூத கணங்களையும் பிரேதத்தையும் வழிபடுகிறார்கள்.*

*நல்லவர் நல்லவரோடும், கெட்டவர் கெட்டவர்களோடும் இணங்குவது உலக இயல்பு; அதே போல ஸாத்விக குணமுள்ளவர், ஸாத்வித தெய்வமான விஷ்ணுவையும், ராஜஸ குணமுடையவர் ராஷஸர்களையும், தாமஸ குணமுளளவர் பிரேத பிசாசங்களையும் வழிபடுகிறார்கள்.*

**அசாஸ்த்ர விஹிதம் கோரம் தப்யந்தே யே தபோ ஜனா: |**
**தம்பாஹங்கார ஸம்யுக்தா: காம ராக பலாந் விதா: ‖ 5**
**கர்சயந்த : சரீரஸ்தம் பூதக்ராமமசேதஸ: |**
**மாம் சைவாந்த : சரீரஸ்தம் தாந் வித்யாஸுர நிஸ்சயான் ‖ 6**

*எவர் சாஸ்திரத்தில் விதிக்கப்படாத கடுமையான தவத்தை, டம்பம் அஹங்காரத்தோடு ஆசை, பயனில் விருப்பம் இவற்றோடு புலன்களையும், ஆத்மாவையும் துன்புறுத்திச் செய்கிறார்களோ, அவர்கள் அசுர இயல்புடையோர்.*

அஹாரஸ்த்வபி ஸர்வஸ்ய த்ரிவிதோ பவதி ப்ரிய : |
யக்ஞஸ்தபஸ்ததா தானம் தேஷாம் பேதமிமம் ச்ருணு ॥ 7

ஒவ்வொருவரின் ஆஹாரமும் மூன்று விதமாகயிருக்கும். அதே போல அவர்கள் செய்யும் தானமும், தபசும், யாகமும் வேறு பட்டவைகளாகவே யிருக்கும். அவைகளைச் சொல்லுகிறேன் கேள்.

ஆயு: ஸத்வபல ஆரோக்ய ஸுகப்ரீதி விவர்தனு: |
ரஸ்யா: ஸ்நிக்தா: ஸ்திரா ஹ்ருதயா ஆஹாரா: ஸாத்விக ப்ரியா: ॥ 8

ஆயுள், அறிவு, வலிமை, உடல் நலம், இன்பம், விருப்பம் இவைகளை வளர்க்க விரும்பி, சுவை, ஸத்து, வலிமை தருமவையாய், புசிக்க இன்பமாயுமுள்ள உணவையே ஸாத்விகர் விரும்புவர்.

கட்வம்லலவணாத்யுஷ்ண தீக்ஷ்ணரூக்ஷ விதாஹின! |
ஆஹாரா ராஜஸஸ்யேஷ்டா துக் கசோகாமயப்ரதா : ॥ 9
யாதயாமம் கதரஸம்பூதி பர்யூஷிதம் ச யத் |
உச்சிஷ்டமபிசஅமேத்யம் யோஜனம் தமாஸப்ரியம் ॥ 10

கைப்பு, புளிப்பு, உவர்ப்பு, காரம், எரிச்சல், வெப்பம் இவைகள் மிகுந்ததான உணவுகளையே ரஜோகுணம் மேலிட்டவர் விரும்புவர்; இவை துன்பம், உடல்நோய் இவைகளை உண்டுபண்ணும்.

சமைத்து காலம் தாழ்ந்த ஆறிய அன்னத்தையும், சுவையற்றதையும், துர்நாற்றமுள்ளதையும், எச்சிலையும், பரிசுத்தமற்றதையும் தமோ குணம் மேலிட்டிருப்பவர் விரும்புவர்.

அபலாகாங்க்ஷிபிர் யக்ஞோ விதித்ருஷ்டோ ய இஜ்யதே |
யஷ்டவ்யமேவேதி மன: ஸமதாய ஸ ஸாத்விக: ॥ 11

அபிஸந்தாய துபலம் தம்பார்த்தமபி சைவ யத் |
இஜ்யதே பரதச்ரேஷ்ட தம் யஜ்ஞம் வித்தி ராஜஸம் ॥ 12

விதிஹீனம் அஸ்ருஷ்ட அன்னம் மந்த்ரஹீனம் அதக்ஷிணம் |
ச்ரத்தாவிரஹிதம் யஜ்ஞம் தாமஸம் பரிசக்ஷதே ॥ 13

இனி, யஜ்ஞங்கள், பகவதாரனத்தின் மூன்று வகைகளைச் சொல்லுகிறான்.

ஒரு பயனையும் விரும்பாமல் சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டதை, நாம் பகவானின் உகப்புக்காகவே செய்ய வேண்டும் என்கிற மன உறுதியோடு செய்யப்படும் யாகம், யஜ்ஞம், பகவதாராதனம் முதலியவை ஸாத்விகமானவை.

ஒரு பயனை விரும்பியோ, சாஸ்திரம் சொல்லியபடி நடக்கிறோம் என்கிற ஆடம்பரத்துக்காகவோ, செய்யப்படுபவை ராஜஸமானவை.

சாஸ்திரம் விதிக்காததையும், அன்னதானம் இல்லாததும், மந்திரம், தக்ஷிணை இவைகளற்றதும் ச்ரத்தை இல்லாமல் செய்யப்படும் யக்ஞ யாகாதிகள் தாமஸமானவை என்று சொல்லப்படுகிறது.

தேவத்விஜ குரு ப்ராஜ்ஞ பூஜனம் சௌசம் ஆர்ஜவம் |
ப்ரஹ்மசர்யம் அஹிம்ஸா ச சரீரம் தப உச்யதே ॥ 14

அனுத்வேக கரம் வாக்யம் ஸத்யம் ப்ரியஹிதம் ச யத் |
ஸ்வாத்யாய அப்யாஸனம் சைவ வாங்மயம் தப உச்யதே ॥ 15

மன : ப்ரஸாத : ஸௌம்யத்வம் மௌனம் ஆத்ம விநிக்ரஹ: |
பாவஸம் சுத்திரத்யேதத் தபோ மானஸமுச்யதே ॥ 16

இனி மூன்றுவித தபஸ்ஸைப் பற்றிக் கூறுகிறான்.

தேவர், ப்ராஹ்மணர், ஆசார்யன் இவர்களைப் பூசிப்பதும், புண்ய நதிகளில் ஸ்நானம் செய்வதும் நேர்மையும், ப்ரஹ்மசரியமும்; அஹிம்ஸையும் உடலால் செய்யப்படும் தவம் எனப்படும்.

பிறர் மனம் புண்படும்படி, பேசாமையும், இனிமையாகப் பேசுதலும், வேதம் வேதாங்தங்களை ஓதுதலும், வாக்கினால் செய்யப்படும் தவமாகும்.

கலக்கமில்லாத மன அமைதியும், அன்புடைமை, மௌனம் (அதிகமாகப் பேசாமை), தன்னடக்கம், கண்ட விஷயங்களையும் மனத்தால் நினையாத தூய்மையும், மனத்தினாலான தபசு எனப்படும்.

காயத்தினாலும், வாக்கினாலும் மனத்தினாலும் மூவ்வகை தவத்தைப் பற்றி மேலே சொன்னேன். இனி அந்தத் தவத்தில் ஸாத்விக, ராஜஸ, தாமஸாமானவைகளைச் சொல்லுகிறான்.

ச்ரத்தயா பரயா தப்தம் தபஸ்தத் த்ரிவிதம் நரை: |
அபலாகாங்க்ஷிபிர் யுக்தை : ஸாத்விகம் பரிசக்ஷதே ॥ 17

ஸத்கார மாந பூஜார்த்தம் தபோ தம்பேந சைவ யத் |
க்ரியதே ததிஹ ப்ரோக்தம் ராஜஸம் சலம் அத்ருவம் ॥ 18

மூடக் ராஹேண ஆத்மனோ யத் பீடயா க்ரியதே தப : |
பரஸ்யோத்ஸாதநார்த்தம் வாதத் தாமஸமுதாஹ்ருதம் ॥ 19

மேலே சொன்ன மூக்கரணங்களாலும் பலனை விரும்பாமல், பகவதாராதனமாக மிக்க ஊக்கத்துடன் மனிதரால் செய்யப்படும் தவம் ஸாத்விக தவமாகும்.

பிறர் பாராட்டுதலையும், புகழ்ச்சியையும் போற்றுதலையும் கருதி ஆடம்பரத்தோடே பலனை விரும்பிச் செய்யப்படும் தவம் அதன் பயனை அனுபவிக்கும்போது அது நிலையற்றதானதால், அது எப்போது நழுவிவிடுமோ என்கிற பயத்தோடு செய்வதால் அந்தத் தவம் ராஜஸமானது எனப்படும்.

மூடக் கொள்கையினால் தன்னையே துன்புறுத்தியோ, அல்லது பிறரை அழித்தற் பொருட்டோ செய்யப்படுகிற தவம் தாமஸமானது.

இனி தானம் (கொடை) மூன்று விதமானது என்பதைக் கூறுகிறான்.

தாதவ்யமிதி யத் தாநம் தீயதே அநுபகாரிணே |
தேசே காலே ச பாத்ரே ச தத் தாநம் ஸாத்விகம் ஸ்ம்ருதம் || 20

யத்து ப்ரத்யுபகாரார்த்தம் பலமுத்திச்ய வா புந : |
தீயதே ச பரிக்லிஷ்டம் தத் தாநம் ராஜஸமுதாஹ்ருதம் || 21

அதேசகாலே யத்தாநம் அபாத்ரேப்யச்ச தீயதே |
அஸத்க்ருதம் அவஜ்ஞாதம் தத் தாமஸமுதாஹ்ருதம் || 22

நல்ல புண்ணிய க்ஷேத்திரத்தில் புண்ய காலத்தில் தகுதி பெற்றவருக்கு, பதில் உதவி எதிர்பாராமல், செய்வது நம் கடமை என்று கருதி செய்யப்படும் தானமே ஸாத்விகமானது.

கைம்மாறு கருதியோ, பலனை விரும்பியோ கெட்டுப்போன பொருளை ஒருவருக்கு வழங்குவது ராஜஸமென்று சொல்லப்படுகிறது.

நல்ல காலமில்லாமல், நல்ல தேசமில்லாமல், தக்க பாத்திரமில்லாத இடத்தில் மரியாதை யில்லாமல், அவமதிப்புடன் செய்யப்படும் தானம் தாமஸமெனப்படும்.

ஓம் தத் ஸத் இதி நிர்தேசோ ப்ரஹ்மணஸ் த்ரிவித : ஸ்ம்ருத : |
ப்ராஹ்மணஸ் தேந வேதாஸ்ச யஜ்ஞாஸ்ச விஹிதா : புரா || 23

ஓம் என்றும் தத் என்றும் ஸத் என்றும் மூன்றுவிதமான சொற்கள் வேதத்தில் உள்ளன. இம்மூன்று சொற்களும், சம்பந்தம் பெற்ற வேதம் அந்த வேதத்தை ஓதுகின்றவர், அந்த வைதீகச் செயல்களான யாகம், யஜ்ஞம் தானம், தபஸ் போன்றவை மூன்றிலேயே என்றால் ஏற்படுத்தப்பட்டு இருக்கின்றன.

வேதத்தில் சொல்லப்பட்ட யாகம், யஜ்ஞம், தானம், தபஸ் இவைகளுக்கு ஸத்வ ரஜஸ் தாமஸ் இவற்றுக்கு உள்ள பேதங்களைச் சொன்னான் இதில், அந்த வைதிக கர்மாக்கள் ஓம் என்கிற ப்ரணவத்தோடு சேர்த்தே செய்யப்படுகின்றன என்றும், தத் ஸத் என்கிற பதங்களால் சொல்லப்படுகின்றன என்பதையும் கூறுகிறான்.

வேதமறிந்த ப்ராஹ்மணர்களைக் கொண்டே, எல்லா வைதிக கர்மாக்களும் செய்விக்கப்பட வேண்டும். எந்த வேத மந்திரத்தின் ஆரம்பத்திலும் முடிவிலும் ஓம் என்கிற ப்ரணவம் சொல்லப்படும்

ஓம் என்கிற ப்ரணவம், அ என்றும் உ என்றும் ம என்றும் மூன்று எழுத்துக்களைக் கொண்டது. அகாரத்தால் பகவானை நாராயணனைச் சொல்லி மகாரத்தினால் ஜீவாத்மாக்களைச் சொல்லி, உகாரத்தால் இந்த ஜீவாத்மாக்கள் அவனுக்கே உரியவை என்பதையும் குறிக்கிறது. இப்படி ஜீவ பர ஸ்வரூபத்தைப் சொல்லும் ஓம் என்பதை 'தத்' அது என்கிறது உலகெல்லாம்; ஸத் தையே (பகவானையே) காரணமாக உடையது, ஸத்தையே ஆதாரமாகவும், லய ஸ்தானமாகவும் உடையது என்று கூறி, உபநிஷத்தில் பகவானை ஸத் என்று சொல்லியிருக்கிறது.

இப்படி ஓம், தத், ஸத் என்று கூடிய மந்திரத்துடன் செய்யப்படும் யாகம் யஜ்ஞங்களே வைதிகச் செயல்களாகும்.

**தஸ்மாத் ஓமித்யுதாஹ்ருத்ய யஜ்ஞதாநதப : க்ரியா : |**
**ப்ரவர்த்தந்தே விதாநோக்தா : ஸததம் ப்ரஹ்மவாதிநாம் ॥ 24**

ஆதலால், வேதத்தில் விதிக்கப்பட்ட யஜ்ஞம், யாகம் தானம் தபஸ் முதலியவை எப்போதும் ஓம் என்று சொல்லியே தொடங்கி நடைபெறுகின்றன.

**ததித்யநபிஸந்தாய பலம் யஜ்ஞதப: க்ரியா |**
**தாநக்ரியாஸ்ச விவிதா: க்ரியந்தே மோக்ஷ காங்க்ஷிபி: ॥ 25**

வேறு பயனை விரும்பாமல் மோக்ஷத்தையே விரும்பிச் செய்யப்படும் யஜ்ஞம், தவம், தானங்கள் தத் என்கிற சொல்லைக் கூறி செய்யப்படுகின்றன.

மோக்ஷத்தை விரும்புவர்கள் பரமாத்மாவை அறிந்தவர்களே. ப்ரக்ருதி மண்டலத்திற்கு அப்பால் வெகு தூரத்தில் பரமபதத்தில் உள்ள பகவானை அடைய விரும்புவதால் தெளிவாய் 'தத்' அது என்பதினால் கூறுகின்றனர்.

**ஸத்பாவே ஸாதுபாவே ச ஸதித்யேதத் ப்ரயுஜ்யதே |**
**ப்ரசஸ்தே கர்மணி ததா ஸச்சப்த: பார்த்த யுஜ்யதே ॥ 26**

அர்ஜுனா ! ஸத் என்னும் பதம் இருக்கும் பொருளைச் சொல்லும். அஸத் என்றால் இல்லாதது. ஸாதுபாவே—நன்றாக இருப்பதையும், புண்ய கர்மாக்களையும், ஸத் கர்மா என்றோம். நற்சொல்லும், மங்களகரமான செயலிலும் ஸத் என்பது உபயோகப்படுத்தப்படுகிறது.

யஜ்ஞே தபஸி தானே ச ஸ்த்திதி : ஸதிதி சோச்யதே |
கர்ம சைவ ததர்த்தீயம் ஸதித்யே வாபி தீயதே 27

வேள்வியிலும் தானத்திலும் தவத்திலும் நிலைத்திருப்பது 'ஸத்' எனச் சொல்லப்படும். வேறு பயனை விரும்பாமல் பகவானையே அடைய விரும்பிச் செய்யும் கர்மா 'ஸத்' எனப்படும்.

அச்ரத்தயா ஹுதம் தத்தம் தபஸ்தப்தம் க்ருதஞ்ச யத் |
அஸத் இத்யுச்யதே பார்த்த ந ச தத் ப்ரேத்ய நோ இஹ 28

குந்தி புத்ரனே ! சிரத்தையில்லாமல் செய்யப்படும் எல்லா வேள்வியும், தானமும் தவமும், மற்ற எல்லா கர்மமும் அஸத் என்று சொல்லப்படும். ஏனெனில் மறுபிறவியில்லாத மோக்ஷத்தைப் பெற அது உதவாது. இந்த லோகத்திலும் அது பயன் படாது; இம்மை மறுமை இரண்டிற்கும் உதவாது.

சிரத்தையோடு செய்யும் சாஸ்திரத்தில் சொல்லப்படாத அசுரச் செயலுக்குப் பயனில்லை என்றான் கீழ்; இங்கே, வேதத்தில் கூறப்பட்ட வைதிக கர்மாவும் சிரத்தையுடன் செய்யாவிடில் அஸத், ஒருவித பலனும் அளிக்காது என்கிறான்.

## ஸ்ரீ ஆளவந்தார் அருளிய கீதா ஸங்க்ரஹம்

**அசாஸ்த்ரம் ஆஸுரம் க்ருத்ஸ்நம் சாஸ்த்ரீயம் குணத: ப்ருதக் |**
**லக்ஷணம் சாஸ்த்ரஸித்தஸ்ய த்ரிதா ஸப்ததசோதிதம் ||**

தானே கற்பனை செய்வதும், பிறர் சொல்லைக் கேட்பதும் சாஸ்த்ரம் சொல்லாதவையும் அஸுர ஸ்வபாவமேயாம். சாஸ்த்ரம் விதிக்கப்பட்டவைகளிலும் ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என மூன்று வகைப்படும். இவற்றையும் சிரத்தையுடன் செய்தல் வேண்டும். இல்லையேல் இம்மை மறுமைக்கும் பயனில்லை, என்பதே பதினேழாம் அத்யாயத்தில் சொல்லப்படுகிறது.

ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே சரணம் !

பதினேழாம் அத்யாயம் முற்றும்.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீமத் பகவத் கீதை

## பதினெட்டாம் அத்யாயம்

இதுவே கீதா உபதேசத்தின் இறுதி அத்யாயம். இத்துடன் தன் கீதை உபதேசத்தை இனிது முடித்துக் கொள்கிறான் **கண்ணன்.**

கீழ் அத்யாயத்தில் தேவ, அசுர, ராக்ஷஸச் செயல்களை ஸத்வ ரஜஸ் தமோ குணங்களுக்கு ஏற்ப மூன்று விதமாகப் பிரித்துச் சொன்னான். ஸத்வ குணமுள்ள தேவச் செயல்களை சிரத்தையுடன். செய்து ஆத்ம நன்மையைப் பெறலாம் என்று சொல்லி, மூன் அத்தியாயத்தை முடித்திருக்கிறான்.

இனி இந்தக் கடைசி அத்யாயத்தில் முதன் முதலில் தியாகம் என்றாலும் ஸந்யாஸம் என்றாலும் ஒன்றே என்பதைச் சொல்லி, அவைகளின் தன்மைகளை விவரிக்கிறான். பிறகு, தியாகம், கர்மா, கர்த்தா, ஜ்ஞானம் த்ருதி, பயன் இவை ஒவ்வொன்றையும் ஸத்வ ரஜஸ் தமோ குணங்களுக்கேற்ப பிரித்துச் சொல்லுகிறான். பிறகு மனிதரின் வர்ணத்தை நான்கு வகையில் பிரித்து, அவரவர்களின் வர்ணத்திற்குரிய தர்மத்தை ஸாத்விக த்யாகத்துடன் செய்து ஆத்ம நன்மை பெறலாம் என்பதையும் கூறியுள்ளான். இந்த அத்யாயம் இறுதியில் பக்தியே மோக்ஷ ஸாதனம் என்பதை உறுதி படுத்தி, அதற்குத் தடையான பாபத்தைத்தானே போக்கித் தருகிறேன் என்று சொல்லி, தன் உபதேசத்தை முடித்துக் கொள்கிறான் கண்ணன்.

**அர்ஜுன உவாச** — அர்ஜுனன் கூறியது

**ஸந்ந்யாஸஸ்ய மஹாபாஹோ தத்வமிச்சாமி வேதிதும் |**
**த்யாகஸ்ய ச ஹ்ருஷீகேச ப்ருதக் கேசிநிஷூதந || 1**

க்ருஷ்ண! ஸந்யாஸத்தின் தன்மையையும் த்யாகத்தின் உண்மையையும் நான் அறிய விரும்புகிறேன்; அதை நீ எனக்கு விரிவாகச் சொல்வாயாக.

**ஸ்ரீ பகவான் உவாச - பகவானின் பதில்**

காம்யாநாம் கர்மணும் ந்யாஸம் ஸந்ந்யாஸம் கவயோ விது : |
ஸர்வகர்மபலத்யாகம் ப்ராஹுஸ்த்யாகம் விசக்ஷணு : ॥ 2

த்யாஜ்யம் தோஷவத் இத்யேகே கர்ம ப்ராஹுர் மநீஷிண: |
யஜ்ஞதானதப:கர்ம ந த்யாஜ்யம் இதி சாபரே ॥ 3

நிச்சயம் ச்ருணு மே தத்ர த்யாகே பரதஸத்தம |
த்யாகோ ஹி புருஷவ்யாக்ர த்ரிவித: ஸம்பரகீர்த்தித: 4

கருமங்களைச் செய்வதை விட்டு விடுவதே ஸந்யாஸம் என்கிறார்கள் சில ஜ்ஞானிகள்; கர்மா எதையும் விடக்கூடாது; செய்தே யாக வேண்டும். அவைகளின் பயனை விடுவதே த்யாகம் என்கிறார்கள் மற்றும் சில பண்டிதர்கள்.

கருமங்களைச் செய்வதினால் சில பிழைகள் நேரிடுகின்றன, ஆதலால் அவைகளை விட வேண்டும் என்கிறார்கள் முந்தினவர்; சாஸ்த்திரம் விதித்திருப்பதினால் எந்தக் கர்மாவையும் விடக் கூடாது என்கிறார்கள் மற்றவர்கள்.

இவற்றின் உண்மையை நான் உனக்குச் சொல்லுகிறேன் கேள் என்கிறான் கண்ணன்.

யஜ்ஞதானதப: கர்ம ந த்யாஜ்யம் கார்யமேவ தத் |
யஜ்ஞோ தானம் தபச்சைவ பாவநாநி மநீஷிணும் ॥ 5

ஏதாந்யபி து கர்மாணி ஸங்கம் த்யக்த்வா பலா நி ச |
கர்த்தவ்யாநீதி மே பார்த்த நிச்சிதம் மதமுத்தமம் ॥ 6

நியதஸ்ய து ஸந்ந்யாஸ: கர்மணோ நோபபத்யதே |
மோஹாத் தஸ்ய பரித்யாக: தாமஸ: பரிகீர்த்தித: ॥ 7

துக்கமித்யேவ ய: கர்ம காயக்லேசபயாத் த்யஜேத் |
ஸ க்ருத்வா ராஜஸம் த்யாகம் நைவ த்யாகபலம் லபேத் ॥ 8

கார்யமித்யேவ யத் கர்ம நியதம் க்ரியதேऽர்ஜுந |
ஸங்கம் த்யக்த்வா பலஞ்சைவ ஸ த்யாகஸ் ஸாத்விகோ மத: ॥ 9

அர்ஜுன! யாகம் யஜ்ஞம் தானம் தவம் போன்ற வைதிக கருமங்கள் எதையும் எவரும் விடக்கூடாது; அவை பாபத்தைப் போக்கி பரிசுத்தியைக் கொடுக்கும். எல்லா கருமங்களையும் கர்த்ருத்வ த்யாகம், மமதா த்யாகம் பலத்யாகம், என இந்த மூன்று த்யாகத்துடன் செய்வதே சிறந்தது என்பது எனது கருத்து.

த்யாகத்தின் மூன்று வகை - அறிவின்மையினால், கர்மாவை விடுவது தாமஸ த்யாகம் — உடல் வருத்தத்தைக் கருதி செயலை விடு

வது ராஜஸ த்யாகம் — பரமனின் கட்டளை என்பதை அறிந்து பகவானின் ப்ரீதிக்காக கருமங்களைச் செய்து, அவைகளின் பலனை விடுவது ஸாத்விகத் த்யாகம்; இதுவே சிறந்தது. இப்படிச் செய்பவனே த்யாகி எனப்படுவான்.

## ஸாத்விக தியாகத்தின் தன்மை

ந த்வேஷ்ட்யகுசலம் கர்ம குசலே நாநுஷஜ்ஜதே |
த்யாகீ ஸத்வஸமாவிஷ்டோ மேதாவீ சிந்நஸம்சய: || 10 ||

ந ஹி தேஹப்ருதா சக்யம் த்யக்தும் கர்மாண்யசேஷத: |
யஸ்து கர்மபலத்யாகீ ஸ த்யாகீத்யபிதீயதே || 11 ||

அநிஷ்டமிஷ்டம் மிச்ரஞ்ச த்ரிவிதம் கர்மண: பலம் |
பவத்யத்யாகிநாம் ப்ரேத்ய ந து ஸந்யாஸிநாம் க்வசித் || 12 ||

ஸாத்விக த்யாகத்துடன் கர்மாவைச் செய்கிறவன் அறிவுள்ள வனாக இருப்பான். இவன் புண்ய கருமங்களை விரும்புவதோ, பாபச் செயல்களை வெறுப்பதோ யில்லை. அவைகளினால் உண்டாகும் நன்மை தீமைகளில் பற்று அற்று உதாஸீனனாயிருப்பான். உடல் தரிக்க, நித்ய கருமங்களைச் செய்து வருவான் இவன். ஆனால் அவை களின் பலன்களில் பற்று இராது. இப்படி பலனைத் துறந்து செயல்களைச் செய்வதினால் இவனே தியாகி எனப்படுகிறான்.

இஷ்டமான பலனோ, அநிஷ்டமான பலனோ அல்லது இரண்டும் கலந்ததோ எது வந்தாலும் அவை ஸாத்விக தியாகியைச் சாராது.

## கர்த்தா யார் காரணங்கள் யாவை?

பஞ்சைதாநி மஹாபாஹோ காரணாநி நிபோத மே |
ஸாங்க்யே க்ருதாந்தே ப்ரோக்தாநி ஸித்தயே ஸர்வகர்மணாம் || 13 ||

அதிஷ்டாநம் ததா கர்த்தா கரணஞ்ச ப்ருதக்விதம் |
விவிதாச் ச ப்ருதக்சேஷ்டா தைவஞ்சைவாத்ர பஞ்சமம் || 14 ||

சரீரவாங்மநோபிர் யத் கர்ம ப்ராரபதே நர: |
ந்யாய்யம் வா விபரீதம் வா பஞ்சைதே தஸ்ய ஹேதவ: || 15 ||

செயல்கள் உண்டாக சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட ஐந்து காரணங்களைச் சொல்லுகிறேன் கேள்—உடல், ஜீவாத்மா, புலன்

கள் (மனம் உள்பட) பிராணன், பரமாத்மா. இவ்வைந்துமே ஒவ்வொரு வகையில் செயல் உண்டாகக் காரணமாகின்றன. ஜீவன் மாத்திரம் தனித்து ஒரு செயலைச் செய்கிறான் என்பதில்லை; பரமாத்மாவே மற்ற நான்கையும் தரித்து ஏவி, ஒரு செயலை செய்விக்கிறான். ஒரு செயல் உண்டாக உள்ளத்தில் உறையும் பகவான் ஜீவனைத் தூண்டுகிறான், மனம் புலன்களைத் தூண்ட பிறகே ஒரு செயல் உண்டாகிறது. ஆரம்ப கர்த்தா ஸர்வேச்வரனே. நாம் ஒரு செயலைச் செய்தால், பகவானுடைய அநுமதியில்லையேல், அச்செயல் காரியகரமாவதில்லை என்பதை நாம் காண்கிறோம். உடல், மனம், வாக்கு இவை எதினால் செயல் செய்யப்பட்டாலும் மேலே சொன்ன ஐந்துமே காரணமாகும். அதில் பகவான் முக்கிய காரணமாகிறான். இதை அறிந்தால் ஜீவன் கர்த்தாயில்லை, பகவானே கர்த்தா என்று நினைக்கத் தடையில்லை.

தத்ரைவம் ஸதி கர்த்தாரம் ஆத்மாநம் கேவலம் து ய: |
பச்யத்யக்ருதபுத்தித்வாந் ந ஸ பச்யதி துர்மதி: || 16 ||

யஸ்ய நாஹங்க்ருதோ பாவோ புத்திர் யஸ்ய ந லிப்யதே |
ஹத்வாऽபி ஸ இமாந் லோகாந் ந ஹந்தி ந நிபத்யதே || 17 ||

ஜ்ஞாநம் ஜ்ஞேயம் பரிஜ்ஞாதா த்ரிவிதா கர்மசோதநா |
கரணம் கர்ம கர்த்தேதி த்ரிவித: கர்மஸங்க்ரஹ: || 18 ||

ஜ்ஞாநம் கர்ம ச கர்த்தா ச த்ரிதைவ குணபேதத: |
ப்ரோச்யதே குணஸங்க்யாநே யதாவத் ச்ருணு தாந்யபி || 19 ||

இப்படி பகவானே கர்த்தாவாயிருக்க, அதை அறியாமல், ஜீவாத்மாவையே கர்த்தா என்று நினைப்பவன் அறிவில்லாதவன்— தன்னைக் கர்த்தாவென்று நினையாமல், தன் செயலுக்கெல்லாம் பகவானே கர்த்தா; அவைகளின் பலன்களும் அவனைச் சேர்ந்தவை என்று நினைத்திருப்பவன் போரில் பலரைக் கொன்றாலும், அவனை பாபம் அண்டாது; அர்ஜுனா! மேலும் அறிவு, கர்மா, கர்த்தா இவற்றின் மூன்றுவித பிரிவுகளையும் உனக்குச் சொல்லுகிறேன் கேள்.

## அறிவின் முவ்வகைப் பிரிவுகள்

ஸர்வபூதேஷு யேநைகம் பாவம் அவ்யயமீக்ஷதே |
அவிபக்தம் விபக்தேஷு தத் ஜ்ஞாநம் வித்தி ஸாத்விகம் || 20 ||

ப்ருதக்த்வேந து யத் ஜ்ஞாநம் நாநாபாவாந் ப்ருதக்விதாந் |
வேத்தி ஸர்வேஷு பூதேஷு தத் ஜ்ஞாநம் வித்தி ராஜஸம் || 21 ||

**யத்து க்ருத்ஸ்நவத் ஏகஸ்மிந் கார்யே ஸக்தம் அஹேதுகம் |**
**அதத்வார்த்தவத் அல்பஞ்ச தத் தாமஸம் உதாஹ்ருதம் || 22 ||**

*எல்லா ஜீவராசிகளிடத்தும் மாறுதலில்லாத ஒரேவிதமான ஆத்மாக்களைக் காண்கிறது ஸாத்விக அறிவு—ஸம்ஸார தசையில் முற்பிறவியின் வாஸனைக்குச் சேர ஆத்மாக்களின் குணங்களும் செயல்களும் மாறுபட்டிருக்கும் என்பதை அறிவது ராஜஸ அறிவாகும். உண்மைக்கும் யுக்திக்கும் மாறுதலாய் அல்பச் செயல்களை யோசனையின்றிச் செய்து முடிக்க எண்ணுவது தாமஸ அறிவு.*

## கர்மாவின் மூன்று வகைகள்

**நியதம் ஸங்க்ரஹிதம் அராகத்வேஷத: க்ருதம் |**
**அபலப்ரேப்ஸுநா கர்ம யத் தத் ஸாத்விகம் உச்யதே || 23 ||**

**யத் து காமேப்ஸுநா கர்ம ஸாஹங்காரேண வா புந: |**
**க்ரியதே பஹுளாயாஸம் தத் ராஜஸம் உதாஹ்ருதம் || 24 ||**

**அநுபந்தம் க்ஷயம் ஹிம்ஸாம் அநவேக்ஷ்ய ச பௌருஷம் |**
**மோஹாத் ஆரப்யதே கர்ம யத் தத் தாமஸம் உச்யதே || 25 ||**

*தனக்குரிய வருணம், ஆசிரமம் இவற்றையொட்டி கர்த்ருத்வம், மமதை, பலம் இவைகளை விட்டு, புகழில் விருப்பமும், பழியில் வெறுப்பும் அற்றுச் செய்வது ஸாத்விக கர்மா. பலனை விரும்பி, தன்னை செய்பவனாக நினைத்து, மிக கஷ்டப்பட்டு கர்மாவை செய்வது ராஜஸ கருமம்-நன்மை தீமை, லாபம் நஷ்டம் இவைகளைக் கருதாமலும், பலருக்குத் தீங்கை விளைவித்தும், தன் சக்திக்கு மீறி செலவு செய்தும், பகவானே கர்த்தா என்பதை அறியாமலும் செய்யப்படுவது தாமஸச் செயல்.*

## இனி கர்த்தாவின் பிரிவுகள்

**முக்தஸங்கோऽநஹம்வாதீ த்ருத்யுத்ஸாஹஸமந்வித: |**
**ஸித்த்யஸித்த்யோர் நிர்விகார: கர்த்தா ஸாத்விக உச்யதே || 26 ||**

**ராகீ கர்மபலப்ரேப்ஸு: லுப்தோ ஹிம்ஸாத்மகோऽசுசி: |**
**ஹர்ஷசோகாந்வித: கர்த்தா ராஜஸ: பரிகீர்த்தித: || 27 ||**

**அயுக்த: ப்ராக்ருத: ஸ்தப்த: சடோ நைஷ்க்ருதிகோऽலஸ: |**
**விஷாதீ தீர்க்கஸூத்ரீ ச கர்த்தா தாமஸ உச்யதே || 28**

*பலனை இச்சியாமல், தன்னைக் கர்த்தாவென்று நினையாமல், ஊக்கம் உறுதியுடன், வெற்றி தோல்விகளில் மன விகாரமற்று*

கர்மாவைச் செய்பவன் ஸாத்விக கர்த்தா—பலனை விரும்புவனும் பணச்செலவு செய்யாத லோபியும், பிறரைத் துன்புறுத்துவனும், பரிசுத்தியில்லாதவனும், வெற்றி தோல்விகளில் மனவிகாரம் அடைபவனும் ராஜஸகர்த்தா; வைதிக கர்மாவை செய்யத் தகுதியில்லாதவனும், பிறருக்குக் கெடுதலையே செய்பவனும் தனக்குரிய செயலைச் செய்யாதவனும், சோம்பேறியும் சோர்வுடையவனுமான இவர்கள் தாமஸ கர்த்தா.

## புத்தியின் வேறுபாடுகள்

புத்தேர் பேதம் த்ருதேச்சைவ குணதஸ் த்ரிவிதம் ச்ருணு |
ப்ரோச்யமாநம் அசேஷேண ப்ருதக்த்வேந தநஞ்ஜய || 29

ப்ரவ்ருத்திஞ்ச நிவ்ருத்திஞ்ச கார்யாகார்யே பயாபயே |
பந்தம் மோக்ஷஞ்ச யா வேத்தி புத்திஸ் ஸா பார்த்தஸாத்விகீ || 30

யயா தர்மம் அதர்மஞ்ச கார்யஞ்சாகார்யமேவ ச |
அயதாவத் ப்ரஜாநாதி புத்திஸ் ஸா பார்த்த ராஜஸீ || 31

அதர்மம் தர்மமிதி யா மந்யதே தமஸZZவ்ருதா |
ஸர்வார்த்தாந் விபரீதாம்ச்ச புத்தி: ஸா பார்த்த தாமஸீ || 32

மற்ற தர்மங்களையும், மோக்ஷ தர்மத்தையும் தேச காலத்திற்கேற்ப செய்யவேண்டியவைகளையும், பயத்தைக் கொடுக்கக் கூடியதும், பயமில்லாததையும் ஸம்ஸார பந்தத்தையும் உள்ளபடி அறிவதே ஸாத்விகபுத்தி (மற்ற தர்மங்கள், பயத்தைக் கொடுப்பது, ஸம்ஸார பந்தம் இவைகளை, விடுவதற்காக அறிய வேண்டும்).

தர்மம் அதர்மம், செய்யத்தக்கது செய்யத்தகாதது இவைகளை உள்ளபடி அறியாமல், ஒன்றை மற்றொன்றாக அறிவது ராஜஸ புத்தி.

எதையும் உள்ளபடி அறியாமை, அதர்மத்தை தர்மம் என அறிவது போன்ற இவையெல்லாம் தாமஸபுத்தி.

## த்ருதி (உறுதியின்) தன்மையும் மூன்று வகையாகும்:

த்ருத்யா யயா தாரயதே மந: ப்ராணேந்த்ரியக்ரியா: |
யோகேநாவ்யாபிசாரிண்யா த்ருதி: ஸா பார்த்த ஸாத்விகீ || 33

யயா து தர்மகாமார்த்தாந் த்ருத்யா தாரயதேZர்ஜுந |
ப்ரஸங்கேந பலாகாங்க்ஷீ த்ருதி: ஸாபார்த்த ராஜஸீ || 34

யயா ஸ்வப்நம் பயம் சோகம் விஷாதம் மதமேவ ச |
ந விமுஞ்சதி துர்மேதா: த்ருதிஸ் ஸா பார்த்த தாமஸீ || 35

எந்த உறுதியினால் மனம், பிராணன் மற்ற புலன்களையும் தான் செய்யும் யோகத்திலிருந்து நழுவவிடாமலிருக்கிறானோ, அது ஸாத்விக த்ருதி மோக்ஷம் தவிர மற்ற அறம் பொருள் இன்பங்களில் பற்றுதல் உடையவனாய், அவைகளைப் பெறச் செய்யும் கருமங்களில் உள்ள உறுதி ராஜஸ த்ருதி துன்பம், மனக்கலக்கம், அச்சம், செருக்கு இவைகளை விடாமலிருக்கும் உறுதி தாமஸ த்ருதி.

## இனி கரும பலன்களின் பிரிவு :

ஸுகம் த்விதாநீம் த்ரிவிதம் ச்ருணு மே பரதர்ஷப |
அப்யாஸாத் ரமதே யத்ர துக்காந்தஞ்ச நிகச்சதி || 36

யத் தத் அக்ரே விஷமிவ பரிணாமேZம்ருதோபமம் |
தத் ஸுகம் ஸாத்விகம் ப்ரோக்தம் ஆத்மபுத்திப்ரஸாதஜம் || 37

விஷயேந்த்ரியஸம்யோகாத் யத் தத் அக்ரேZம்ருதோபமம் |
பரிணாமே விஷமிவ தத் ஸுகம் ராஜஸம் ஸ்ம்ருதம் || 38

யத் அக்ரே சாநுபந்தே ச ஸுகம் மோஹநமாத்மந: |
நித்ராலஸ்யப்ரமாதோத்தம் தத் தாமஸம் உதாஹ்ருதம் || 39

அர்ஜுன ! கீழ்ச் சொன்னவைகளின் பலன்களும் மூன்று விதமாகயிருக்கும். அதையும் சொல்லுகிறேன் கேள்.

முதலில் விஷம்போல் துன்பமாயும், முடிவில் அம்ருதம்போல் இன்பமாயும் இருக்கும் யோக பலத்தினால் பெறக்கூடிய ஆத்மானுபவம் ஸாத்விக சுகம் — முதலில் அம்ருதம் போலும் முடிவில் விஷம் போலும் துன்பமாயுள்ள, புலன்களால் பெறக்கூடிய விஷய சுகம்–ராஜஸ சுகம் — அனுபவிக்கும் போதும் துன்பமாய், அறிவின்மை, உறக்கம், சோம்பல், சோர்வு, கவனமின்மை இவைகளை உண்டாக்கி, துன்பத்திலேயே முடிவது தாமஸ சுகம் (இது சுகமே அன்று; தாமஸகுணமுள்ளவனுக்கு இது சுகமாகத் தோன்றும்).

ந ததஸ்தி ப்ருதிவ்யாம் வா திவி தேவேஷு வாபுந: |
ஸத்வம் ப்ரக்ருதிஜைர் முக்தம் யத் ஏபிஸ் ஸ்யாத் திரிபிர்குணை: || 40

அர்ஜுன ! ப்ரக்ருதியினால் உண்டாகும் இம் முக்குணங்களிலிருந்து விடுபட்ட ஜீவன், இம் மண்ணுலகிலுமில்லை; விண்ணுலகத்திலுமில்லை. (நான்முக ப்ரஹ்மா முதல் எல்லா தேவர்களும் இம் முக்குணங்களுக்கு உட்பட்டவர்களே).

இதிலிருந்தே ஸம்ஸார பந்தத்தைப் போக்கி மோக்ஷம் பெறும் உபாயத்தைச் சொல்ல ஆரம்பிக்கிறான்.

ப்ராஹ்மண க்ஷத்ரியவிசாம் சூத்ராணாஞ்ச பரந்தப |
கர்மாணி ப்ரவிபக்தானி ஸ்வபாவப்ரபவைர் குணை: ॥ 41

சமோ தமஸ் தபச் சௌசம் க்ஷாந்திரார்ஜவமேவ ச |
ஜ்ஞானம் விஜ்ஞானம் ஆஸ்திக்யம் ப்ராஹ்ம கர்ம ஸ்வபாவஜம் ॥ 42

சௌர்யம் தேஜோ த்ருதிர் தாக்ஷ்யம் யுத்தே சாப்யபலாயனம் |
தானம் ஈச்வரபாவச்ச க்ஷாத்ரம் கர்ம ஸ்வபாவஜம் ॥ 43

க்ருஷி கோரக்ஷ்ய வாணிஜ்யம் வைச்யம் கர்ம ஸ்வபாவஜம் |
பரிசர்யாத்மகம் கர்ம சூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம் ॥ 44

அர்ஜுன! அந்தணர், க்ஷத்ரியர், வைச்யர் சூத்ரர் என ஜாதிகள் நான்கு. அந்தந்த ஜாதிக்குரிய குணங்களும், தொழிலும் முற்பிறவி வாஸனைக்குச் சேர வேறுபட்டிருக்கும்.

புலன்களை அடக்கல், தூய்மை, பொறுமை, நேர்மை, சாஸ்திர ஜ்ஞானம், வேதாந்த அறிவு, ஈச்வர நம்பிக்கை இவையெல்லாம் அந்தணருக்கு இயற்கையாக இருக்கும் குணங்கள் — சூரத் தன்மை, துணிவு, மன உறுதி, போரில் புறம் காட்டாமை, அரசு ஆளுகை, இவையெல்லாம் க்ஷத்திரியனுக்கு இயல்பான குணங்கள்; கோரக்ஷணை (பசுவை காப்பாற்றுதல்), வாணிபம் இவை வைச்யனுக்குள்ள குணங்கள் — மேலே சொன்ன மூன்று வர்ணத்தருக்கும் பணிவிடை செய்வது சூத்ரனின் குணம்.

இவர்களின் தொழில்கள் வேறுபட்டிருந்தாலும் அவைகளின் பலன்களில் வேறுபாடில்லை. அவரவருக்குரிய தொழிலை செய்திருந்தே அவர்கள் எல்லோரும் மோக்ஷ பலன் பெறலாம் என்பதை மேலே விவரிக்கிறான்.

ஸ்வேஸ்வே கர்மண்யபிரத: ஸம்ஸித்திம் லபதே நர: |
ஸ்வகர்மநிரத: ஸித்திம் யதா விந்ததி தத் ச்ருணு ॥ 45

யத: ப்ரவ்ருத்திர் பூதானாம் யேந ஸர்வமிதம் ததம் |
ஸ்வகர்மணா தம்ப்யர்ச்ய ஸித்தம் விந்ததி மானவ: ॥ 46 ॥

தன் தன் வர்ணத்துக்குரிய செயலைச் செய்பவன் மேலான பலனைப் பெறுகிறான். (அதாவது மோக்ஷம் பெறுகிறான்.) அவர்கள் அதை அடையும் வழியைச் சொல்லுகிறேன், கேள்.

எல்லா உயிர்களின் ச்ருஷ்டி ஸ்திதி, ப்ரவர்த்தி (படைத்தல் காத்தல், செயலை செய்வித்தல்) எவனுக்கு அதீனமோ (வசப் பட்டுள்ளதோ), அவைகள் எல்லாவற்றிலும் கரந்து எங்கும் பரந்துளன் என்கிறபடி) ''ஸர்வ அந்தர்யாமியாய்'' ''அந்த: ப்ரவிஷ்ட: சாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா'' என்றும் அந்தர்பஹி ; ச தத்ஸர்வம் வியாப்ய நாராயணஸ் ஸ்தித: என்றும், பரந்து, மறைந்துள்ள பரமபுருஷனை தன் வர்ணத்திற்குரிய செயல்களால் நன்கு ஆராதித்து (ப்ரீதி செய்து), இந்த நான்கு வருணத்தினரும் மேலான மோக்ஷ பலனை அடைகிறார்கள். (எம்பெருமானுக்கு உகப்பை உண்டாக்கும் செயலே பூஜை; ஆராதனம் எனப்படும்) அவரவர் வர்ணத்தின் தர்மத்தைச் செய்வதே இறைவனுக்கு உகப்பாகும்.

ச்ரேயாந் ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத் ஸ்வநுஷ்டிதாத் ।
ஸ்வபாவநியதம் கர்ம குர்வந் நாப்நோதி கில்பிஷம் ॥ 47 ॥

நிறைவாகச் செய்யப்படும் மற்ற வருணத்தவரின் தர்மத்தைக் காட்டிலும் ஒருவனுக்கு குறைவாகச் செய்யப்படும் தனக்குரிய தர்மமே மேலானது; தன் வருணத்தின் தர்மத்தைச் செய்பவன் எப்பொழுதும் விநாஸத்தை அடைவதில்லை. ஸ்வதர்மம் என்றால் தனக்குச் செய்ய சக்தியுள்ள தர்மம். தான் செய்யப் பழக்கப்பட்ட தர்மம் அதாவது, கர்ம யோகம்; பரதர்மம் என்றால் தான் செய்ய சக்தியில்லாததாய், தனக்குப் பழக்கமில்லாத, புலன்களை அடக்கிச் செய்யவேண்டிய ஜ்ஞான யோகம் என்று ராமாநுஜர் இதற்குப் பொருள் கூறியிருக்கிறார். ஜ்ஞான யோகத்தைப் பூர்த்தியாகச் செய்வதை விட, கர்மயோகத்தைக் குறைவாகச் செய்தாலும் இதுவே மேலானது.

ஸஹஜம் கர்ம கௌந்தேய ஸதோஷமபி ந த்யஜேத் ।
ஸர்வாரம்பா ஹி தோஷேண தூமேநாக்நிரிவாzzவ்ருதா: ॥ 48 ॥

அஸக்தபுத்திஸ் ஸர்வத்ர ஜிதாத்மா விகதஸ்ப்ருஹ: ।
நைஷ்கர்ம்யஸித்திம் பரமாம் ஸந்ந்யாஸேநாதிகச்சதி ॥ 49 ॥

ஸித்திம் ப்ராப்தோ யதா ப்ரஹ்ம ததாzzப்நோதி நிபோத மே ।
ஸமாஸேந து கௌந்தேய நிஷ்ட்டா ஜ்ஞாநஸ்ய யா பரா ॥ 50 ॥

அர்ஜுன! உனக்குரிய செயலைச் செய்வது இயற்கையானது. தவறுதல் நேராதது. சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டது; செய்வ தற்குச் சுலபம். உனக்கு கஷ்டமாகத் தோன்றினாலும், அதை நீ

விடக்கூடாது—புத்தி, மனம் இவைகளை புலன்வழி விஷயங்களில் செல்லாமல் அடக்கி, ஒரு பலனையும் விரும்பாமல் செயல் புரியும் த்யாகி, ஜ்ஞான யோகத்தினால் பெறக்கூடியதை விட மேலான பதவியை அடைகிறான் — அர்ஜுன! கர்ம யோகத்தினால் ஆத்ம தியானத்தைப் பெற்றவன், எவ்வாறு ஆத்மானுபவத்தை அடைகிறான் என்பதை நான் சொல்லுகிறேன், கேள். (இங்கே ப்ரஹ்மம் என்பதற்கு ஜீவாத்மா என்பதே பொருள்).

புத்யா விசுத்தயா யுக்தோ த்ருத்யாऽऽத்மாநம் நியம்ய ச |
சப்தாதீந் விஷயாந் த்யக்த்வா ராகத்வேஷௌ வ்யுதஸ்ய ச || 51 ||

விவிக்தஸேவீ லக்வாசீ யதவாக் கயாமாநஸ: |
த்யாநயோகபரோ நித்யம் வைராக்யம் ஸமுபாச்ரித: || 52 ||

அஹங்காரம் பலம் தர்ப்பம் காமம் க்ரோதம் பரிக்ரஹம் |
விமுச்ய நிர்மம: சாந்தோ ப்ரஹ்மபூயாய கல்பதே || 53 ||

பரிசுத்த ஜீவாத்மாவை அடையும் வழி — பரிசுத்த ஜீவனின் உண்மையான ஸ்வரூபத்தை அறிய வேண்டும். விஷயங்களில் வாஸனை, ருசியை விட்டு, அவைகளில் விருப்பம் வெறுப்பு அற்று இருக்க வேண்டும். அதிகமாய் மனிதர் நடமாடாத இடத்தில் இருக்க வேண்டும். மனம் புத்தி வாக்கு இவைகள் ஆத்ம த்யானத்திற்குத் தக்கதாயிருக்க வேண்டும்; மற்றவைகளில் ஆசையை விட்டுத் தன் - ஆத்மாவையே, எப்போதும் த்யானம் செய்ய வேண்டும் — தான் தனது என்ற அஹங்காரமில்லாதவனாய் ஒரு பலனையும் விரும்பாமல் கர்மயோகம் செய்ய வேண்டும். கொழுப்பு, காமம், கோபம் இவைகளைத் துறந்து சாந்தியுடன் ஆத்ம த்யானம் செய்யத் தகுதியுள்ளவனாக யிருக்க வெண்டும்.

இப்படியிருந்து ஆத்ம த்யானம் செய்பவன் ஆத்ம தரிசனம் பெற்று பகவத் பக்தி அடைகிறான் என்கிறான் இதற்கு மேல்.

ப்ரஹ்மபூத: ப்ரஸந்நாத்மா ந சோசதி ந காங்க்ஷதி |
ஸம: ஸர்வேஷு பூதேஷு மத்பக்திம் லபதே பராம் || 54

மேலே சொன்னபடி ஒருவன் ஆத்ம த்யானம் செய்தால் அவன் ஆத்ம ஸாக்ஷாத்காரம் (தரிசனம்) பெறுகிறான். தன் ஜீவனை பரிசுத்த நிலையில் அனுபவித்து மன அமைதியை அடைகிறான். இவனுக்கு விஷய வாஸனை சிறிதும் இராது. எதிலும் விருப்பு வெறுப்பு அற்று இருப்பான். எல்லா ஜீவராசிகளிடத்தும் சம

புத்தியுள்ளவனாக இருப்பான். இவனுக்கு பகவத் பக்தி உண்டாகும். இதுவே பரபக்தி என்பது.

**பக்த்யா மாமபிஜாநாதி யாவாந்யச்சாஸ்மி தத்வத: |**
**ததோ மாம் தத்வதோ ஜ்ஞாத்வா விசதே தத்நந்தரம் || 55**

இப்படி என்னிடம் பக்தி பெற்றவன்; நான் யார் எத்தன்மையன் என்று என் ஸ்வரூப ரூப குணங்களை என் அருளினாலேயே, அறிகிருன்; இது ப்ரஜ்ஞானம். தன்னிடம் உண்மையான பக்தி (அன்பு) உள்ளவனுக்கு பகவான் தானே தன் ஸ்வரூப குணங்களைப் புலப்படுத்துகிருன்.

இந்த அத்யாயம் முதலில் தியாகம், அறிவு, கர்மா, புத்தி, த்ருதி, பலன் இவைகளின் பிரிவுகளை அதாவது ஸத்வ குண முள்ளவைகளையே முமுக்ஷு கைக்கொள்ள வேண்டும் என்பதற்காகச் சொன்னான். பிறகு பரமாத்மாவே எல்லாச் செயல்களுக்கும் கர்த்தா; ஜீவன் கர்த்தாவல்லன் என்பதை விளக்கினான். அதற்குப் பிறகு பகவத் பக்தி உண்டாகும் வழியை அடைவே சொல்லி வருகிருன்.

ஒரு ஜீவனுக்கு மனிதப் பிறவி கிடைத்தல் அரிது; பல பிறவிகளின் புண்ய பலனாக மானிடப்பிறவி கிடைக்கிறது. இதை வீணாக்காமல், மறுபிறவியில்லாத, மோக்ஷத்தை அடைவதே மேலான பயன். இம்மனிதப் பிறவியை குலம் தாங்கும் நான்கு சாதிகளாகப் பிரித்து, அவரவர்களுக்குரிய கர்மாவை, மூன்றுவித தியாகத்துடன் செய்துவர வேண்டும்; அவ்வாறு செய்துவந்தால், ஆத்ம சிந்தனம் ஏற்பட்டு ஜீவாத்ம தரிசனம் பெறலாம். அதன் பிறகு பகவத் பக்தி உண்டாகும். அதை பரஜ்ஞான பரம பக்தியாக வளரச் செய்து, தன்னை அடையும்படி பகவானே செய்விக்கிருன் என்பதை இது வரையில் சொல்லி முடித்திருக்கிருன் கண்ணன். ஓர் அழகிய பெட்டியில் நிதி வைக்கப்பட்டிருக்கிறதென்றால், அந்தப் பெட்டியைப் பார்த்து, அதைத் திறந்த பிறகே அந்த நிதியைப் பெறமுடியும்; ஜீவாத்மா ஒளி மயமான ஓர் அழகிய பெட்டி. அதைப் பார்த்த உடன், அதில் உள்ள கோபால ரத்தினத்தைப்பெற இச்சை (அன்பு) உண்டாகிறது. இதுவே பரமனிடம் பக்தி. அன்பு, பர பக்தியாக வளர்கிறது. இந்த பரபக்தி உண்டானவனுக்கு, அந்த பரமாத்மாவே தன்னைக் காட்டிக் கொடுக்கிருன்; இது பரஜ்ஞானம்; இந்த அறிவு உண்டானால், அந்த உயர்ந்த ரத்னத்தைப் பெற

துடிப்பு ஏற்படுகிறது ; இது பரமபக்தி. அதைப் பெறுகிறான்; அதாவது பகவானை அடைகிறான். இப்படி ஒரு ஜீவன் மோக்ஷம் பெறும் வழியை அழகாகச் சொல்லி வருகிறான் க்ருஷ்ணன்.

ஒரு ஜீவனுக்கு அவன் பிறக்கும் போதும் கஷ்டம்; இருக்கும் நாட்களிலும் கஷ்டத்தையே அனுபவிக்கிறான்; மரணம் அடையும் போதும் இதற்கு மேல் கஷ்டம். இப்படி மாறி மாறி பல பிறவிகள் எடுத்துக்கொண்டே இருக்கின்றான். மனிதனாய்ப் பிறந்த ஒருவன் "இனிப் பிறவி யான் வேண்டேன்" என்கிறபடி மறு பிறவியில்லாத மோக்ஷத்தை அடைய விரும்ப வேண்டும்; இவனே முமுக்ஷு; இந்த உயர்ந்த மோக்ஷ பலனைப் பெற பகவத் பக்தியே ஸாதனம்.

பகவத் பக்தி உண்டாக நாம் ஜீவாத்ம தரிசனம் பெற வேண்டும்; ஜீவாத்ம தரிசனம் பெற ஜீவாத்ம த்யானம், சிந்தனம் வேண்டும்; இதற்கு ஜீவாத்மா பற்றிய ஜ்ஞானம் வேண்டும். இதைப் பெற விஷய வைராக்யம் வேண்டும். மற்ற விஷயப் பற்றுகளை விட்டு ஜீவாத்மாவையே சிந்தித்திருக்க, கர்மயோகம் வேண்டும்; அதாவது அவனவனுக்கு விதித்துள்ள, வர்ணாச்ரம தர்மத்தை, பகவத் சரீர பூத: ஜீவ :" (பகவானுக்கு இந்த ஜீவன் உடலாக விளங்குகிறான்) என்கிற ஜ்ஞானத்துடன், தன்னைச் செய்பவனாக நினையாமல், பகவானே செய்விக்கிறான், என்று தான் ஒரு பயனையும் விரும்பாமல் செய்து வர வேண்டும். இதையே க்ருஷ்ணன் இந்த அத்யாயத்தில் இது வரை உபதேசித்தான்.

ஸர்வகர்மாண்யபி ஸதா குர்வாணோ மத்வ்யபாச்ரய: |
மத்ப்ரஸாதாத் அவாப்நோதி சாச்வதம் பதம் அவ்யயம் || 56

சேதஸா ஸர்வகர்மாணி மயி ஸந்ந்யஸ்ய மத்பர: |
புத்தியோகம் உபாச்ரித்ய மச்சித்த: ஸததம் பவ || 57

மச்சித்தஸ் ஸர்வதுர்காணி மத்ப்ரஸாதாத் தரிஷ்யஸி |
அத சேத் த்வம் அஹங்காராத் ந ச்ரோஷ்யஸி விநங்க்ஷ்யஸி || 58

நித்யம், நைமித்யம் காம்யம் மற்றும் எல்லா வித கருமங்களையும் பலனை விரும்பாமல் செய்து வந்து, என்னையே பற்றி யிருப்பவன் எனது அருளினாலேயே நிலையான மோக்ஷம் பெறுகிறான் — ஆதலால் அர்ஜுனா! நீ ஆத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்து, கர்மாக்களை யெல்லாம் எனக்கு அர்ப்பணம் செய்து உன் மனத்தை எப்போதும் என்னிடம் வைத்திருப்பாயாக. இப்படிச் செய்து வந்தால நீ ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபட்டு, என்னையே அடைவாய்

— நான் சொல்வதைக் கேளாமல் 'நான் எனது' என்று அஹங்கரித்திருப்பாயாகில், நீ விநாசத்தையே அடைவாய் என்று சிந்திக்கிறான் கண்ணன்.

யத்யஹங்காரம் ஆச்ரித்ய ந யோத்ஸ்ய இதி மந்யஸே |
மித்யைஷ வ்யவஸாயஸ் தே ப்ரக்ருதிஸ் த்வாம் நியோக்ஷ்யதி || 59

ஸ்வபாவஜேந கௌந்தேய நிபத்த: ஸ்வேந கர்மணா |
கர்த்தும் நேச்சஸி யந் மோஹாத் கரிஷ்யஸ்யவசோऽபி தத் || 60

"என் நன்மை, தீமையை நான் அறிவேன்" என்று அஹங்கரித்து நீ இப்போது போர் செய்ய மறுத்தாலும், உன் எண்ணம் ஈடேறாது; உன் இயல்பு உன்னைப் போரிலேயே கொண்டு சேர்ப்பிக்கும்; உன் எண்ணம் பலிக்காது, பொய்த்துப் போகும்.

அர்ஜுன! நீ உன் அறிவின்மையினால் எந்தப் போரை வேண்டாம் என்கிறாயோ, உன் வீர்ய, சௌர்ய பராக்ரமத்தினாலும் பிறர் உன்னை ஏசுவதினாலும் அதை நீ செய்தே தீருவாய்; இதில் ஐயமில்லை.

இதுவரையில் ஸ்ரீ க்ருஷ்ணன், ஒருவனுக்கு பக்தி உண்டாகும் வழியையும், அந்த பக்தியே மோக்ஷஸாதனம் என்பதையும் விரிவாக உபதேசித்தான். இனி, மேல் ஆறு சுலோகங்களில் பக்தி ஒன்றினாலேயே ஒருவன் தன்னை அடைய முடியும் என்பதையும், அந்த பக்திக்குத் தடையான பாபங்களை யெல்லாம் தானே போக்கித் தருகிறவன் என்பதையும் இதுவே தன் முடிவான கருத்து என்று உறுதியாகச்சொல்லி, தன் உபதேசத்தை முடித்துக் கொள்கிறான்.

ஈச்வரஸ் ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேசேऽர்ஜுந திஷ்டதி |
ப்ராமயந் ஸர்வபூதாநி யந்த்ராரூடாநி மாயயா || 61

அர்ஜுன! உடலாகிய யந்திரத்தில் எல்லா உயிர்களையும் (ஜீவன்களை) தன் ப்ரக்ருதியான மாயையினால் கட்டி ஆட்டி வைத்துக் கொண்டு, அவைகளின் உள்ளத்தில் உறைபவன் ஸர்வேச்வரனான நானே.

ஒரு பொம்மலாட்டக்காரன் எப்படி தன் விரல்களில் நுண்ணிய ஒரு நூலினால் அந்த பொம்மையை கட்டிவைத்துக் கொண்டு, அதை ஆட்டுகிறானோ, அதுபோல எல்லோருடைய

இருதயத்திலும் மறைந்திருந்து, ப்ரக்ருதி என்னும் தனக்கு கட்டுப்பட்ட மாயையினால் மற்றவரைக் கட்டி, அவரவரின் முற் பிறவியின் பயனுக்குத் தக்கபடி ஆட்டி வைக்கிறான் (செயல் படுத்துகிறான்) ஸர்வேச்வரன். அவன் ஒரு சூத்ரதாரி.

**தமேவ சரணம் கச்ச ஸர்வபாவேந பாரத |**
**தத்ப்ராஸாதத் பராம் சாந்திம் ஸ்த்தாநம் ப்ராப்ஸ்யஸி சாச்வதம் || 62**

*அர்ஜுன ! உள்ளத்தில் உறையும் அந்தத் திருமாலை எல்லாப் படியாலும் நீ சரணமாகப் பற்று; அவனுடைய அருளினால் நிறைந்த மனச்சாந்தியையும், ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலை யும் அடைந்து, நிலையான மோக்ஷ இன்பத்தை அடைவாய்.*

*கீழ்ச்சொன்ன ப்ரக்ருதியின் கட்டிலிருந்து விடுதலை அடையும் உபாயத்தை இதில் சொல்லுகிறான், 'மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாம் ஏதாம் தரந்திதே'' என்று கீழேயே இதைக் கூறியுள்ளான் கண்ணன்.*

*நம்மை ஸம்ஸாரத்தில் கட்டி வைப்பதில் அவன் எப்படி, சத்ய சங்கல்பனோ அதே போல அக்கட்டிலிருந்து நம்மை விடுவிப் பதிலும் ஸத்ய ஸங்கல்பனாகிறான். நம்மால் நம் முயற்சியினால் அக்கட்டை அவிழ்க்கப் போகாது; அவன் காலை நாம் கட்டினால் (சரணம் அடைந்தால்; அக்கட்டு தானே அவிழ்ந்துவிடும்.*

ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

## ஸ்ரீ கீதா சரம சுலோகார்த்தம் ஆரம்பம்

*உலகிலுள்ள உயிர்களை உடலாகிய யந்திரத்தில் பிணைத்து ப்ரக் ருதியான மாயையினால் அவர்களை ஆட்டி வைக்கிறான் பகவான்; அவர்களின் உள்ளத்தே உறையும் திருமாலை உணர்ந்து அவனையே சரணம்பற்றினால், நீ ஆத்ம நன்மையை அடைவாய் என்று சொல்லி, க்ருஷ்ணன் தன் உபதேசத்தை ஒருவாறு முடித்துக் கொண்டான் கீழ்.*

*கீதா சாஸ்திரத்தின் ஸாரமான (உயிரான) சரம சுலோகத்தை, உபதேசிக்கும் முன் அர்ஜுனன் அதற்குத் தகுதி உள்ளவனா என்ப தைச் சோதிக்கிறான் மேல் சுலோகத்தினால்.*

**இதி தே ஜ்ஞாநம் ஆக்யாதம் குஹ்யாத் குஹ்யதரம் மயா |**
**விம்ருச்யைதத் அசேஷேண யதேச்சஸி ததா குரு || 63**

அர்ஜுனா! இது வரையில் சிறந்த பல தர்மங்களை உனக்கு என்னால் சொல்லப்பட்டன அவை அனைத்தையும், நீ ஆராய்ந்து பார். அவைகளினால் எதை நீ செய்ய விரும்புகிறாயோ, அதைச் செய்,'' என்கிறான்.

''யச், ச்ரேயஸ் ஸ்யாந் நிச்சிதம் ப்ரூஹி தந்மே'' எதைச் செய்தால், ஆத்ம நன்மை உண்டாகுமோ, அதை நீயே நிச்சயித்துச் செய்வாயாக'' என்பது அர்ஜுனனின் வேண்டுகோள். ஆனால் கண்ணன் ஒன்றை நிச்சயித்துச் சொல்லாமல்.'' உனக்கு எது இஷ்டமோ அதைச் செய்'' என்கிறான். இதைக் கேட்டதும் அர்ஜுனனுக்குக் கலக்கம் உண்டாயிற்று. பகவான் நம்மைக் கைவிடப் பார்க்கிறான் என்று கலங்கினான்.

பஞ்சவடியிலே ஸ்ரீராமன் லக்ஷ்மணனைப் பார்த்து, நீரும் நிழலும் வாய்த்துள்ள ஓர் இடத்தை நீயே தேர்ந்தெடுத்து, அங்கு ஒரு பர்ண சாலை அமைத்திடு'' என்று சொன்னான்; ராமனுடைய இச்சையையே அநுசரித்து நடக்கும் பரதந்திரனை தன் தலையில் தன் இச்சைக்குச் சேரச் தேர்ந்தெடுக்கும் உரிமையை இப்போது ராமன் தன் தலையில் வைக்கிறானே என்று லக்ஷ்மணன் கலங்கினாப்போல இங்கே அர்ஜுனன் கலக்க முறுகிறான்.

இது வரையில் க்ருஷ்ணன் சொன்னவற்றை, ஆராய்ந்து பார்க்கிறான். அர்ஜுனன் முதன் முதலில் உனக்குரிய கர்மாநுஷ்டானத்தைச் செய், இதுவே ஆத்ம நன்மை; ஆத்ம சிந்தனம் செய், இதுவே உனக்கு ச்ரேயஸ் என்று இப்படி, பல தர்மங்களை கூறி, ஒவ்வொன்றையுமே சிறந்தது என்று சொல்லியிருக்கிறான். அவைகளில் எதைச் செய்வது எதை விடுவது என்பது அர்ஜுனனுக்கு விளங்கவில்லை, கலங்குகிறான்

மேலும், ஜீவாத்மா அனைத்தும் எனக்குச் சரீரம், அவைகளுக்கெல்லாம் நானே, ஆத்மாவாகயிருக்கிறேன். உடலின் நன்மையை ஆத்மாவே தேடிக் கொள்கிறது, ''என் உடம்பின் அழுக்கை நானே போக்கிக் கொள்ளுவேன்'' உடலான நீ ஒன்றும் செய்வதற்கில்லை'' என்றும் கிருஷ்ணன் சொல்லியிருக்கிறான்.

அவன் சொன்ன கர்ம யோகம், ஜ்ஞான யோகம், பக்தியோகம் இவைகளைச் செய்வதா, அல்லது ஆத்ம சரீர உறவை யிட்டு ஒன்றையும் செய்யாமல் விடுவதா? என்பதே அர்ஜுனனின் கலக்கம்.

பல்லி சாஸ்திரம் தெரிந்த ஒருவன் பழம் பறிக்க ஒரு மரத்தின் மீது ஏறுகிறான்; பாதி மரம் ஏறினதும் ஒரு பல்லி அவனை ஏறாதே என்கிறது; அவன் இறங்கப் பார்க்கிறான்: அப்போது மற்றொரு பல்லி 'கீழே இறங்காதே' என்கிறது; இதுபோல உள்ளது கண்ணனின் முன் பின் உபதேசங்கள்.

இதுவரையில் கிருஷ்ணன் செய்த உபதேசமெலாம் அர்ஜுனன் மனத்தைச் சோதிப்பதற்காகவே; இப்போது உன் இஷ்டப்படி செய் என்று சொன்னதும் அதையொட்டியதே. உயர்ந்த சரம சுலோக அர்த்தத்தைப் பெற அர்ஜுனன் அதிகார பூர்த்தி (தகுதி) பெற்றிருக்கிறான் என்று அறிவதே கண்ணனின் கருத்து.

அர்ஜுனனுடைய இக்கலக்கத்தைக் கண்ட க்ருஷ்ணன், "அர்ஜுன நீ இப்போது அதிகார பூர்த்தி பெற்றவன். உனக்கு சிறந்த சாஸ்திரப் பொருளை இப்போது சொல்லுகிறேன் என்று கூறி, மேல் சுலோகத்தில் பக்தியின் சிறப்பைக் கூறுகிறான்.

**ஸர்வகுஹ்யதமம் பூய: ச்ருணு மே பரமம் வச: ।**
**இஷ்டோऽஸி மே த்ருடமிதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம் ॥ 64 ॥**

அர்ஜுன! நீ எனக்கு மிகப் பிரியமானவன்; இதுவரையில் உனக்கு நான் சொன்ன எல்லா தர்மங்களைக் காட்டிலும் மிக ரஹஸ்யமான தர்மத்தை மறுபடியும் உனக்குச் சொல்லுகிறேன் கேள் என்று சொல்கிறான்.

கர்மயோகம் குஹ்யம், ஜ்ஞான யோகம் குஹ்யதரம், பக்தி யோகம் குஹ்யதமம் என்றும் கண்ணன் கீழே கூறியிருக்கிறான். இவைகளைக் காட்டிலும் இனி கூறப்போவது மிக மிகச் சிறந்தது என்பதை ஸர்வ குஹ்ய தமம் எனபதினால் அறிவிக்கிறான்.

**மந்மநா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு ।**
**மாமேவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜானே ப்ரியோஸி மே ॥ 65 ॥**

இதில் 'மத் பக்த:' என்னும் பதத்தை முன்னும் பின்னும் சேர்த்துப் பொருள் கொள்ள வேண்டும்.

பக்தியுடன் எப்போதும் உன் மனத்தை வைத்திரு, பக்தியுடன் (அன்புடன்) என்னை பூசித்து எனக்கு நமஸ்காரம் (வணக்கம்) செய். நீ என்னையே அடைவாய், உனக்கு எல்லா நன்மையும் உண்டாகும். இது முற்றிலும் உண்மை, எனக்கு நீ ப்ரியனுகையினுல் உனக்கு இதை நான் சத்யம் செய்து கொடுக்கிறேன்.

மனத்தை எப்போதும் பகவானிடம் வைத்திருப்பது என்றால் என்ன ?

பகவானிடம் செய்யும் அன்பே பக்தி. எப்போதும் பகவானைச் சிந்தித்திருக்க வேண்டும். இதுவே த்யானம், அல்லது மனத்தை அவனிடம் வைத்திருப்பதாகும் அன்புடன் அவனுக்கு (பூஜை) வழிபாடுகளைச் செய்ய வேண்டும்; இப்படி செய்து கொண்டிருந்தால் அர்ஜுன! நீ என்னையே அடைவாய்'' என்கிறான். அதாவது, மறு பிறவியில்லாத மோக்ஷம் பெறுவாய்; உனக்கு எல்லா ஆத்ம நன்மையும் உண்டாகும். இது ஸத்யம், பொய்யல்ல; நீ எனக்கு மிகவும் அன்பனுகையினுல் இதை நான் உனக்குச் சூளுரைத்துச் சொல்லுகிறேன் என்கிறான் கண்ணன்.

பகவான் ஸ்வாமி, நாம் அவனுடைய சொத்து, அதாவது அறிவுள்ள அடிமை. தாஸன், இதை அறிந்து அவனுடைய உகப்புக்காகச் செய்யும் கைங்கர்யம் எதுவாயினும் அவனுக்கு ஆராதனமாகும். (வழிபாடு) அவனே புருஷோத்தமன் என்பதைத் தெரிந்து அவனை வழிபட வேண்டும். இவைகளை மனோ வாக் காயம் மூன்றினுலும் செய்யலாம்.

இப்படி நீ செய்து வந்தால் ''மாமேவ ஏஷ்யஸி'' நீ என்னையே அடைவாய், மோக்ஷம் பெறுவாய் பத்ரம்தே – உனக்கு நன்மை உண்டாகும். தே ப்ரிய: ப்ரதிஜானே – நீ என் அன்பனுகையினுல் இதை உனக்குச் சத்யமாகச் சொல்லுகிறேன் என்கிறான். யத் ச்ரேயஸ் ஸ்யாந் நிஸ்சிதம் ப்ரூஹி தந்மே'' என்ற அர்ஜுனனின் கேள்விக்குப் பதிலாக, பக்தியே ஆத்ம நன்மைக்கு வழி என்பதை நிச்சயித்து இந்த சுலோகத்தினுல் சொல்லுகிறான்.

''த்யௌ பதேத் ப்ரதிவீ; சீர்யேத் ஹிமவாந் சகலீ பவேத், சுஷ்யேத் தோயநிதி—க்ருஷ்ணே! நமே மோகம் வசோ பவேத்'' ஆகாசம் கீழே விழுந்தாலும் விழலாம், பூமியும் பிளக்கலாம்; ஹிமயம் பொடியாகச் சிதறலாம், கடல் நீரும் அற வற்றலாம்; ஆனுல் க்ருஷ்ணே (த்ரௌபதியே) என் வார்த்தை ஒருபொழுதும்

பொய்யாகாது என்று கண்ணன் த்ரௌபதிக்கு சத்யம் செய்து கொடுத்தது போல், இங்கே தன் தோழனை அர்ஜுனனுக்குப் பக்தியே தப்பாத மோக்ஷோபாயம் என்று சத்யம் செய்து கொடுத்திருக்கிறான். இதனால் மோக்ஷமே ஒரு ஜீவன் பெறக் கூடிய சிறந்த புருஷார்த்தம், அதைப் பெற பக்தியே ஸாதனம் என்பது கீதையின் ஸாரமான பொருள் என்பது விளங்குகிறது.

## ஸ்ரீ கீதா சரமச்லோகம்:

ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ
அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச: 66

## அவதாரிகை

*ஸ்ரீய: பதியான ஸர்வேச்வரன் தர்மத்தை நிலைநாட்ட; "தேவகீ பூர்வா ஸந்த்யாம் ஆவிர்பூதம் மஹாத்மநா" என்கிறபடி வட மதுரையில் தேவகியின் புத்திரனாய் சங்கு சக்கரங்களுடன் வந்து அவதரித்தான். பூதனை, சகடாசுரன், கம்ஸன் போன்ற துஷ்டர்களைக் கொன்றும், அக்ரூரர், மாலாகாரர் விதுரர் போன்ற நல்லோரை வாழ்வித்தும், தன் பக்தர்களான பாண்டவர்களுக்கு தூது நடந்தும், தேரை நடத்தி இழி தொழில்களைச் செய்தும் உதவி புரிந்தான்; கோபியரோடு ஒரு நீராகக் கலந்து உவந்தான்; இளம்பிராயத்திலேயே கோவர்த்தன மலையைத் தன் விரல் நுனியில் ஏழு நாள் நிறுத்தி இந்திர கோபத்திலிருந்து, ஆயர்களையும், பசுக்களையும் காத்தான் இப்படி பல அரிய பெரிய செயல்களினாலே தன் மேன்மை, நீர்மை உயிர்களைக் காக்கும் திறன் முதலான கல்யாண குணங்களை, வெளிப்படுத்தியிருக்கிறான்.*

*இவற்றுக்கெல்லாம் மேலாக, உடலே ஆத்மாவென்று அபிமானித்து, ஆத்ம பரமாத்ம ஞானத் தெளிவில்லாத அர்ஜுனனை "அமலங்களாக விழிக்கும்" என்கிறபடி, குளிர நோக்கி ஞானத் தேனாய் இனிக்கும் அமுதமான கீதா சாஸ்திரத்தை அவனுக்கு உபதேசித்தருளினான்.*

*முதல் முதலில் சரீர ஆத்ம வேற்றுமை குறித்தும். ஆத்ம பரமாத்ம பேதத்தையும், அர்ஜுனனுக்கு உபதேசித்தான்; பிறகு பரம புருஷார்த்தமான மோக்ஷத்தில் அவனுக்கு ருசியை விளைவித்து, அதற்கு விரோதியான அஜ்ஞானம் பாப வாஸனை, விஷயங்களில் பற்று இவைகளைபோக்கி அருளினான். அதற்கு மேல்,*

**தேதம் புங்க்த்வா ஸ்வர்க லோகம் விசாலம்**
**க்ஷீணே புண்யே மர்த்ய லோகம் விஸந்தி"**

போன்ற பல சுலோகங்களில் ஐச்வர்யம் சுவர்கம் முதலானவை அற்பமாயும், நிலையற்றதாயுமிருக்கும் என்பதைச் சொல்லி, "ஜரா மரண மோக்ஷாய" என்பதில் ஆத்மானுபவமான கைவல்யத்தைக் கழித்து, "மாமுபேத்யது கௌந்தேய" போன்ற பல சுலோகங்களில் ஒருவன் பெறக்கூடிய மேலான புருஷார்த்தம் (பயன்) பகவதனுபவமே என்பதையும் அருளிச் செய்தான். இந்த உயர்ந்த பயனைப் பெற "தஸ்மாத் அசக்தஸ் ஸததம்" போன்ற சுலோகங்களில் கர்ம, ஜ்ஞான, பக்தி யோகங்களே உபாயம் என்பதை விரிவாக எடுத்துரைத்தான்.

இதைக் கேட்ட அர்ஜுனன், பாம்பின் வாயில் அகப்பட்ட தேரை போல, ஸம்ஸாரமாகிற பெருங்கடலில் விழுந்து நோவுபடுகிற நம் துர்கதியைக் கண்டு, "மம மாயா துரத்யயா" என்று அவன் கூறுகிறபடி அதைப் போக்கிக் கொள்ள நம் அசக்தியையும் கர்ம ஜ்ஞான பக்தி யோகம் செய்வதற்குத் தடையாயுள்ள தன் பாபத்தையும் அறிந்து கலக்கமுற்றான்.

அதைக் கண்ட கண்ணன் அர்ஜுனனைப் பார்த்து, கீழே நான் சொன்ன எல்லா தர்மங்களையும் மோக்ஷோபாயமாகச் செய்வதை விட்டு, சித்தோபாயமாய், சுலபனுயுள்ள என் ஒருவனையே பற்று; மோக்ஷத்திற்குத் தடையான உன் பாபம் அனைத்தையும் நான் போக்குகிறேன்; அஞ்சாதே; என்கிறான், "ஸர்வதர்மாந் பரித்ஜ்ய" என்கிற இந்த சுலோகத்தில்.

இதுவே கீதா சாஸ்திரத்தின் கடைசி சுலோகமாகும். இதற்குப் பின்புள்ளவை முடிவுரை. கீழே சில உபாயங்களைச் சொல்லி, முடிவாக அதற்கு அவ்வருகில்லாத உபாயத்தைச் சொல்லுவதினால், இதற்குச் சரம சுலோகம் எனப்பெயர். ஸ்ரீராமாநுஜர் இந்த சுலோகத்திற்கு பக்தி பரமாக இரண்டு விதமாக பொருள்கள் அருளிச் செய்திருக்கிறார்.

**முதல் நிர்வாகம் :**

கர்ம யோகம், ஜ்ஞான யோகம் பக்தியோகம் சிரந்தவைகள்; இவற்றைச் செய்யும்போது, தன்னைச் செய்பவனாகவும் (கர்த்ருத்

வம்), அந்தச் செயல் தன்னுடையது (மமதை) என்றும், அந்தச் செயலின் பயன் தனக்கு (பயன்) என்றும் எண்ணுமல், பகவானே அவற்றுக்குக் கர்த்தா, அந்தச் செயல் பகவானைச் சேர்ந்ததே, அச் செயலால் அடையும் பயனும் அவனுடையதே என்ற நினைவோ டேயே செய்ய வேண்டும். அப்படிச் செய்பவனுக்குத் தடையா யிருக்கிற பாபங்கள் அனைத்தையும் நான் போக்கிவிடுகிறேன்; கவலையுருதே என்று அர்ஜுனனுக்குக் கண்ணன் கூறுகிருன்.

கீழே சொன்ன கர்ம ஜ்ஞான பக்தி யோகங்கள் தர்மங்களே. அவற்றை அறவிடச் சொல்லவில்லை கண்ணன். அவைகளில், கர்த்ருத்வம், மமதை, பயன் இவைகளைப் பற்றிய புத்தியை மட்டுமே விடச் சொல்லியிருக்கிருன் பகவான்.

ஒருவன் தான் ஒரு செயலைச் செய்யும்போது, அதை நான் செய்ய வில்லை என்று நினைப்பது எப்படி? "தேன விநா திரணமபி ந சலதி" என்றும் "அவனின்றி அணுவும் அசையாது" என்றும் சொல்லி யுள்ளபடி, பகவானின் சங்கல்பம் (நினைவு) இன்றி ஒரு செயலும் நடைபெருது. எல்லாச் செயல்களுக்கும் ஆரம்ப கர்த்தா பகவானே' ஜீவனில்லை என்பதை இந்த அத்யாயத்தில 13, 14, 15 சுலோகங் களில் பகவான் விவரித்திருக்கிருன்.

அப்படியானுல், "ஸத்யம் வத; தர்மம் சர" என்று சில நற் செயல்களை ஜீவனுக்கு விதித்திருக்கும் பகவானே, சிலரைத் தீய செயலில தூண்டுவானேன்? ஒரு செயலைச் செய்யத் தூண்டுவதும் நடத்துவதும் ஒரு பலனேடு முடிப்பதும் பகவானே அந்தச் செயல் நல்ல செயலா, தீய செயலா என்பதுமட்டும் அவரவர் விதிவழி அமைவதாகும். ஊழ்வினைக்கு ஏற்பவே வாஸனையும் ருசியும் ஜீவனுக்கு ஏற்படுகிறது; அதைத் தலைக்கட்டித் தருபவனுகவே பகவான் விளங்குகிருன்.

எம்பெருமான் தாயுள்ளம் படைத்தவன்; ஒருதாய் தன் குழந்தை முகம் கோணுமல் அதன் விருப்பப்படி செயலபட அனு மதித்து பின்னர் அதற்குப் பரிகாரத்தைத் தேடுவது போல, பகவானும் நம்மை நம் விருப்பப்படி முதலில் செயலபட அனு மதித்து, பின்பு அதற்குத் தகுந்த பரிகாரம தேடுகிருன். "வத்ஸலை யான மாதா பிள்ளை பேகணியாமல் மண்தின்னவிட்டு பின் பிரத் யௌஷதம் இடுமாப் போலே" என்பது லோகாசாரியன் வார்த்தை

## இரண்டாம் நிர்வாகம்:

கலங்கியிருக்கும் அர்ஜுனனைப் பார்த்து, மாசுச:—கலங்காதே என்கிறான் கண்ணன்; அர்ஜுனனின் கலக்கம் என்ன? பக்தி செய்தால் என்னையே அடைவாய் என்கிறானே கண்ணன் 'நராணும் க்ஷீண பாபாநாம் க்ருஷ்ணே பக்தி: ப்ரஜாயதே'' என்று சொல்லப் பட்டிருக்கிறதே—நமக்கோ பாபம் அதிகம்; நம் பாபம் போனா லன்றோ நமக்கு பக்தி உண்டாகும். பாபத்தை அனுபவித்தே போக்கிக் கொள்ள வேண்டும்; அல்லது சாஸ்திரத்தில் விதிக்கப் பட்டபடி அதற்கான பிராயச்சித்தங்களைச் செய்து போக்கிக் கொள்ள வேண்டும். இவை இரண்டும் நம்மால் ஆகாததன்றோ! நாம் செய்ய அடுப்பது என்? என்ற கலக்கமே அர்ஜுனனுக்கு உண்டாயிருக்கிறது.

இதைக் கண்ட கண்ணன், அர்ஜுன! உன் பாபம் விலக சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட எல்லா ப்ராயச்சித்த தர்மங்களையும் விட்டு, ஸர்வ பாப ப்ராயசித்தமாக என் ஒருவனையே பற்று; நான் உன் பாபங்களைப் போக்குகிறேன்; கலங்காதே என்கிறான்.

இப்படி முதல் நிர்வாகத்தில் கர்த்ருத்வம், மமதை, பலன் இவை களை விட்டு, கர்ம ஜ்ஞான பக்திகளைச் செய் என்பது பொருள்.

இரண்டாம் யோசனையில், பக்திக்குத் தடையான உன் பாபங்கள் நீங்க, நீ செய்ய வேண்டிய ப்ராயச்சித்தங்களை விட்டு, என்னை ஒருவனையே பற்று என்பது பொருள்.

இவ்விரண்டு பொருளுமே ஸ்ரீராமாநுஜர் தமது கீதா பாஷ்யத் தில் அருளிச் செய்திருக்கிறார்: ஆனால், திருக்கோட்டியூர் நம்பி என்ற மஹானிடம், பதினெட்டு தடவை ஸ்ரீரங்கத்திலிருந்து திருக்கோட்டியூருக்கு நடந்து சென்று, கீதையின் சரம சுலோகப் பொருளைக் கேட்டு, எம்பெருமானார் கத்ய த்ரயத்தில் சரணாகதி பரமாகவே இதற்கு அர்த்தத்தை ஆசரித்துக் காட்டியிருக்கிறார் என்பது நம் பூர்வாசாரியர்களின் கருத்து. இந்த அர்த்தமே எம்பெருமானாருக்கு அபிமதமானது. (திருவுள்ளக் கருத்து) வேத புருஷனும் பல தர்மங்களைச் சொல்லி வந்து, கடைசியில் ''முமுக்ஷுர்வை சரணம் அஹம் ப்ரபத்யே'', மோக்ஷத்தில் இச்சை யுள்ள நான் பகவானைச் சரணம் பற்றுகிறேன் என்று ஆசரித்துக் காட்டியிருப்பது போல அதே வழியில் ஸ்ரீராமாநுஜரும் சென்றுள் ளார் என்பதே பின்புள்ள ஆசார்யர்களின் கருத்து.

**சரணாகதி பரமான பொருள் :**

ஒரு பலனைக் கொடுக்கும் செயலே தர்மம் எனப்படும். **ஸர்வ தர்மாந்** - எல்லா தர்மங்களையும் கண்ணால் காணக்கூடிய பலனான வீடு வாசல் நிலம் பெண்டு புத்திரர் போன்ற செல்வங்களையும், கண்ணால் காணவொண்ணாத சுவர்கம் போன்ற அல்ப பலனையும், கொள்ளமாளா இன்பவெள்ளமான மறுபிறவியில்லாத மோக்ஷத்தையும் கொடுக்கக்கூடிய எல்லா தர்மங்களையும் — அதாவது, கர்ம ஜ்ஞான பக்தி யோகங்கள், இவற்றுக்கு அங்கங்களான நித்ய நைமித்ய கருமங்கள், மற்றும் அவதார ரஹஸ்ய ஜ்ஞானம், புருஷோத்தம வித்யை, புண்யக்ஷேத்திர வாஸம், திருநாம ஸங்கீர்த்தனம்; திருவிளக்கு எரிக்கை திருமாலை தொடுக்கை முதலானவை

**பரித்யஜ்ய** - த்யஜித்து, விட்டு, அந்த தர்மங்களை செய்வதையே விட்டு என்பது பொருளல்ல; அவைகளை மோக்ஷோபாயம் என்று நினைக்கிற புத்தியை விட்டு என்பதே பொருள்; எங்ஙனே என்னில், அவைகளுக்குத் தானே மோக்ஷம் கொடுக்கும் சக்தியில்லை ; அவை அறிவில்லாத செயல்கள்; ஒரு அறிவுள்ள ஜீவன் செய்யும்போது மட்டுமே உண்டாகும் தன்மையவை; ஈச்வரனிட்ட வழக்காயுள்ள ஜீவாத்மாவின் ஸ்வரூபத்திற்குச் சேராதவை என்பதை அறிந்து, அச்செயல்களையே உபாயமாக நினைக்கும் புத்தியை விட்டுவிட வேண்டும்; அவைகளை உபாயமாக நினைப்பதே குற்றமாகும்.

ஓர் ஊருக்குப் போகிறவன் சரியான வழியை விட்டு எதிர் நோக்கி, வெகுதூரம் போன பின்பு தன் தவறுதலைத் தெரிந்து எப்படி வருந்தி வெட்கமுற்று, அவ்வழியை விட்டு மீள்கிறானோ, அதே போல உபாயமில்லாதவைகளை, இது வரையில் உபாயமாக எண்ணியிருந்தோமே என்று வருந்தி, வெட்கமுற்று அவை உபாயம் என்கிற புத்தியை விட்டுத் திரும்பு என்கிறான்.

நாம் செய்யும் சரணாகதி என்ற செயல் உள்பட எல்லாச் செயல்களையும் உபாயமாக நினைக்கும் நினைவு நாம் மோக்ஷம் பெறத் தடையாகும். இராவணன் செயலற்றுத் தோற்று நிற்கும் நிலையில், அவன் கையில் இருந்த வில், ராமன் அவனை "கச்சாநு ஜாநாமி, இன்று போய் நாளை வா" என்று சொல்வதற்குத் தடையாகயிருந்தது; அது போர் புரிவதற்கும் அவனுக்கு உதவவில்லை: அது போல மற்ற தர்மங்கள் மோக்ஷம் தர வல்ல சக்தியற்றவை என்பது மாத்திரமில்லை; சித்த தர்மமான பகவான் நமக்கு ஆத்ம நன்மை செய்யவும், குறுக்கே தடையாக நிற்கின்றன. ஆகையால் அவற்றின் பலனற்ற தன்மையை அறிந்து அவற்றை விலக்க வேண்டும்.

"ஸ்நாத்வா புஞ்ஜீத" என்பது போல முன்னர் அவை உபாயமென்கிற புத்தியை விட்டே பின்னர் பகவானையே உபாயமாகப் புத்தி பண்ண வேண்டும், இப்படி மற்றவற்றை உபாயம் என்று எண்ணும் புத்தியை விட்ட பிறகே—பகவானைப் பற்ற வேண்டும் என்பது கண்ணன் விதித்த விதி.

மாம் ஏகம் – என் ஒருவனையே. அறிவு ஆற்றல் மிக்கவனாக இருந்தும் உன் ஸாரதியாய், உனக்குக் கையாளாய் உன் இசைவு பார்த்து உனக்கு நன்மை செய்யக் காத்திருக்கும் என்னை.

"கையும் உழவு கோலும், பிடித்த சிறுவாய்க்
கயிறும், ஸேநா தூளி தூஸரிதமான திருக்குழலும்
தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமான
ஸாரத்ய வேஷத்தை மாம் என்று காட்டுகிறான்"

தர்ம ஸம்ஸ்தாபனம் செய்யப் பிறந்த அவனே, தர்மங்களை விடு என்று சொல்லலாமா? எந்த தர்மத்தையும் கண்ணன் விடச் சொல்லவில்லை; அவை மோக்ஷ பலனைக் கொடுக்கக் கூடியவை என்கிற புத்தியையே விடச் சொல்லுகிறான்; 'க்ருஷ்ணன் தர்மம் ஸநாதனம் என்கிற சித்த தர்மமான அவனே மோக்ஷோபாயம்' என்று புத்தி பண்ணச் சொல்லுகிறான்.

மற்ற தேவதைகள், அதுபோல இவன் செய்யும் கர்ம, ஜ்ஞான பக்தி யோகங்கள், இவை உபாயம் அல்ல என்று தவிர்ப்பது போல இவன் செய்யும் ப்ரபத்தியும் உபாயமன்று; 'பிரபத்தி''யில் தான் செய்யும் சரணாகதியை உபாயமாக எண்ணுவது, தன்னை மலடி மகன் என்று சொல்லிக் கொள்வது போலாகும்

மேலும் சித்த தர்மமான சரண்யன் (பகவான்) மற்ற எதையும் நாம் உபாயமாக எண்ணுவதை சகிப்பதில்லை; ஏனெனில் அப்படி நினைப்பதினால் பகவானைச் சரணம் பற்றுகிறவனுக்கு மஹாவிச்வாசம் (த்ருடநம்பிக்கை) இல்லை என்று தேறி விடுகிறது. அப்போது சணல் கயிறு பட்ட ப்ரஹ்மாஸ்த்திரம் போல பகவான் இவனை தன் ரக்ஷணத்திலிருந்து நழுவ விடுவான்.

சரணம் வ்ரஜ— உபாயமாக புத்தி பண்ணு. சரணம் என்பதற்கு ரக்ஷகன், வீடு, உபாயம் என பல பொருள்களிருந்தாலும், இங்கு உபாயம் என்பதே பொருந்திய பொருள். அவனுடைய ரக்ஷணத்திற்கு, நாம் அதிகாரி (தகுதி)யாக வேண்டும். அதற்கு நாம் அவனை

மெய், நா, மனத்தினுல் பற்றலாம். ஆனுல் 'ஜ்ஞானங் மோக்ஷ!' என்று சொல்லியிருப்பதினுல், மனத்தினுல் பகவானே உபாயம் என்று புத்தி பண்ணுவதே மிக முக்கியமானது.

''ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய'' என்பதினுல் ''ஆகிஞ்சன்யம்'' அதாவது உபாயத்துக்கு உறுப்பாக என்னிடம் ஒன்றுமில்லை; என்பது சொல்லப்படுகிறது; சரணம் வ்ரஜ என்பதினுல் 'அநந்ய கதித்வம்', உன்னைத் தவிர எனக்கு வேறு புகல் இல்லை என்பது சொல்லப் படுகிறது. சரணுகதி செய்பவனுக்கு ஆகிஞ்சன்யமும், அநன்ய கதித்துவமும் இன்றியமையாதவை.

இப்படி, ''ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ'' என்கிற முதல் வாக்கியத்தினுல், மற்ற எல்லா தர்மங்களும், தான் செய்யும் சரணுகதி உட்பட மோக்ஷோபாயம் என்கிற புத்தியை விட்டு சாக்ஷாத் தர்மமான என் ஒருவனையே பற்று என்று, சரணுகதன் செய்ய வேண்டியதைச் சொல்லிற்று; இனி இரண்டாம் வாக்கியத்தினுல் சரண்யனுன பகவனுன தான் செய்யுமதைச் சொல்லுகிருன்.

அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச :— கீழே மாம் என்பதினுல் பற்றுவதற்கு எளிமைக்கு எல்லைநிலமான தன் ஸாரத்ய வேஷத்தைக் காட்டினுன் கண்ணன். இதைக் கேட்ட அர்ஜுனனுக்கு நம் தேரோட்டியான இவன் காலில் விழச்சொல்லு கிருனே ! இவன் நம்மை எப்படி ரக்ஷிக்க முடியும் என்று ஐயம் எழ, கிருஷ்ணன், அர்ஜுன ! நான் யார் தெரியுமா? என்று தன் பரத்வமெல்லாம் தோற்ற அஹம் என்கிருன். என்னை உனக்கு ஸாரதியென்று எண்ணுதே; மூவகைப்பட்ட சேதன அசேதனங் களையும் படைத்து, காத்து, அழிக்க வல்லவன். உயிர்களின் இருப்பு, அவைகளை ஒரு செயலில் தூண்டுவது, ஒன்றில் நின்றும் விலக்குவது அனைத்தையும் நடத்திப்போருகிறவன், (அறிவு ஆற்றல் நிறைந்தவன்) என்று தன் மேன்மை யெல்லாம் தோற்ற அஹம் ''நான்'' என்கிருன்.

த்வா — அறிவிலியாய், தன்னைத் தானே காத்துக் கொள்ள ஆற்றலும் (சக்தியும்), உரிமையும் இல்லாதவனுயிருக்கும் உன்னை, ஸர்வ வல்லமை பொருந்திய என்னையே அடைக்கலமாகப் பற்றி யிருக்கும் உன்னை.

ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி — மோக்ஷத்திற்குத் தடையாக உள்ள எந்தப் பாபமாயினும் அவைகளையெல்லாம் நான் போக்கு

கிறேன்; நீ எனக்குச் சரீரம். நான் உனது ஆத்மா, என் உடலின் அழுக்கை நானே போக்கிக் கொள்ளேனோ என்கிறான் கண்ணன்.

மாசுச ! நீ அஞ்சாதே, ஸர்வ ரக்ஷகனான என்னிடம், உன் ரக்ஷணத்தை ஒப்படைத்த பின் நீ அஞ்ச வேண்டுமோ!

ஆக, "ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய" என்னும் இந்த சுலோகத்தினால், "அர்ஜுன, கர்ம ஜ்ஞான பக்திகளை மோக்ஷோபாயமாக நீ எண்ணியிருக்கும் உன் தவறான எண்ணத்தை அறவே விட்டு என் ஒருவனையே மோக்ஷோபாயமாகப் பற்றியிரு; அறிவாற்றல் மிக்க நான் மோக்ஷத்திற்குத் தடையான, எல்லா பாபங்களிலிருந்தும் உன்னை விடுவிக்கிறேன்; நீ அஞ்சாதே என்று சுதந்திர ப்ரபத்தி பரமான அர்த்தத்தையே பூர்வாசாரியர்கள் எல்லோரும் ஆதரித்திருக்கிறார்கள்.

இதில் உன் பாபங்களையெல்லாம் போக்குகிறேன் என்று மட்டும் க்ருஷ்ணன் சொல்லியிருக்கிறானே ஒழிய, "நீ மோக்ஷம் அடைவாய்" என்று பலனைச் சொல்லவில்லையே என்கிற சந்தேஹம் சிலருக்குத் தோன்றக்கூடும்.

மோக்ஷத்திற்குத் தடையான பாபம் போனால், மோக்ஷம் தன்னடையே சித்திக்கும் என்று கொள்ளலாம். அங்ஙனன்றிக்கே, "மந்மநா பவ மத்பக்த" என்னும் முன் சுலோகத்தில் "மாமேவைஷ்யஸி" என்னையே அடைவாய் என்று பலனைச் சொல்லி, இந்த சுலோகத்தில் அதற்கு உபாயத்தைச் சொல்லியிருக்கிறான் என்பதைக் காணலாம். தன்னைச் சரணம் பற்றுபவர்களுக்கு, பகவான் செய்யும் காரியம் தனிச் சிறப்புற்றதாக யிருக்கும். ஆதலால், பலனை முந்துறச் சொல்லி, உபாயத்தைப் பின்பு இச் சுலோகத்தினால் சொல்லியிருக்கிறான்.

சரணாகதனை, எம்பெருமான் தன் தொண்டர்கள் கையில் காட்டிக் கொடாமல், தானே நேரில் வந்து, அவனை அன்போடு அணைத்து வழி நடத்தி, பரமபதத்தில் கொண்டு சேர்ப்பிக்கிறான். இதை ஸ்ரீ வராஹப்பெருமாள் தன் சரம சுலோகத்தில் தெளிவாக அருளிச் செய்திருக்கிறார்!

இதைத் தவிர மற்றோர் சிறப்பும் சரணாகதிக்கு உண்டு; பகவானைச் சரணம் பற்றினவனின் ப்ராரப்த கர்மா, ஸஞ்சித கர்மா இரண்டும் தொலைந்து இப் பிறவியின் இறுதியிலேயே மோக்ஷம் கிடைக்கிறது. பக்தனுக்கோ எனில் ஸஞ்சித கர்மாமாத்திரம் போகிறது. அவன் அனுபவித்து வரும் ப்ராரப்த கர்மா முழுமை

யும், அது எத்தனை பிறவியானாலும் எடுத்து, அனுபவித்து தீர்ந்த பிறகே மோக்ஷம்; அது வரையில் எத்தனை ஜன்மமானாலும் அவன் பக்தியை விடாமல் செய்து கொண்டே யிருக்க வேண்டும். ஆதலால் சரணாகதனுக்குள்ள இச் சிறப்பெல்லாம் தோற்ற மோக்ஷ பலனை, தனித்து முன் சுலோகத்தில் சொல்லி, அடுத்த இந்த சுலோகத்தில் உபாயத்தைச் சொல்லி யிருக்கிறான் கண்ணன். (பல பிறவிகளில் செய்து, சேர்த்து வைத்திருக்கும் புண்ய பாபங்கள், ஸஞ்சித கர்மா: இப்போது அனுபவித்து வரும் வினைப் பயன்கள் ப்ராரப்த கர்மா எனப்படும்).

மந்மநா பவ மத் பக்த: "என்று பக்தியை முன் சுலோகத்தில் விதித்திருக்கிறானே, அதற்குக் கருத்து என்ன? இங்கே சொல்லுவது ஸாதன (மோக்ஷோபாயமான) பக்தி அன்று.

"ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய" என்கிற இந்த சுலோகத்தில் சொல்லப்பட்டபடி, பகவான் ஒருவனையே மோக்ஷோபாயமாகச் சரணம் பற்றினால், பக்திக்குத் தடையான நம் பாபமெல்லாம் போய், "மாமேவ ஏஷ்யஸி" என்னையே அடைவாய் என்று பலத்தையும் சொல்லி, அப்படி மோக்ஷம் அடைந்தவனுக்கு இருக்க வேண்டிய ஸாத்ய பக்தியையே—அதில் மந் மநாபவ மத் பக்த: என்பதினால் சொல்லி யிருக்கிறான். "உற்றேன் உகந்து பணி செய்து" என்கிறபடி, பகவானுக்குத் தொண்டு செய்ய வேண்டிய, உகப்பே ஸாத்ய பக்தி, எம்பெருமானுக்குச் செய்யும் பூஜை, நமஸ்காரம் த்யானம் மற்றும் பணிவிடைகள் அன்புடனிருந்தே செய்ய வேண்டும் என்பதையே அங்கே சொல்லி யிருக்கிறான்.

பகவானை அடைவதற்கு உபாயமான ஸாதன பக்தியை ஒன்பதாம் அத்யாயம் இறுதியில் "மந்மநா பவ மத் பக்த:" என்கிற சுலோகத்தில் சொல்லியிருக்கிறான். அங்கு அந்த ஸாதன பக்தியை குஹ்யதமம்" என்று சொல்லி, இங்கே இந்த ஸாத்ய பக்தியை "ஸர்வ குஹ்ய தமம்" என்று சிலாகித்து கூறியிருக்கிறான்.

ஆக, முதல் சுலோகத்தில் "மாமேவைஷ்யஸி" என்று பலனையும், அந்தப் பலனை அடைந்தவனுக்கு இருக்க வேண்டிய ஸாத்ய பக்தியையும் சொல்லி, 'ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய' என்னும் இந்த சரம சுலோகத்திற்கு சித்த தர்மமான பகவானே உபாயம் என்பதை அறுதியிட்டு கீதையின் உபதேசத்தைப் பூர்த்தி செய்து கொண்டிருக்கிறான் ஸ்ரீ கிருஷ்ணன்.

## சரணாகதியும் விளக்கமும்

''அஹமஸ்ய அபராதானாம் ஆலய : அகிஞ்சந : அநந்யகதி : த்வ மேவ

உபாயபூதோ மே பவ'' இதி ப்ரார்த்தனா மதி :சரணாகதி :

ஒரு சேதனன் பரமபுருஷன் சந்நிதியைக் கிட்டி, நான் அகிஞ்சனன், எனக்குப் புண்யம் சிறிதுமில்லை; பாபமே நிறைந்தவன், எனக்கு வேறொன்றும் நன்மை தராது; வேறு புகலற்றவன், நீயே எனக்குக் கதி, எனது ஆத்ம ச்ரேயஸுக்கு நீயே உபாயமாக வேண்டும் என்று, பிரார்த்திப்பதே சரணாகதி எனப்படும்.

மோக்ஷத்தில் இச்சையுள்ள முமுக்ஷு, இவ்விதம் சரணாகதியைச் செய்ய வேண்டும் என்பதை ஸ்ரீ வைஷ்ணவ ஆசார்யர்கள் எல்லோரும் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இதில் கருத்து வேறுபாடுகள் உள்ளன.

எம்பெருமான் சித்தோபாயம்; நாம் செய்யும் சரணாகதி ஸாத்யோபாயம். சித்தோபாயமான பகவான் எப்போதும் இருந்தாலும், சரணாகதியே அவனை நமக்கு சாதித்து (பெறுவித்து)க் கொடுக்கிறது. ஆதலால் சரணாகதி ஸாத்யோபாயமாகிறது — அதாவது நாம் அவனைச் சரணம் பற்றினால் தான் பகவான் நமக்குக் காரியம் செய்கிறான். இது ஒரு கருத்து.

இன்னும், சிறந்த ஜ்ஞான சக்தி பெற்றவன் மோக்ஷம் பெற பக்தி யோகத்தையே செய்ய வேண்டும். அப்படி ஜ்ஞான சக்தியில்லாதவன் பகவானைச் சரணம் பற்றினால், பகவான் அவனுக்கு பக்தி ஸ்தானத்தில் இருந்து காரியம் செய்கிறான். இவன் செய்யும் ப்ரபத்தி பகவானை பக்தி ஸ்தானத்தில் கொண்டு வந்து சேர்ப்பிக்கிறது. அப்போது அவன் பயனுக்கு உபாயமாகிறான். ஆதலால் ப்ரபத்தி ஸாத்யோபாயம் என்பது இரண்டாவது கருத்து. இவ்விரண்டு கருத்துக்களும் உள்ளது ஒரு பக்ஷம்.

லோகாசாரியன் ஸம்பிரதாயத்தில் இதை ஒப்புக் கொள்ள வில்லை; 'த்வமேவ உபாய பூதோமே பவ' நீயே எனக்கு ஸாதனம்; வேறு உபாயமெதுவும் இல்லை, என்று வாயினுல் சொல்லி சரணுகதியைச் செய்து; மனத்தினுல் இவன் செய்யும் சரணுகதியை உபாயமாக நினைப்பானுகில், இவனுடைய சொல்லும் நினைவும் மாறுபட்டிருக்கும். இப்படிச் செய்யும் சரணுகதி பொய்யேயாகும். சரணுகதி பலிக்காது-பகவான் இவனுக்குக் காரியம் செய்யான். இது "மம மாதா வந்த்யா"—எனது தாயார் மலடி என்பது போலேயாம்.

அஸ்திரங்களுக்குள் உயர்ந்தது ப்ரஹ்மாஸ்திரம். அதனுல் கட்டப்பட்ட ஒருவனை வேறு கயிறு கொண்டு கட்டினுல் அந்த ப்ரஹ்மாஸ்திரத்தின் கட்டு விட்டு விடும். இதை "சாணல் கயிறு கண்ட ப்ரஹ்மாஸ்திரம் போலே" என்பர். அதே போல அவனைத் தவிர வேறொன்றை உபாயமாக எண்ணினுல் சித்த தர்மமான பகவான் தான் ரக்ஷணத்திலிருந்து நழுவி விடுவான். ப்ரபன்னனுக்கு இருக்க வேண்டிய மஹா விச்வாஸம் பகவானிடம் (த்ருட நம்பிக்கை) போய் விடுகிறபடியால், சரணுகதி பலிக்கிறதில்லை. ஆதலால் லோகாசாரியன் ப்ரபத்தியை சாத்யோபாயம் என்பதையோ, அது பகவானை பக்தி ஸ்தானத்தில் கொண்டு சேர்ப்பிக்கிறது என்பதையோ ஒப்புக் கொள்ளவில்லை. முமுக்ஷு என்பது பொதுவான தர்மம். இவன் சரணுகதி செய்ய வேண்டும். சரணுகதி செய்தால் தான் இவன் மோக்ஷத்திற்கு அதிகாரி யாகிறுன். அதாவது தகுதியுள்ளவனுகிறுன். பகவான் தனக்குக் காரியம் செய்ய தன்னைத் தகுதியுள்ளவனுக்கிக் கொள்கிறுன்; தான் செய்யும் சரணுகதி உள்பட எல்லா தர்மங்களையும் மோக்ஷோபாயம் என்கிற புத்தியை விட்டு, பகவான் ஒருவனே உபாயம் என்று பற்றுவதே அதிகாரம், விலக்காமை என்னும் தன் தகுதியைக் காட்டுவதே சரணுகதி; இது ஸத்ஸம்ப்ரதாயார்த்தம்.

ஸ்ரீ வைஷ்ணவத்துக்கு ப்ரதமாசாரியர் நம்மாழ்வாரே யாவர்; இவர் தம் திருவாய் மொழியில், கீதையின் ஸாரப் பொருளை "நீர் நுமது என்றிவை வேர் முதல் மாய்த்து இறை சேர்மின் உயிர்க்கு அதன் நேர் நிறை இல்லே" என்ற ஒரு பாசுரத்தில் கடுகைத் துளைத்து கடலை மடுத்தாற் போல் சுருக்கி அருளியிருக்கிறுர்.

**இதம் தே நாதபஸ்காய நாபக்தாய கதாசந |**
**ந சாசுச்ரூஷவே வாச்யம் ந ச மாம் யோZப்யஸூயதி || 67**

க்ருஷ்ணன் வளர்ந்தருளும் காலத்தில் எல்லோரும் பீஷ்ம த்ரோணாசார்யர்களையே ஞானவான்களாகக் கருதி, அவர்களையே ஆசார்யர்களாகப் பற்றினார்கள். க்ருஷ்ணனை எவரும் ஆசார்யனாகப் பற்றவில்லை. இது அவனுக்கு பெருங்குறையாக இருந்தது. 'சிஷ்யஸ் தேஹம் சாதிமாம் த்வாம் ப்ரபந்நம்' என்று சொல்லி அர்ஜுனன் க்ருஷ்ணனைப் பற்றின உடனே, நமக்கு ஓர் சிஷ்யன் கிடைத்து விட்டானே, நாம் ஓர் ஆசார்யனாக ஆகிவிட்டோம் என்கிற சந்தோஷத்தினால் அரிய பெரிய சாஸ்திரார்த்தங்களை யெல்லாம் கீதா உபதேச மூலம் வாரி இறைத்து விட்டான். ஆனால் சொல்லி முடித்த உடன் அவன் மனம் முறைகெடச் சொல்லி விட்டோமோ என்று பதண் பதண் என்று அடித்துக் கொண்டது; உடனே அர்ஜுனனைப் பார்த்து அர்ஜுன! என் உபதேசம் மிக மிக உயர்ந்த சாஸ்திரம், மிக ரஹஸ்யமானது; என்னிடம் பக்தி யில்லாதவர்க்கோ என்னிடம் அஸூயை இருப்பவர்களுக்கோ, மற்றும் இதைக்கேட்க விரும்பாதவர்களுக்கோ, இந்த சிறந்த சாஸ்திரத்தைச் சொல்லக் கூடாது என்கிறான்.

ய இதம் பரமம் குஹ்யம் மத்பக்தேஷ்வபிதாஸ்யதி |
பக்திம் மயி பராம் க்ருத்வா மாமேவைஷ்யத்யஸம்சய: || 68

ந ச தஸ்மாந் மநுஷ்யேஷு கச்சிந் மே ப்ரியக்ருத்தம: |
பவிதா ந ச மே தஸ்மாத் அந்ய: ப்ரியதரோ புவி || 69

அத்யேஷ்யதே ச ய இமம் தர்ம்யம் ஸம்வாதம் ஆவயோ: |
ஜ்ஞாநயஜ்ஞேந தேநாஹம் இஷ்டஸ்யாமிதி மே மதி: || 70

ச்ரத்தாவாந் அநஸூயச்ச ச்ருணுயாதபி யோ நர: |
ஸோऽபி முக்த: சுபாந் லோகாந் ப்ராப்நுயாத் புண்யகர்மணாம் || 71

மிக ரஹஸ்யமான இந்த கீதாசாஸ்திரத்தின் உண்மைப் பொருளை தெளிவாக என் பக்தர்களுக்கு, எவன் எடுத்துச் சொல்லுகிறானோ, அவனுக்கு என்னிடம் பக்தி உண்டாகி என்னையே அடைவான் என்பதில் சந்தேஹமேயில்லை.

அவனைவிட மேலான ப்ரியன் எனக்கு மண்ணிலுமில்லை; விண்ணிலுமில்லை எவன் இந்த உயர்ந்த தர்மமான நம் இருவரின் ஸம்வாத ரூபமான கீத சாஸ்திரத்தை, பாராயணம் செய்கிறானோ—

(ச்ரத்தையுடன் படிக்கிறானோ), அவன் சிறந்த ஜ்ஞான ஜ்ஞானத்தி னால் என்னை ஆராதித் தவனாகிறான் என்பது எனது கருத்து.

சிரத்தையுடன் என்னிடம் அஸூயை யில்லாமல் இந்த கீதா சாஸ்திரத்தைக் கேட்பவன் பக்திக்குத் தடையான எல்லாப் பாவங் களிலிருந்தும் விடுபட்டு, என் பக்தர்களில் ஒருவனாகிறான்.

கச்சித் ஏதத் ச்ருதம் பார்த்த த்வயைகாக்ரேண சேதஸா |
கச்சித் அஜ்ஞானஸம்மோஹ: ப்ரநஷ்டஸ்தே தநஞ்ஜய ॥ 72

அர்ஜுனா! என்னால் சொல்லப்பட்ட இந்த சிறந்த சாஸ்திரத்தை கவனமாய்க் கேட்டு, அறிந்தாயல்லவா! போர் செய்யேன் என்று, உன் அறிவின்மையினால் சொன்ன உன் மயக்கம் இப்போது, உனக்குத் தெளிந்து விட்ட தன்றோ!

நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர் லப்த்தா த்வத்ப்ரஸாதாந் மயாऽச்யுத |
ஸ்த்திதோऽஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே வசநம் தவ ॥ 73

க்ருஷ்ண! உன் அருளினால் என் அறியாமை நீங்கி, எனக்கு சரி யான அறிவு உண்டாயிற்று; ஐயம் எல்லாம் தீர்ந்தது. எனக்குரிய க்ஷத்திரியத் தன்மை எழுச்சியுற்றது! உன் சொல்படி நான் போர் புரிவேன் என்கிறான் அர்ஜுனன்.

ஸஞ்சய உவாச— ஸஞ்ஜயன் கூறியது.

இத்யஹம் வாஸுதேவஸ்ய பார்த்தஸ்ய ச மஹாத்மந: |
ஸம்வாதமிமம் அச்ரௌஷம் அத்புதம் ரோமஹர்ஷணம் ॥ 74

வ்யாஸப்ரஸாதாத் ச்ருதவாந் ஏதத் குஹ்யம் அஹம் பரம் |
யோகம் யோகேச்வராத் க்ருஷ்ணாத் ஸாக்ஷாத் கதயத: ஸ்வயம் ॥ 75

ராஜந் ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ஸம்வாதம் இமம் அத்புதம் |
கேசவார்ஜுநயோ: புண்யம் ஹ்ருஷ்யாமி ச முஹுர்முஹு: ॥ 76

த்ருதராஷ்ட்ர மன்னனே! இந்த ஆச்சர்யமான க்ருஷ்ணார்ஜுன ஸம்வாதத்தை நான் நேரில் கேட்டு, இது வரையில் உமக்குச் சொன்னேன்.

வியாஸரின் அருளினுல் இந்த மேலான ரஹஸ்யத்தை, ஸகல கல்யாண குணங்களுக்கும் இருப்பிடமான க்ருஷ்ணன் தானே சொல்ல நான் நேரில் கேட்டேன்.

அரசே! ஆச்சர்யமான இந்த புண்யமான க்ருஷ்ணுர்ஜுன சம்பாஷணையை, நினைத்து நினைத்து நான் மிக சந்தோஷமடைகிறேன்.

**தச்ச ஸம்ஸம்ருத்ய ஸம்ஸ்ருத்ய ரூபம் அத்யத்புதம் ஹரே: |**
**விஸ்மயோ மே மஹாந் ராஜந் ஹ்ருஷ்யாமி ச புந: புந: || 77**

மஹாராஜனே! அவ்விருவரின் உரையாடலுக்கு மேல் பகவானின் விச்வரூபத்தை வியாஸரின் அருளினுல், என் கண்களால் கண்ட நான் அதை நினைத்து, நினைத்து மகிழ்ந்து வியந்து மகிழ்கிறேன்.

ஸ்ரீ க்ருஷ்ணன் அர்ஜுனனுக்குத் தெளிவை உண்டாக்கினுன்; அர்ஜுனன் தன் காண்டீபத்தைக் கையில் எடுத்து விட்டான்; இனி க்ருஷ்ணனின் அருள் பெற்ற அவர்களுக்கே வெற்றி நிச்சயம்; என்று தெளிவாக ஸஞ்சயன் த்ருத்ராஷ்ட்ரனுக்குச் சொன்னுன்.

**யத்ர யோகேச்வர: க்ருஷ்ணோ யத்ர பார்த்தோ தநுர்த்தர: |**
**தத்ர ச்ரீர் விஜயோ பூதி: த்ருவா நீதிர்மதிர்மம || 78**

சேதனுசேதன ஸ்வரு பஸ்திதி ப்ரவர்த்தியை நடத்திச் செல்லும் க்ருஷ்ண பகவான் (உலகம் யாவையும் தாமுள வாக்கலும் நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா விளையாட்டுடையன்) எந்த பக்கத்திலிருக்கிருனே சூரனும், சிறந்த வில்லாளியுமான அர்ஜுனன் தன் காண்டீபத்தை ஏந்தி எந்தப் பக்கத்திலிருக்கிருனே அந்தப் பக்கத்தில் தான் வெற்றி செல்வி விளங்குகிருள். அங்குதான் நீதியும், கொற்றமும், வெற்றியும், ஆளும் திறமையும் நிலை பெற்று இருக்கும் என்பது எனது திடமான கருத்து.

"தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே......கிம்அகுர்வத ஸஞ்சய" என்ற த்ருத்ராஷ்டிரன் கீதை ஆரம்பத்தில் கேட்ட கேள்விக்கு, ஸஞ்சயன் இந்த கீதா சாஸ்திர இறுதி சுலோகத்தில் க்ருஷ்ணனும் அர்ஜுன னும் இருக்கும் பக்கத்தில் விஜயஸ்ரீயும் நீதியும் நிலைத்திருக்கிறது என்று பதில் சொல்லுகிறுன்.

ஸகல உபநிஷத் ஸாரமான க்ருஷ்ணார்ஜுன ஸம்வாத ரூபமான கீதா சாஸ்திரம் முற்றிற்று.

## ஸ்ரீஆளவந்தார் அருளிச் செய்த கீதார்த்த ஸங்க்ரஹம்

ஈச்வரே கர்த்ருதா புத்தி:ஸத் வோபா தேயதாZந்திமே
ஸ்வ கர்ம பரிணுமச்ச சாஸ்த்ர ஸாரார்த்த உச்யதே

ஸர்வேச்வரனே ஸர்வ கர்த்தா என்கிற ஸாத்விக த்யாகத்வ மும், ஜ்ஞாந கர்ம ஸங்கங்களில் ஸாத்விகமே கொள்ளத் தக்கது என்பதும், அவைகளுக்குள்ள வர்ணாச்ரம தர்மமே ஸாத்விகமாகச் செய்தால் மோக்ஷம் வரையில் அவை சேர்ப்பிக்கும். பகவானைப் பெற சரமோபாயமும் இந்தக் கடைசி அத்யாயத்தில் சொல்லப் பட்டது.

ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே சரணம் !